# சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவம்

(கி. மு. 300 - கி. பி. 300)

# EDUCATIONAL PHILOSOPHY OF THE ANCIENT TAMILS OF THE CANKAM PERIOD

(B. C. 300 - A. D. 300)



சென்னைப் பல்கலைக்கழக
பிஎச். டி; பட்டத்திற்கென
அளிக்கப்படும் ஆய்வேடு

அளிப்பவர்
வெ. இராசசேகரன்

ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலய அ
கோயமுத்தூர்-641020

ஆகஸ்ட் — 1980.

டாக்டர் க. குழந்தைவேல், எம்.ஏ., எம்.ஏ. (ஓகியோ), பி.எச்.டி.,
ஆய்வு மேற்பார்வையாளர்,
ஆசிரியர் கல்லூரி,
ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம்,
கோயமுத்தூர் - 641 020.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்.

'சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவம்' (கி.மு. 300 - கி.பி. 300)' என்னும் தலைப்புள்ள இவ்வாராய்ச்சிக் கட்டுரை சென்னைப் பல்கலைக் கழகத்தில் பிஎச்.டி., பட்டம் பெறுவதற்காக என் மேற்பார்வையில் இராமகிருஷ்ண மிஷன் வித்யாலய ஆசிரியர் கல்லூரி ஆராய்ச்சி மாணவர், பெ. இராசசேகரன் 1974 டிசம்பர் முதல் 1980 ஜூன் வரை ஆய்வு நிகழ்த்தி எழுதியதாகும். இவ்வாராய்ச்சிக் கட்டுரை வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அடிப்படையாக அமையவில்லை என்பதற்கும் இஃது இவருடைய தனி முயற்சியின் பயன் என்பதற்கும் யான் சான்றிதழ் வழங்குகின்றேன்.

க. குழந்தைவேல்
5.8.80

கோயமுத்தூர்-641020,
5.8.1980.

(க. குழந்தைவேல்),
ஆய்வு மேற்பார்வையாளர்.

திரு. வெ. இராசசேகரன், எம்.ஏ, எம்.எட்.,
ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலய ஆசிரியர் கல்லூரி,
கோயமுத்தூர்-641020.

கோயமுத்தூர்,
5.8.1980.

## உறுதிமொழி

'சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவம்' என்ற தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழக பிஎச்.டி., பட்டத்திற்கெனச் செய்யப்பட்டுள்ள இவ்வாராய்ச்சி என் முயற்சியில் உருவானது என்றும், இவ்வாய்வுக் கட்டுரை வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அடிப்படையாக அமையவில்லை எனவும் உறுதியளிக்கின்றேன்.

(வெ. இராசசேகரன்)

ஒப்புதல் கையொப்பம்

(க. குழந்தைவேல்)
ஆய்வு மேற்பார்வையாளர்.

## உள்ளுணர்வுரை.

'சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவத்தை' ஆயப்புகுந்த இக்குறு முயற்சியில் வித்தூன்றியவர் மறைத்திரு ப.சு. மணியம் அவர்.

'தமிழ்த்தந்தை' என்ற ஏற்றத்திற்குரிய — சாந்தியண்ணலின் வலக் கரமாகிய 'ஐயா' அவர்களின் கல்விப் பெரும் பணியைத் தொடர்ந்து செயற் படுத்தி வரும் கர்ம வீரன் — 'ஒரே மனிதன்' என யான் மதித்தொழுகும் அன்பு வழிகாட்டியாம் திரு. கே. குழந்தைவேலின் அளப்பரும் கனிவால் இவ்வாய்வு வளராயிற்று.

களை கடிய பெருமை திரு. விசுவேசுவர அண்ணாவுக்கும், திரு.பெரோஸ் அண்ணாவுக்கும் உரித்து.

பல்வகையானும் ஊக்குவித்து உரிய நெறி காட்டிச் செல்கென விடுத்த செல்வி வேதநாயகத்தை — சென்னைப் பல்கலைக்கழகக் கல்வித் துறைத் தலைவரை — மறத்தல் இயலாது.

இவ்வாயில் மட்டுமன்றி அடிப்படைப் பட்டத் தகுதி பெறச் செய்தது முதல் என்றும் என் உள்ளத்தில் உறையும் திரு. கிருஷ்ணமூர்த்தியும் உற்றுழி எல்லாம் உதவி கொண்டே இருக்கும் திரு. இராமசாமியும் கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடையர்.

எழுத்தால் உரைக்கப்படாத இயல்பிடத்தோரும் உதவிகள் செய்த 'அண்ணா'க்கட்கு, 'தம்பி'கட்கும் என் நெஞ்சத்தில் இடம் உண்டு.

இப்படிக்கு

கோயமுத்தூர் - 18,
5.8.1980.

(வெ. இராசசேகரன்)

## குறுக்க விளக்கப்பட்டியல்.

| | | |
|---|---|---|
| தொல் | .. | தொல்காப்பியம். |
| குறள் | .. | திருக்குறள் |
| நற் | .. | நற்றிணை |
| குறு | .. | குறுந்தொகை |
| ஐங் | .. | ஐங்குறுநூறு |
| பதி | .. | பதிற்றுப் பத்து |
| பரி | .. | பரிபாடல் |
| கலி | .. | கலித்தொகை |
| அகம் | .. | அகநானூறு |
| புறம் | .. | புறநானூறு |
| திரு | .. | திருமுருகாற்றுப் படை |
| பொரு | .. | பொருநராற்றுப் படை |
| பெரு | .. | பெரும்பாணாற்றுப் படை |
| சிறு | .. | சிறுபாணாற்றுப் படை |
| முல்லை | .. | முல்லைப் பாட்டு |
| மது | .. | மதுரைக் காஞ்சி |
| நெடு | .. | நெடுநல்வாடை |
| குறி | .. | குறிஞ்சிப் பாட்டு |
| பட் | .. | பட்டினப் பாலை |
| மலை | .. | மலைபடுகடாம். |

| | | |
|---|---|---|
| சில | .. | சிலப்பதிகாரம் |
| மணி . | .. | மணிமேகலை |
| சி.பா. | .. | சிறப்புப் பாயிரம் |
| பொ.பா | .. | பொதுப் பாயிரம் |
| பரிமே | .. | பரிமேலழகர் |
| நச் | .. | நச்சினார்க்கினியர். |
| உ.வே.சா. | .. | உ.வே.சாமிநாதையர். |
| ப.சு. | .. | ப.சு.மணியம். |
| ப. | .. | பக்கம். |
| கழகம். | .. | திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| தமிழர் | .. | கடைச் சங்க காலத்தமிழர். |

உள்ளுறை.

CONTENTS

# 1. முன்னுரை

## 1-0: 'சங்க காலத் தமிழரின் (கி.மு.300-கி.பி.300) கல்வித் தத்துவம்' பற்றிய ஓர் ஆய்வு இது:

ஆய்வாளர் கல்வி முதுகலையில் 'கல்விக் கருத்தின் வரலாறும் வளர்ச்சியும்' எடுத்துப் பயில்கின்ற காலத்து இவ்வாய்வாளரால் தமிழ் நாட்டு மடங்களின் கல்வி வளர்ச்சிப் பணி பற்றிய ஆய்வொன்று நிகழ்த்தப்பட்டது. அதன் தொடர்பாகத் தமிழர் வரலாற்றில் 'பொற்காலம்' எனப்படும் சங்க காலத்து மக்களிடையே நிலவிய கல்வி முறை பற்றி ஆய வேண்டும் என்ற எண்ணம் அரும்பியது. கல்வி முதுகலையில் கல்விக் கருத்தின் வரலாறும் வளர்ச்சியும் எடுத்துப் பயின்றமையும் தமிழ் முதுகலையில் 'சங்க இலக்கியத்தை' எடுத்துப் பயின்றமையும் இவ்வெண்ணத்திற்கு உறு துணையாய் அமைந்தன. மேலும் தமிழ் அறிஞர் கூற்றுக்களும் கல்வி அறிஞரின் கூற்றும் இவ்வாய்வுக்கும் எண்ணத்திற்கும் தூண்டல்களாக அமைந்தன.

## 1-1: தூண்டல்கள்:

'ஜெய்ரா. கோதை பிள்ளை' எழுதிய 'பழந்தமிழரின் கல்வி முறைகள்' என்ற நூலின் முன்னுரையில் மு.வரதராசனார் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

"பழந்தமிழர் இலக்கியத்தில், தமிழர் கல்வித் துறையில் மிக்க கவனம் செலுத்தினர் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு. இந்நூல் கல்வித் துறையில் ஈடுபடுவோர்க்கெல்லாம் நல்லதோர் தூண்டலையும் ஆர்வத்தையும் ஊட்டும் கருவியாக அமையும் என நம்புகிறேன்."[1]

எப்.ஈ.'கீ' என்பார் பின் வருமாறு கூறுகிறார்.

"பழந்தென்னகத்தில் தமிழ்ப் பண்பாட்டோடு தொடர்புடைய சிறந்ததொரு கல்வி முறை நிலவியது. அத்தகைய கல்வி முறையின் அமைப்பு யாது, அக்கல்வி எந்த அளவுக்குப் பரவியிருந்தது, சமூகத்தில் கல்வியின் ஆட்சி எவ்வாறு விளங்கியது போன்றவற்றிற்குச் சான்றுகள் கிடைக்கப்பெறவில்லை. எனவே கவனமிக்க தமிழறிஞரின் ஆய்வுக்குரிய பகுதியாக இஃது இன்றும் இருக்கிறது."[2]

எஸ்.சந்தானம் என்பார்,

"தனிச் சிறப்போடு உருப்பெற்று வளர்ந்த கல்வி முறை அன்று தமிழ் நாட்டில் பரவிக் காணப்பட்டது"[3] என்று சங்க இலக்கியக் கல்வி முறை பற்றிக் கூறுகிறார்.

வெள்ளை வாரணனார் குறிப்புக்களாவன.

"தமிழ் நாட்டில் அமைதியாய் வாழ்ந்த தமிழ் மக்கள் எப்பொருளையும் தடையின்றி எண்ணி அறியவும், உள்ளக் கருத்துக்களை உரிமையுடன் வெளியிட்டு உரைக்கவும், எத்தொழிலையும் தடையின்றிச் செய்து முடிக்கவும் வேண்டிய உரிமை உணர்வுடன் புகழ் பெற்று விளங்கினார்கள்."[4]

"தமிழ் வேந்தர் எல்லோரும் மக்களுக்குக் கண் என்று போற்றப்பட்ட கல்வித் துறையில் சிறந்த பயிற்சி உடையவராய் விளங்கினர்".[5]

வ.சுப.மாணிக்கம் என்பார்,

"சங்க காலத்துக் கல்வி முறை மாணக்கரின் உள்ளத்தே உயரிய நோக்கங்களை வளர்த்துச்சமூகத்திற்குப் பயன்படும் முறையில் அமைந்திருத்தல் வேண்டும் என நம்புகிறேன்",[6] எனக் கூறுகிறார்.

இக்கூற்றுக்களெல்லாம் ஒருங்கிணைந்து சங்ககாலத் தமிழ் மக்களின் கல்வி முறை பற்றி ஆய்வு நிகழ்த்த வேண்டும் என இவ்வாய்வாளர்க்குத் தூண்டல்களாக அமைந்தன.

"கல்வியின் குறிக்கோள் அறிவுபெறுதல், தொழில் செய்தல், ஒழுக்கம் பெறுதல், நாகரிகமடைதல், நிறைந்த வாழ்வு, ஆன்மீக வளர்ச்சி என அறிஞர் குறிப்பிடுவர்."[7]

ஆயின் கல்வியின் இக்குறிக்கோள் இன்றைய நிலையில் நிறைவேற்றப்பட்டுள்ளதா என்பது ஐயத்திற்குரியது. இவ்வையத்தை இந்தியக் கல்வி பற்றிய ஆய்வறிக்கை உறுதிப்படுத்துகிறது. இவ்வறிக்கையில் கண்டவற்றை 'கெவின் இராபர்ட்டி' என்பார் 12-5-1980 நாளிட்ட 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' நாளிதழில் 'இந்தியக் கல்வியும் பயனற்ற முதலீடும்' என்ற தலைப்பில் பின்வருமாறு தொகுத்தளிக்கிறார்.

இந்தியக் கல்வி பரவலான முறையில் மந்த நிலையில் நாட்டின் சிக்கல்களைத் தீர்க்க முடியாத நிலையில் பரவி உள்ளது என்பது உணரப்பட வேண்டிய பாடமாகும்.

படிக்காத வேலையற்றோரின் சிக்கல் படித்த வேலையற்றோரின் சிக்கலைவிடக் கொடுமையாக உள்ளது.

முன்னேற்றத்தின் ஆணிவேரான கல்வி மிகப் பின்தங்கிய நிலையில் உள்ளது.

கல்வியைத் தொடராதோர் எண்ணிக்கை மிக அதிக அளவில் காணப் படுகிறது.

எழுத்தறிவு பெற்றோர் தொகை ஏனைய முன்னேற்ற நாடுகளில் இந்தியா வைப்போல் இரு மடங்கும் மும்மடங்குமாக உள்ளது.

ஜப்பானில் இடைநிலைக் கல்வி கற்றோர் 75 விழுக்காடாம். ஆனல் இந்தியாவில் 25 விழுக்காடுதான்.

தற்கால இந்தியக் கல்வி 'ஆளுகின்ற உயர் இனத்தை' ( Ruling Elite ) உண்டாக்குதலாகவே உள்ளது.[8]

கற்பித்தலும் கற்றலும் நிறைவளிப்பதாக இல்லை.

மாணுக்கரின் நினைவாற்றலை மதிப்பிடும் தேர்வில் எரிமலையொன்று விளக்கப்பட்டது. இறுதியில் எரிமலையின் இருப்பிடம் பற்றிய வினாவிற்குத் தொழில் நாட்டவரில் 40 விழுக்காடும், சீனவில் 25 விழுக்காடும், ஈரானில் 20 விழுக்காடும் சரியாக விடையளித்தனர். ஆனல் இந்தியாவில் 18 விழுக் காடுதான் சரியான விடையளித்தனர்.

மற்ருெரு பொருளுணர் தேர்வில் இந்தியா அனைத்துலக நிலையில் அடிமட்ட நிலையையே பெற்றது.

ஆகவே கல்வி மீது மிக்க கவனம் செலுத்தி மிக்க பாடுபட்டாலன்றி

சைனு, தென்கொரியா, தைவான் முதலிய நாடுகளிலும் மிக இழிந்த நிலையை இந்தியா எதிர் நோக்க வேண்டியிருக்கும் எனக் கூறி முடிக்கிறார்.

இதனால் இந்தியச் சமுதாயம்—தமிழர் சமுதாயம்— கல்வியால் துய்க்க வேண்டிய பெரும் பயனுக்கு மாறுகச் சிறு பயனையே பெற்றுள்ளது என்பது உள்ளங்கை நெல்லியன்றோ?

## 1-2: அமைதியின்மை:

மனிதன் தன்னைப்பற்றியும் சமுதாய வளர்ச்சி பற்றியும் ஆய்ந்தது பாராது புற உலகு பற்றி நிகழ்த்துகின்ற ஆய்வும், அறிவியலின் தவறான போக்கும், அமைதியின்மைக்கு ஏதுவாம். ஈண்டு "மனிதனின் முதல் விரோதி மனிதனே"[9] என்ற அர்னல்டு டாயின்பீ'யின் கூற்றின் உண்மை உணரத்தக்கதாம். மிகப் பெரும் செலவு செய்தும் கல்வி வளர்ச்சி என்ற பெயரால் அறிவியல் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்தும் கல்வியின் பயனான அமைதி கிட்டிற்று?

## 1-3: நோக்கும் போக்கும் இயையாமை:

நோக்கும் அதற்கேற்ற போக்கும் அமைந்த கல்வி முறையே நலம் பயக்கும்.

தமிழர் கல்வி நோக்கமாவது அறிவும், அதனால் ஒழுக்கமும், சான்றாண்மையும் பெற்று நிறைந்த வாழ்வு வாழ்தலேயாம். இம்மைக்கும், மறுமைக்கும் உரிய செம்மை வாழ்வுக் கேற்ற வாழ்வியல் கல்வியே தமிழர்தம் குறிக்கோளாம். அந்நோக்கிற்கேற்ற சீரிய வாழ்க்கை நடத்தினர் என்பதைத் தமிழ் இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. இவ்வாறான அமைதியோடு கூடிய நல்வாழ்வு அமைதற்கேதுவான அவர்தம் கல்வி நோக்கும் போக்கும் அமைந்திருக்கக் கூடும் என்ற யூகம் பிறக்கிறது.

ஆயின் தமிழர்தம் தற்காலக் கல்விப் போக்கு — இந்தியக் கல்விபோக்கு— "ஆளுகின்ற உயர் இனத்தை" ( Ruling Elite ) உண்டாக்குவதாக உள்ளது.[10]

அஃதாவது தற்காலத் தமிழர்தம் கல்வி, ஆங்கில ஆட்சி கடைபிடித்த போக்கிலேயே செல்கின்றமையின் நோக்கும் போக்கும் இயையாது நின்று அமைதியின்மைக்கு வழி கோலுவதாயிற்று.

1-4; ஆங்கிலக் கல்வி நோக்கு:

வாழ்தல் வேண்டி இந்தியாவுக்குள் நுழைந்த ஆங்கிலேயர் படிப்படியாக முன்னேறி அரசியலில் சிறப்பு நிலை எய்தி ஆட்சியை அமைத்துத் தம் கல்வித் திட்டத்தை இந்தியாவில் புகுத்தினர். கிரேக்கத்திலிருந்து பிறந்த அடிமை ஆண்டான் கல்வித் திட்டம் ஆங்கிலேயர் முறையில் சிறப்புற்று விளங்கியது. அவர்தம் அடிமையாண்டான் நோக்குக்கு ஏற்ற கல்வித் திட்டத்தைத் தமிழரிடமும் புகுத்தினர். ஆங்கிலேயர் கல்வித் திட்டத்தை 'மெக்காலே குறிப்பு' பின் வருமாறு கூறுகிறது.

"ஆள்வோராகிய நமக்கும் ஆளப்படுவோராகிய பல்லாயிரக்கணக்கான இந்தியருக்கும் இடையே இவ்விருவரையும் இணைக்கும் ஒரு புதிய இனத்தை உண்டாக்க வேண்டும். இந்த உறவை ஏற்படுத்தும் புதிய பிரிவினர் இரத்தத்திலும் நிறத்திலும் இந்தியராக இருத்தல் வேண்டும். ஆனால் விருப்பத்திலும் எண்ணத்திலும் ஒழுக்கத்திலும் அறிவிலும் ஆங்கிலேயராக அமையவேண்டும்."[11]

1835-ல் குறிக்கப்பட்ட மெக்காலே குறிப்பினுள் ஆள்வோராகிய ஆங்கிலேயருக்கும் ஆளப்படுவோராகிய இந்தியருக்கும் இடையிலே இவரை இணைக்கும் புதிய இனமொன்று உண்டாக்கத் தொடங்கியது. இந்தியக் கல்வி முறையின் போக்கு — தமிழர் கல்விப் போக்கு — பழமையான அறநெறிப் போக்கினைக் கைவிட்டு ஆங்கிலப் போக்கினை மேற்கொண்டதால் இந்தியாவில் — தமிழகத்தில்— அமைதியின்மையும் அதன் ஏதுவாகப் போராட்டங்களும் தோன்றலாயின.

1-5: பொற்காலங்கள்:

உலக வரலாற்றில் கூறப்படுகின்ற பொற்காலங்களும் தமிழர் வரலாற்றில் கூறப்படுகின்ற பொற்காலமும் எண்ணுதற்குரியன. பெரிக்கிளியஸ் பொற்காலம், சீசர் பொற்காலம், அக்பர் பொற்காலம், குப்தர் பொற்காலம் எனக் கூறப்படுதல் போல் தமிழரிடையேயும் சங்ககாலம் பொற்காலம் எனக் கூறப்பட்டது.

ஏனைய பொற்காலங்கள் அரசர் பெயரால் குறிப்பிடப்பட்டிருக்க தமிழரின் பொற்காலம் சங்க காலம் எனக் குறிப்பிடப்படுகிறது. சங்கம் என்பது யாது? கற்றறிந்த புலவர் பலர் பல்லாண்டுக்காலமாகக் கூடிப் புதிய சொல் கூட்டு உண்ட அமைப்பேயாகும். தொடக்கக் காலத்தில் 'தமிழ்நிலை', 'கூடல்', 'கழகம்' போன்ற பல்வேறு பெயர்களில் விளங்கி வந்த இவ்வமைப்பே கி.பி. ஐந்தாம் நூற்றுண்டுக்குப் பிறகு 'சங்கம்' என்ற பெயர் கொண்டு வழங்குவதாயிற்று. புத்த சமயத்தில் அமைந்த சங்கம் என்ற சொல்லும் சமண சமயத்தில் அமைந்த திராவிட சங்கமும் போலத் தமிழருக்கும் அமைய வேண்டும் என்ற ஆர்வத்தால் 'தமிழ் நிலைக்கு, 'தமிழ்ச் சங்கம்' என்ற பெயர் அமையலாயிற்று. உலகமெல்லாம் அரசர் பெயரால் பொற்காலங்கள் அமைந்திருக்கத் தமிழ் நாட்டில் மட்டும் கல்வி அறிஞரின் குழு ஆகிய சங்கத்தின் பெயரால் சங்க காலம் என வழங்கப்பட்டமை ஒன்றே தமிழரிடையே உயரிய கல்வி முறையும் அதற்கேற்ற வாழ்வு முறையும் அமைந்திருத்தல் கூடும் என்ற எண்ணத்தை அமைத்தது.

## 1-6: கருதுகோள்:

சங்க காலத் தமிழர் கல்வி, கலை, நாகரிகம், பண்பாடு, மிகுந்து அகம் புறம் ஒழுக்கம் பேணி, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தனர். அத்தகைய சீரிய வாழ்வுக்கு வழிகாட்டி அவர்தம் கல்வியே என்ற பேருண்மை சங்க நூல்களிலிருந்தும் சான்றோர் தம் வாழ்விலிருந்தும் பெறப்படும்.

எனவே அத்தகைய செம்மை வாழ்வை அமைத்துக் கொள்வதற்கு ஏதுவான கல்வியைப் பற்றிய தத்துவத்தைத் தமிழர் அமைத்துக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது இவ்வாய்வின் கருதுகோள்.

## 1-7: தலைப்பின் பொருண்மை:

சங்க காலம் என்பது யாது? அக்கால மக்களின் நாகரிக வாழ்க்கை எத்தகையது? அக்காலத் தமிழர் பற்றி அறியத் துணையாகும் நூல்கள்

யாவை? அத்தமிழர் தம் வாழ்வோடு இயைந்த கல்வி நோக்கங்கள் யாவை? அந்நோக்கத்தை அடையப் பயன்பட்ட கல்வித் தத்துவங்களான உள்ளீடு, முறை, ஆசிரியர்-மாணாக்கர், ஒழுக்கம், கல்வி நிலையம், நடைமுறைப்படுத்தல் முதலியன பற்றிய அறியப்படுவனயாவை? சங்ககாலத்து அமைந்திருந்த கல்வித் தத்துவம் யாது? இவற்றிற்கு விடையாக அமைவதே இவ்வாய்வாம்.

தமிழர் தம் கல்வித் தத்துவம் வாழ்வியல் தத்துவமாக அமைந்திருந்தது. கல்வியும், வாழ்வும் இரண்டறக் கலந்திருந்தன. இம்மைக்கு மட்டுமின்றி மறுமைக்கும் உதவும் ஆற்றலைக் கல்வி பெற்றிருந்தது. வாழ்வே கல்வி, கல்வியே வாழ்வென அமைந்தது.

தமிழ் நூல்களுள், தற்கால நோக்கின்படி கல்வித் தத்துவமாகக் கருதப்படும் நோக்கு உள்ளீடு, முறை, முதலிய நிலைகளில் குறிப்பிடப்படவில்லை. வாழ்விலிருந்து பிரித்து செயற்படும் கல்வித் தத்துவம் இன்றைய நிலையினதாகும்.

தமிழர் கல்விமுறை வாழ்வுடன் பிணைந்து, அமைந்திருந்தமையால் பரவிக் காணப்படுகின்ற கல்வி பற்றிய செய்திகளைத் தொகுத்தும் தற்காலக் கல்வித் தத்துவ நோக்கில் பகுத்தும், பிரித்தும், கூறவேண்டிய முறையை ஆய்வாளர் மேற்கொள்ளுகிறார்.

'சுருங்கச் சொல்லல்', முதலிய அழகுகளுடன் 'குன்றக் கூறல்' முதலிய குற்றங்களை நீக்கி 'நுதலிப் புகுதல்' முதலிய உத்திகளைக் கையாண்டு தொகுத்தும், பகுத்தும் செல்லும் அமைப்பு முறைகளைக் கொண்ட தொல்காப்பியம், குறள், பத்துப் பாட்டு போன்ற நூல்அமைப்புக்களையே வழிக் கருவியாகக் கொண்டு ஆய்வாளர் ஆய முற்படுகிறார்.

முதுமொழி நீராப் புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர[12]

என்ற பகுதியால் அன்றும் ஆய்வுக்கல்வி சிறப்புற்று விளங்கியமை தெளிவு.

பழைய மரபினைக் காத்துப் புதுக்கருத்துக்களைப் புகுத்தி அறிந்து பயன் படுத்தும் ஆய்வு நிலை அன்று உண்டு என்பதை உணரலாம்.

ஆகவே, ஆய்வாளர் கல்விக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு ஆறுநூல்களிலும் திரட்டித் தொகுத்து, தற்காலத் தத்துவத்தில் கூறப்படும் பகுப்புகளுக்கு ஏற்ப நோக்கு, உள்ளீடு, என்றின்னவாறு பகுத்து ஆய முற்படுகிறார் அவ்வாய்வுக் கல்விக்கு அடிப்படையான சங்கம் பற்றிய செய்திகளை அறிவோம்.

## 1-8: சங்க காலம், சங்கங்கள்:

சங்க காலத்தைப் பற்றிப் பல அறிஞர் பலவிதமான கருத்துக்களைக் கூறுகின்றனர். சங்கங்கள் மூன்றெனவும் அவை முறையே தென் மதுரை, கபாட புரம், மதுரை ஆகிய இடங்களில் 9990 ஆண்டுகளில் 8298 புலவர்களைக் கொண்டு 197 அரசர்களின் ஆதரவால் பல் விதமான நூல்களை இயற்றிப் போற்றின எனும் இறையனார் களவியல்[1] கூறுகிறது. அவற்றுள் கடைச் சங்க காலம் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றனர்.

அட்டவணை-1. கடைச் சங்க காலவரையறை

| காலவரையறை | அறிஞர் |
|---|---|
| கி.பி. பத்தாம் நூற்றாண்டு | கால்டுவெல் |
| கி.பி. எட்டாம் நூற்றாண்டு | சாமிக் கண்ணு பிள்ளை |
| கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு | வெங்கையா |
| கி.மு.400 - கி.பி.200 | ச.கனகசபைப் பிள்ளை |
| கி.மு.400 - கி.பி.100 | பூரணலிங்கம் பிள்ளை |
| கி.மு.300 - கி.பி.200 | ஔவை துரைசாமிப் பிள்ளை |
| கி.மு.700 - கி.பி.200 | மு.வரதராசனார் |
| கி.மு.700 - கி.பி.200 | வெள்ளை வாரணன் |
| கி.மு.400 - கி.பி.200 | கா. சுப்பிரமணிய பிள்ளை |
| கி.மு.700- கி.பி.300 | மா. இராசமாணிக்கனார் |

இராச மாணிக்கனார் கூறிய காலக் கருத்தை ஆய்வாளர் இவ்வாய்வில் ஏற்றுச் செல்கிறார்.

"புறநானூறு முதல் மணிமேகலை இறுதியாக உள்ள சங்க நூல்கள் கி.பி.300–க்கு முற்பட்டவை என்று சொல்லலாம். இது சங்கத்தின் இறுதிக் கால எல்லையை உணர்த்துவது. தொல்காப்பியர் காலம் ஏறத்தாழ கி.மு.300 எனக் கொள்ளின் பலர் ஒப்புக் கொள்ளும் சங்கத்தின் காலம் ஏறக்குறைய கி.மு.300 – கி.பி.300 என்று சொல்லலாம். எனவே, சங்க காலம் என்பது ஏறத்தாழ 600 ஆண்டுகள் பரந்துபட்ட கால அளவை உடையது எனலாம்."[13]

சங்கம்:

மூன்று சங்கங்களில் கடைச் சங்கத்தையே பொதுவாகச் சங்கம் எனக் குறிப்பிடுகின்றனர். அக்கடைச் சங்கம் பற்றிய செய்திகள் ஈண்டு கூறப்படும்.

கல்வியை வளர்ப்பதற்கு என ஏற்படுத்தப்பட்ட அமைப்புக்களே சங்கங்கள் என்பவை. அவை ஊர் தோறும், நகர் தோறும், தலைநகர் தோறும் விளங்கின, ஆயினும் மதுரையில் விளங்கிய கடைச் சங்கமே 'சங்கம்' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற உயர் அமைப்பாக விளங்கியது. சங்கங்கள் பற்றிய அறிஞர்கள் கூற்றுக்கள் அறிதற்கு உரியன.

"சங்கம் என்பதற்குப் பொருள் புலவர் கூட்டம் என்பது; தமிழ் நாட்டுத் தலைநகரங்கள் சிலவற்றிலும் அங்கங்கே உள்ள சிற்றூர் பலவற்றிலும் தமிழ்ப் புலவர்களின் கூட்டங்கள் அப்பெயரோடு பண்டைக் காலத்திருந்தன என்று தெரிந்தாலும், மதுரையில் இருந்த கூட்டத்திற்கே அஃது இயற்பெயராக இருவகை வழக்குகளிலும் காணப்படுகிறது."[14]

"மூன்றும் சங்கம் மதுரையில் நிறுவப் பெற்றது. மதுரை சிறப்புமிக்க இடம். அதாவது கல்வி வளர்ச்சி முதலியவற்றிற்குரிய இடம் என்பதை அறியலாம்."[15]

"சங்கம் என்றால் கூட்டம், குழு, கழகம் என்பது பொருள்."[16]

"தமிழ்ச் சங்கத்திற்கு ஆதியில் ஏற்பட்ட பெயர் தமிழ்க் கழகம் என்பது".[17]

மதுரையில் சங்கம் இருந்தது என்பதற்குப் பல சான்றுகள் உண்டு.

தொல்லாணை நல்லாசிரியர்
புணர் கூட்டுண்ட புகழ் சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன் [18]

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின் [19]

தமிழ் கெழு கூடல் தண் கோல் வேந்தே[20]

முதுமொழி நீரா புலன் நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனை ர [21]

## 1-9: சங்கப் புலவர்களும், பாடல்களும்:

எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும் பாடிய புலவர்கள் 473 பேர். இவருடன் வள்ளுவர், இளங்கோவடிகள், தொல்காப்பியரைச் சேர்த்து 476 புலவர்களை எடுத்துக் கொண்டு ஆய்வாளர் ஆய்கிறார். (மணிமேகலை பாடிய சீத்தலைச் சாத்தனார் 473 பேருள் ஒருவராக அடங்கியமையின்)

| | | |
|---|---|---|
| பாட்டும் தொகையும் பாடிய புலவர்கள் | - | 473 பேர் |
| பாடல்கள் | - | 2279 |
| ஆசிரியர் பெயர் காணாப் பாடல்கள் | - | 102 |
| ஆகப் பாடல்களின் மொத்த எண் | - | 2381 [22] |

இத்துடன் தொல்காப்பியர், வள்ளுவர், இளங்கோ உட்பட

| | |
|---|---|
| ஆய்வுக்குரிய புலவர்கள் | 476 பேர் |
| ஆய்வுக்குரிய பாடல்கள் | 2381 |
| தொல்காப்பியம் | 1610 |
| திருக்குறள் | 1330 |
| சிலப்பதிகாரம் | 30 |
| மணிமேகலை | 30 |
| ஆக மொத்தப் பாடல்கள் | 5381 |

அட்டவணை-2. ஆய்வுக்குரிய நூல் அட்டவணை [23]

| நூல் | ஆசிரியர் | பாடல் |
|---|---|---|
| தொல்காப்பியம் | தொல்காப்பியர் | 1610 |
| திருக்குறள் | திருவள்ளுவர் | 1330 |
| **பத்துப் பாட்டு** | | |
| 1. திருமுருகாற்றுப் படை | நக்கீரர் | 1 |
| 2. பொருநராற்றுப்படை | முடத்தாமக் கண்ணியார் | 1 |
| 3. சிறுபாணாற்றுப் படை | நத்தத்தனார் | 1 |
| 4. பெரும்பாணாற்றுப்படை | உருத்திரங் கண்ணனார் | 1 |
| 5. முல்லைப் பாட்டு | நப்பூதனார் | 1 |
| 6. மதுரைக் காஞ்சி | மாங்குடி மருதனார் | 1 |
| 7. நெடுநல்வாடை | நக்கீரர் | 1 |
| 8. குறிஞ்சிப் பாட்டு | கபிலர் | 1 |
| 9. பட்டினப் பாலை | உருத்திரங் கண்ணனார் | 1 |
| 10. மலைபடுகடாம் | பெருங் கௌசிகனார் | 1 |
| 10 | 8 | 10 |

அட்டவணை-3. ஆய்வுக்குரிய நூல் அட்டவணை

| நூல் | புலவர் | பாடல் | ஆசிரியர் பெயர் காணாப் பாடல் |
|---|---|---|---|
| எட்டுத் தொகை 1. | | | |
| 1. அகநானூறு | 158 | 397 | 3 |
| 2. ஐங்குறுநூறு | 5 | 500 | .. |
| 3. கலித் தொகை | 5 | 150 | .. |
| 4. குறுந்தொகை | 203 | 390 | 10 |
| 5. நற்றிணை | 187 | 344 | 56 |
| 6. பதிற்றுப் பத்து | 8 | 80 | 6 |
| 7. பரிபாடல் | 13 | 20 | 13 |
| 8. புறநானூறு | 157 | 386 | 14 |

அட்டவணை-4. ஆய்வுக்குரிய நூல் அட்டவணை

| நூல் | ஆசிரியர் பெயர் | பாடல்கள் |
|---|---|---|
| சிலப்பதிகாரம் | இளங்கோ அடிகள் | 30 |
| மணிமேகலை | சீத்தலைச் சாத்தனார் | 30 |

இவருள் சேரநாட்டுப்புலவர்களாக 24 பேரும், சோழ நாட்டுப் புலவர்களாக 35 பேர்களும், பாண்டிய நாட்டுப்புலவர்களாக 90 பேரும் தொண்டை நாட்டுப்புலவர்களாக 9 பேரும் குறிப்பிடப் படுகின்றனர்.

முப்பது பெண்பாற்புலவர்களும் சேர்ந்து 154 பாடல்கள் பாடியுள்ளனர். அவற்றுள் ~~அதில்~~ ஔவையார் மட்டும் 33 பாடல்களைப் பாடியுள்ளார்.

### 1-10: ஆய்வுக்கு உதவும் நூல்கள்:

பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் அவற்றிற்கு முதலான தொல் காப்பியமும் வழியாகிய திருக்குறளும் சங்க காலத்தைத் தழுவிய சிலப்பதிகாரமும் மணிமேகலையும், ஆய்வுக்கு உதவும் நூல்களாக ஆய்வாளர் எடுத்துக் கொள்கிறார்.

#### தொல்காப்பியம்:

தமிழில் கிடைத்துள்ள நூல்களில் மிகப்பழமையானது. இதன் காலம் கி.மு. மூன்றும் நூற்றாண்டென்றும் முந்தியதென்றும் கூறுவர். இஃது இலக்கண நூல் மட்டுமன்று; வாழ்வியல் நூல்; பொருளியல் நூல்; இலக்கிய நூலும் ஆகும். ஆசிரியரான தொல்காப்பியர் முந்து எழுந்த நூல்களையெல்லாம் கண்டு ஆராய்ந்து இரு வகை வழக்குகளையும் உணர்ந்து நூல் செய்வாராயினர். எழுத்து, சொல் பொருள், என்ற மூன்று அதிகாரங்களையும் ஒவ்வோர் அதிகாரமும் ஒன்பது இயல் களையும் பெற்று மொத்தம் 27 இயல்களையும் 1610 நூற்பாக்களையும் கொண்டு விளங்குகிறது.

எழுத்ததிகாரம் (1) நூல்மரபு, (2) மொழி மரபு, (3) பிறப் பியல், (4) புணரியல், (5) தொகை மரபு, (6) உருபியல், (7) உயிர் மயங்கியல், (8) புள்ளி மயங்கியல், (9) குற்றியலுகரப் புணரியல் எனப் பொருள்களை உயிர், மெய், உயிர்மெய் என மூன்றாகப் பகுத்துப் பேசுகிறது.

சொல்லதிகாரம் (1) கிளவியாக்கம், (2) வேற்றுமை இயல், (3) வேற்றுமை மயங்கியல் (4) விளி மரபு, (5) பெயரியல், (6) வினை இயல், (7) இடை இயல், (8) உரி இயல், (9) எச்ச இயல் என ஒன்பது தாகக் கொண்டு பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என ஆறாகவும் உயர்திணை, அஃறிணை என இரண்டாகவும் ஆய்கிறது.

பொருளதிகாரம் (1) அகத்திணை இயல், (2) புறத்திணை இயல்,

(3) களவியல், (4) கற்பியல், (5) பொருளியல், (6) மெய்ப் பாட்டியல், (7) உவம இயல், (8) செய்யுளியல், (9) மரபியல் எனப் பகுத்து வாழ்வை அகம், புறம், என இரண்டாக ஆய்கிறது.

<u>உரையாசிரியர்:</u>

இளம் பூரணர், சேனாவரையர், பேராசியர், நச்சினார்க்கினியர், கல்லாடர், தெய்வச் சிலையார், முதலியோர் உரை எழுதியுள்ளனர்.

<u>காலம்:</u>

'தொல்காப்பியர் காலம் ஏறத்தாழ கி.மு.மூன்றும் நூற்றாண்டாம்.[24]

<u>திருக்குறள்:</u>

திருக்குறள் அறத்துப் பால், பொருட்பால், காமத்துப் பால், என்ற முப்பால்களாக அமைந்தது. அறத்துப் பால் 38 அதிகாரங்களையும், பொருட்பால் 70 அதிகாரங்களையும், காமத்துப் பால் 25 அதிகாரங்களையும் கொண்டது. ஒவ்வோர் அதிகாரத்தும் பத்துப் பாடல்கள் முறையில் மொத்தம் 1330 பாடல்கள் திருக்குறளில் உள்ளன.

"எல்லா நூல்களுள்ளும் நல்லன எடுத்துப் பொதுவாகக் கூறுதல் இவர்க்கு இயல்பு."[25]

அறம் பாடிற்றே ஆயிழை கணவ [26]
கடுகைத் துளைத்து எழ்கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள் [27]
வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட
தமிழ் நாடு [28]

போன்ற கூற்றுக்களால் குறளின் பெருமை விளங்கும். அறம், பொருள்,

இன்பம் வாயிலாக வீடு பேற்றுக்கு வழிகாட்டும் குறள் நிலத்திலே மக்கள் யாவரையும் விழுத்திணை மக்களாக மாற்றியமைத்து – சான்றாண்மை கொண்டோராக ஆக்குதற்கு வழிகாட்டியாகும்.

உரையாசிரியர்:

தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, பரிமேலழகர், பரிப்பெருமாள், காளிங்கர், மல்லர், திருமலையர் ஆகிய பத்துப் பேர் பழைய உரை செய்துள்ளனர். அதற்குப் பின்னர் அநேக உரைகள் எழுந்து கொண்டேயிருக்கின்றன என்றாலும் பரிமேலழகர் உரை யாவற்றிலும் சிறந்தது என்பது அறிஞர் கருத்தாகும்.

காலம்:

"திருக்குறளின் காலம் கி.பி. முதல் நூற்றாண்டென்பர்; சங்க காலத்தை ஒட்டிய நூலென்பர்".[29]

பத்துப் பாட்டு:

1. திருமுருகாற்றுப் படை: வீடு பெறச் சமைந்தான் ஓர் இரவலனை வீடு பெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப் படுத்தும் நோக்குடைத்து 317 அடிகளை உடைய இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

2. பொருநராற்றுப் படை: கரிகால் பெருவளத்தானைப் பாடியது. சோழ நாட்டு வளமும், கரிகாலனின் கொடையும், தமிழர் வாழ்வும் பேசப்படுகிறது. 248 அடிகளையுடைய இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

3. பெரும்பாணாற்றுப் படை: தொண்டைமான் இளந்திரையனைப்

பாடியது. பாணர், எயினர், மறவர், ஆயர், அந்தணர் வாழ்வியல் பேசப் படுகிறது. 500 அடிகளாலான இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

4. சிறுபாணாற்றுப் படை: நல்லியக் கோடனைப் பாடியது. நல்லியக் கோடனின் கொடைச் சிறப்புக்கள் பாடப்படுகின்றன. கடையெழு வள்ளல்களைப் பற்றிய குறிப்பு உண்டு. 269 அடிகளில் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

5. முல்லைப் பாட்டு: தலைவனுடைய போர்ப் பாசறை வருணனை, சுவையுடையது. 103 அடிகளாலான இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

6. மதுரைக் காஞ்சி: நெடுஞ்செழியனைப் பாடியது. வீடு பேற்றின் பொருட்டு நிலையாமையை அறிவுறுத்துவது. வஞ்சி அடிவிரவிய ஆசிரிய யாப்பினால் அமைந்த இந்நூல் 782 அடிகளைக் கொண்டது.

7. நெடுநல்வாடை: நெடுஞ்செழியனைப் பாடியது. தலைவன் தலைவியின் வாடைக்கால இயல்பும் பாசறைக் காட்சியும் பாடப்படுகின்றன. 188 அடிகளாலான இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

8. குறிஞ்சிப் பாட்டு: ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்குப் பாடியது. அகப் பொருள் விளக்கமும் 99 மலர்களும் பேசப் படுகின்றன. 261 அடிகளாலான இந்நூல் ஆசிரிய யாப்பினால் அமைந்தது.

9. பட்டினப் பாலை: திருமாவளவனைப் பாடியது. தலைவன் செலவழுங்கியதாக 301 அடிகளால் பாடப்பட்ட வஞ்சியடியும் ஆசிரியப் பாவும் கலந்த வஞ்சி நெடும்பாட்டாகும்.

10. மதுரைக்காஞ்சி: நன்னனைப் பாடியது. மலைவளம் குறவர் வாழ்வு, பண்ணின் திறம் பேசப்படுகிறது. 583 அடிகளாலான இந் நூல் ஆசிரிய யாப்புடையது.

எட்டுத் தொகை:

1. நற்றிணை: 400 பாடல்கள் உள. 187 புலவர்கள் பாடியுள்ளனர். 9–12 அடி அளவுடையன. அகப்பொருள்நூல்.

2. குறுந்தொகை: 400 செய்யுள்கள் உள. 203, புலவர்கள் பாடியுள்ளனர். 4–8 அடி அளவுடையன. காதல்நலம், கற்பு நலம் மிகப் பேசப்படுகின்றன.

3. ஐங்குறுநூறு: 500 பாடல்கள் உள. 5 புலவர்கள் பாடியுள்ளனர். 3–6 அடி அளவுடையன. உரிப்பொருள் சுவை உணர்த்தப்படுகிறது.

4. பதிற்றுப் பத்து: புறப்பாடல். முதல் பத்தும் இறுதிப் பத்தும் நீங்கலாக எட்டுப் பத்துக்களே கிடைத்துள்ளன. எட்டுப் புலவர்கள் பாடியுள்ளனர். சேரர் வரலாற்றைக் கூறும் வரலாற்று நூல்.

5. பரிபாடல்: 13 புலவர்கள் பாடியுள்ளனர். 22 பாடல்களே கிடைத்துள்ளன. பத்துப் பேர் இசை வகுத்துள்ளனர். மதுரை, வையை, திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலை என்பனவற்றின் பண்டைக்காலநிலையும் நாகரிகமும், தெய்வ வழிபாட்டுப் பழக்க வழக்கங்களும் உயர்ந்த தத்துவக் கருத்துக்களும் கூறப்படுகின்றன.

6. கலித் தொகை: 150 பாடல்கள் உள. பாடியவர் ஐந்து பேர். நாடக அமைப்புடையது. இதிகாச, புராணச் செய்திகள் பல உள.

7. அகநானூறு: 158 பேர் பாடியுள்ளனர். 13-31 அடி அளவினது. களிற்றியானை நிரை, மணிமிடைபவளம், நித்திலக் கோவை என மூன்று பிரிவுகளை உடையது. தமிழர் தம் அக வாழ்வு முறையை விளக்கும் வரலாற்றுச் செய்திகளை உடையதால்.

8. புறநானூறு: 400 பாடல்கள் உள. பாடிய புலவர்கள் 157 பேர். பண்டைத் தமிழருடைய கல்வி, கலை, நாகரிகம், பண்பாடு, அரசியல், வீரம், ஈகை, கொடை, நட்பு, குடி அன்பு, முதலியவற்றை விளக்குகின்றது; 2000 ஆண்டுகட்கு முற்பட்ட வரலாற்றுக் கருவூலம்.

சிலப்பதிகாரம்:

அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதும்
சூழ்வினைச் சிலம்பு காரணமாகச்
சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்.[30]

எனப்பாடித் தண்டமிழ் ஆசான் சாத்தனார்முன் இளங்கோவடிகள் அரங்கேற்றினார்.

புகார், மதுரை, வஞ்சி, என்ற மூன்று காண்டங்களையும் 30 காதைகளையும் கொண்டது.

சேர, சோழ, பாண்டிய நாடுகள் பற்றியும், அவற்றை ஆண்ட வேந்தர்கள் பற்றியும், மக்களின் பழக்க வழக்கங்கள் பற்றியும், நாகரிகம் பற்றியும் கூறுகின்றது. முத்தமிழ்க் காப்பியமான இது குடிமக்கள் காப்பியம் எனவும் நாடகக் காப்பியம் எனவும் வழங்கப் பெற்றது.

தமிழ் நாட்டின் அந்நாளைய தமிழரின் கல்வி, கலை, நாகரிகம், சமுதாயம், அரசியல், இசை, நாட்டியம், தெய்வ வழிபாடு, முதலிய பல செய்திகளை அறிதற்குத் துணை செய்யும் அரிய நூல். இரட்டைக் காப்பியங்களுள் ஒன்று இது; மற்றொன்று மணிமேகலை.

<u>மணிமேகலை:</u>

இயற்றியவர் மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார். பௌத்த மதக் காப்பியம். சமயக் கருத்துக்கள் மிக்க ஆழமான நூல். முதல் தமிழ் சமயக் காப்பியம். மது ஒழிப்பு, பரத்தை ஒழிப்பு, இக்காப்பியத்தின் நோக்கமாகும்.

<u>துணை நூல்கள்:</u>

கல்வி பற்றியும், தத்துவம்பற்றியும் பிறர் வரைந்த நூல்களும் மேற்குறிப்பிட்ட நூல்களும் அவற்றின் சில மொழி பெயர்ப்பு நூல்களும் ஆய்வு நூல்களும் துணையாகக் கொள்ளப்படும்.

<u>உரைகள்:</u>

மேற்கண்ட நூல்களுக்கு உரையாசிரியர்களாக விளங்கும் இளம்பூரணர், சேனாவரையர், பரிமேலழகர், துரைசாமிப்பிள்ளை, வேங்கடசாமி நாட்டார், உ.வே.சாமிநாதையர், பெருமழைப் புலவர், நாராயணசாமி ஐயர் முதலியோர் உரைகள் துணையாக எடுத்துக் கொள்ளப்படும்.

<u>1-11 வரையறைகள்:</u>

<u>சங்க காலம்:</u> கடைச் சங்க காலம் என்றும் சங்க காலம் என்றும் குறிப்பிடப்படும் காலத்தை கி.மு.300 - கி.பி.300 என ஆய்வாளர் ஏற்றுச் செல்கிறார்.

<u>தமிழர்:</u> தமிழகத்தின் தெற்குப் பகுதியில் ஆதியில் வாழ்ந்து அப்பெருநிலப்பரைப்பைப் ப∴றுளியாற்றுடனும் பன் மலை, அடுக்கத்துடனும், குமரிக்கோட்டுடனும், கொடுங்கடல் கொள்ள வடக்கு நோக்கி வந்து மதுரை, வஞ்சி, புகார், முதலிய பெரு நகரங்களை அமைத்துக் கொண்டு கல்வி, கலை, நாகரிகம், பெற்று வாழ்ந்த பழங்குடியினர்.

<u>கல்வி:</u> உள்ளத்துள்ளே உறைந்து கிடக்கும் உயர் தன்மைகளை வெளிக் கொணரச் செய்து, தன்னையும், பிறரையும் இம்மையில் செம்மையோடு வாழச் செய்து, சான்றோராகச் செய்தற்கும் அச்செம்மையின் பயனாக யான், எனது, என்னும் பற்றுக்களை நீக்கி வாலறிவனுடைய நற்றுளினைப் பற்றுதற்கும் உதவி உயிருடன் தொடர்ந்து செல்லும் கருவியாகும். அறம், பொருள், இன்பம், வீடு பயக்கும் கருவியே கல்வி ஆகும்.

<u>தத்துவம்:</u> உயிரின் அவா; அறிவார்வம்; மனிதன் தன்னைப் பற்றியும் தான் வாழும் உலகுபற்றியும், எதிர் காலஎண்ணம் பற்றியும், உள்ளவைற்றின் உண்மை பற்றியும், நிலையிலா உலகில் நிலைத்த வாழ்வு பற்றியும், வழி காட்டும் கருவி; வாழ்வு பற்றிய ஒரு பார்வை; எல்லா வினாக்களுக்கும் ஏன் என்ற வினாவுக்கும் விடையளிக்கும் ஒரே பகுதி; வாழ்வில் மலரும் உயரிய கோட்பாடுகளின் பார்வையே தத்துவமாம்.

<u>கல்வித் தத்துவம்:</u> காண்டல், கேட்டல், ஆகியவற்றால் பெறப்படும் மெய்யறிவின் நாட்டமே தத்துவம் என மேற்கண்டவற்றால் அறியலாம். அம்மெய்யறிவைப் பெறுதற்குக் கல்வியே கருவியாகலின் கல்வித்தத்துவம் என்பதைப் பின் வருமாறு வரையறுக்கலாம்.

அறிவு – மெய்யறிவு – பெறுதற்குக் கருவியாகிய கல்வி செய்ய வேண்டிய பணியின் கூறுபாடுகளை வரையறுப்பதே கல்வித் தத்துவம்.

இக்கருத்தினையே இன்றைய கல்வி இயலார் நோக்கு, உள்ளீடு, முறைகள் முதலியனவாக விளக்கிக் கூறுவர்.

"கல்வித் தத்துவம் என்பது கல்வியின் நோக்கம், கல்வித் திட்டம், கற்றல், கற்பித்தல், முறைகள், ஆசிரியர், தயாரிப்பு, அளவிடுதல், முதலிய வற்றையும் வாழ்வு எண்ணங்களையும் அடிப்படையாகக் கொண்டது,"[31] என்று தாமஸ் குறிப்பிடுகிறார்.

ஆகவே கல்வித் தத்துவம் என்பது மெய்யறிவு பெறுதற்குக் கருவியாகிய கல்வி செய்ய வேண்டிய பணியின் கூறுபாடுகளான நோக்கம், உள்ளீடு, கற்றல் கற்பித்தல் முறைகள், ஆசிரியர் மாணக்கர், ஒழுக்கம், முதலியவை பற்றிக் கூறும் பகுதியாம்.

<u>1-12: ஆய்வின் அமைப்பு:</u>

7 இயல்களாக ஆய்வு அமைகிறது.

இயல் - 1: முன்னுரை

இயல் - 2: தொடர்புடை இலக்கியம்.

இயல் - 3: ஆய்வியல் முறை

இயல் - 4: பண்டைய கல்வி அமைப்புக்கள்-சில.

இயல் - 5: தமிழர் கல்வியின் தத்துவப் பின்னணி

இயல் - 6: தமிழர் கல்வித் தத்துவம்

இயல் - 7: முடிவுரை

இயல் 1-ல் தலைப்பும் எல்லைகளும், சிறப்பயனும், அமைதியின்மையும் அதற்கு ஏதுவான நோக்கும் போக்கும் இயையாமையும், ஆங்கிலக் கல்வி நோக்கும் போக்கும், தமிழர் பொற்காலமும், கருதுகோளும் சங்கமும்

சங்கப் புலவர்களும் பாடல்களும் ஆய்வுக்கு உதவும் நூல்களும் வரையறைகளும் ஆய்வு அமைப்பும் இடம் பெறுகின்றன.

இயல்–2–ல் காலந்தொறும் கல்வி நோக்கும், கல்விக் குழுக்களும் அவற்றின் திட்டங்களும், கல்வி பற்றியும், கல்வித் தத்துவம் பற்றியும், வெளி வந்துள்ள அறிஞரின் பிற ஆய்வுகளும் இடம் பெறும்.

இயல் 3–ல் தமிழர் தந்த ஆய்வுமுறைகளும், மேலைநாட்டார் ஆய்வு முறைகளும் இவ்வாய்வாளருக்குரிய ஆய்வு முறையாகிய பகுப்பு முறை ஆய்வும் வரலாற்று ஆய்வும் பற்றிய செய்திகள் கூறப்படும்.

இயல் 4–ல் சங்கத் தமிழர் போல் பழமை மிக்க ஸ்பார்ட்டா, ஏதென்ஸ், உரோம், வட இந்தியக் கல்வி அமைப்புக்கள் இடம் பெறுகின்றன.

இயல் 5–ல் தமிழர் கல்வியின் தத்துவப் பின்னணி கூறப்படுகின்றது.

இயல் 6–ல் தமிழர் கல்வித் தத்துவமான நோக்கம், உள்ளீடு, கற்பிக்கும் கற்கும் முறைகள், ஆசிரியர் மாணக்கர் செய்தி, ஒழுக்கம், நூல், கற்கும் காலம், கல்வி நிலையங்கள் முதலிய இடம் பெறும்.

இயல் 7–ல் சங்க காலக் கல்வித் தத்துவம் பற்றி அறிந்தனவும் மேல் ஆய்வுக்கு உரியனவும் இடம் பெறும்.

<u>அடிக்குறிப்புக்கள்</u>


1. Pillai, J.K, 1972. <u>Educational system of the Ancient Tamils</u>, Madras, Kazhagam.

2. Keay, F.E; 1959. <u>A History of Education in India and Pakistan</u>, Bombay, Oxford University Press, III (Ed) P.179

3. சந்தானம், எஸ்; 1976. <u>கல்விக் கோட்பாடுகளும் தத்துவங்களும்</u>, சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், ப-21.

4. வெள்ளைவாரணன், க; 1950. <u>சங்க காலத் தமிழ் மக்கள்</u>, சென்னை, நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, ப-24.

5. மேற்படி, ப-32.

6. மாணிக்கம், வ.சுப; 1962. <u>தமிழ்க் காதல்</u>, சென்னை, கழகம்.

7. Bhatia, K.M; Narang, C.L.; 1976. <u>Principles and Techniques of Education</u>, Ludhiana, Parkash Brothers, P. 54.

8. Kevin Ruffarty, '<u>World Bank on Indian Education</u>', Madurai '<u>The Indian Express</u>', 12.5.1980, P-8.

9. Arnold Toynbee, 1954. <u>A Study of History</u>, Vol.IX, XII, London Oxford University Press, pp.465 to 579

10. Kevin Rafferty; 1980. World Bank on Indian Education, Madurai, <u>Express</u>, 12.5.1980 P.8.

11. Macaulay; Quoted by Patel, M.S; 1953. In <u>The Educational Philosophy of Mahatma Gandhi</u>, Ahamadabad, Navjivan Publishing House, P.80.

12. ஏ. 68.

13. இராசமாணிக்கனார், மா; 1959. <u>தமிழக வரலாறு</u>, சென்னை, பாரிநிலையம், ப-51.

14. சாமிநாதையர், உ.வே; 1934. <u>சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்</u> சென்னை, நாம்சன் அச்சகம். ப-9.

15. மேற்படி ப-11.

16. வேங்கடசாமி, மயிலை சீனி; 1970. சங்க கால வரலாற்றில் சில செய்திகள், அண்ணாமலை நகர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், ப-37.

17. மேற்படி, ப-41.

18. மது. 761-763.

19. புறம், 72.

20. மேற்படி, 58.

21. கலி. 68.

22. வையாபுரிப்பிள்ளை (பதி); 1967. சங்க இலக்கியம், சென்னை, பாரிநிலையம், ப-1405.

23. சஞ்சீவி, ந; 1973. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னை, சென்னைப் பல்கலைக் கழகம், ப-5.

24. இராசமாணிக்கம், மா; 1970. பத்துப் பாட்டாராய்ச்சி சென்னை, சென்னைப் பல்கலைக் கழகம், ப-5.

25. பரிமேலுரை. குறள். 322.

26. புறம். 34.

27. இடைக்காடர், திருவள்ளுவமாலை.

28. பாரதியார்; 1978. கவிதைகள்-தேசிய கீதம், சென்னை, பூம்புகார் பிரசுரம், ப-44.

29. மீனாட்சி சுந்தரம், தெ.பொ; 1959. கலைக் களஞ்சியம், தொகுதி-6, சென்னை, தமிழ் வளர்ச்சிக் கழகம், ப.36.

30. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், பதிகம்.

31. Thomas, F.W; Lang, A.R; Principles of Modern Education, Boston, Washington, Miffin, P. 39.

## 2. தொடர்புடை இலக்கியம்.

### 2-0:

'சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவத்தை' ஆய்கின்ற இவ்வாய்வில் தமிழரின் கல்வி பற்றியும் கல்வித் தத்துவம் பற்றியும் ஆய்வதற்கு உரிய நூல்களாகத் தொல்காப்பியம், திருக்குறள், பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆய்வாளர் செல்கிறார். தமிழரின் கல்வித் தத்துவத்தை ஆய்வதற்குத் துணையான பிற அறிஞர்களின் ஆய்வுகளை அறிந்து கொள்ளுதல் நலம் பயக்கும். கல்வி பற்றியும் தத்துவம் பற்றியும் கல்வித் தத்துவம் பற்றியும் செய்யப்பட்ட ஆய்வுகள் தமிழர் கல்வித் தத்துவத்தோடு தொடர்புடை இலக்கியங்களாகக் கருதப்படுவதால் அவையும் காலந்தொறும் வளர்ந்த கல்வி நோக்கும் கல்வி அறிஞரின் குழுக்களின் அறிக்கைகளின் நோக்கும் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

### 2-1: காலந்தொறும் கல்வி நோக்கு:

#### 2-1-1: தொடக்கக் கல்வி ( Primitive )நோக்கு:

மனிதனின் தோற்றமே கல்வியின் தோற்றமாகும். தொடக்க நிலையில், முயன்று தவறிக் கற்றல் முறையிலேயே கல்வி நடைபெற்றது. முப்பெரும் தேவைகளாக உணவு, உடை, இருப்பிடம் முதலியவற்றைப் பெறுவதே வாழ்வு நோக்கமாயிருந்தது. அச்ச உணர்ச்சியும், பாதுகாப்பு உணர்ச்சியும், தொடக்க காலத்தில் மேலோங்கி நின்றன. காமமும், பசியுமே மனித வாழ்வை இயக்கின. இவ்வுணர்ச்சிகளின் பயனுக முயற்சிகளில் இறங்கி. நன்மை, தீமைகளை அறிந்த பிறகு அந்நன்மைகளை அறிந்தோர் அறியாதோர்க்குக் கூறிய போதே ஆசிரியர், மாணாக்கர் கற்பிக்கும் கற்கும் முறை முதலியன அமைந்து விட்டன. தொடக்கக் கல்வி உயிரை வளர்த்தலும் உடலை வளர்த்தலும் அடிப்படையாகக் கொண்ட கல்வி முறையாம்.

2-1-2: பிராமணக் கல்வி நோக்கு: "இந்தியாவைப் போல் கல்வியில் ஆழமும் நுட்பமும் அறிவு பெறுதலில் விரைவும் கொண்ட வேறு நாட்டினைக் காணுதல் அருமை; ஆயிரக் கணக்கான ஆண்டுகட்கு முன்பே பிராமணர் உலகெல்லாம் பரவும் கல்வியைக் கற்பித்தனர். வேத கால முனிவர்கள் கற்ற கல்வியை உலகெலாம் பயன் படப் பரப்பினர். ஆகவே பண்டை இந்தியாவே கல்வி முறையை உலகெல்லாம் பரப்பும் பொறுப்புடையதாய் இருந்தது.[1]

இலக்கணம், புராணம், தருக்கம், தத்துவம், முதலியன கற்பிக்கப் பட்டு அதன் ஏதுவாக அறிவியல் அறிஞர்களையும், சமயத்தத்துவ ஞானிகளையும் உருவாக்குதலே பிராமணக் கல்வியின் நோக்கமாக அமைந்தது.

குருகுல முறையில் குருமார்களே ஆசிரியராக அமர்ந்து நல்லொழுக் கத்திற்கு வழி வகுத்துப் பெருந்தொண்டு புரிந்தனர். எளிய வாழ்வும், உயர்ந்த எண்ணமும், பிராமணக் கல்வியின் உயர் நோக்கமாம்.

2-1-3: புத்தக் கல்வி நோக்கு: புத்தக் கல்வி முறை கௌதம புத்தராலும் அவருடைய சீடரான ஆனந்தர் முதலியோர்களாலும் வடிவம் பெற்றது. புத்தக் கல்வியின் நோக்கம் புத்த குருக்களான 'பிட்சுக்களை' உருவாக்குவதாகும். சங்கங்களைக் கருவியாகக் கொண்டு கல்வி வளர்த்தனர். விகாரங்களிலும் மடங்களிலும் புத்தப் பள்ளிகளிலும், கல்வி நடைபெற்றது. புத்தப் பெருமான் போதனைகளைக் கற்றலும் அவற்றைப் பரப்புதலும் புத்த பிட்சுகளை உருவாக்குதலுமே புத்தக் கல்வியின் நோக்கங்களாகும்.

2-1-4: தமிழரின் கல்வி நோக்கு: மனத்துக் கண் மாசு நீக்கி இல்லறம் பேணிச்சுற்றம் பாராட்டி பொதுநலம் கொண்டு வாழும் இம்மை நோக்கம் தமிழரால் மேற்கொள்ளப்பட்டது. இம்மையில் நடத்தும் செம் மையான வாழ்வால் செம்பொருளாகிய வாலறிவனுடைய நற்றுள் பற்றல்

தமிழர் தம் கல்வியின் மறுமை நோக்கமாக அமைந்தது. வாழ்நாள் முழுதும் கல்வி கற்கவேண்டும் என்பதும், கற்றபடி ஒழுக வேண்டும் என்பதும் தமிழர்தம் கல்வி நோக்காகும்.

2-1-5: முகமதியக் கல்வி நோக்கு: முகம்மதிய மதத்தைப் பரப்புதலே இக் கல்வி நோக்காம். கற்பித்தல் கடமையென்னும் ஆசிரியர்க்குப் பெருமதிப்பு உண்டென்றும் நம்பிய கல்வி முறை இது. வயது முதிர்ந்த மாணாக்கர் ஆசிரியர்க்கு உறு துணையாய் அமைந்து கற்பித்தனர்.

தாம் அறிந்தவற்றை மாணாக்கர்க்குக் கற்பித்தலே முகமதியக் கல்வி நோக்காம்.

2-1-6: கிறித்துவக் கல்வி நோக்கு: உலகம் முழுதும் கிறித்துவ மதத்தைப் பரப்ப வேண்டும் என்ற நோக்கமே கிறித்துவக் கல்வி நோக்காம். சாதி மத பேதமின்றி அனைவரையும் அருகில் அணைத்து ஆதரவு காட்டி மதித்து உள் படுத்திக் கற்பித்தல் முறையாக அமைந்தது. பாதிரிமார்களும் கன்னிப் பெண்களும் கருவியாக அமைந்தனர்.

எல்லோரும் கிறித்துவைப் பின்பற்றி நலமாக வாழவேண்டும் என்பதே கிறித்துவக் கல்வியின் நோக்கமாகும்.

2-1-7: ஆங்கிலக் கல்வி நோக்கு: கிறித்துவப் பாதிரிகள் இந்தியாவில் நுழைந்து படிப்படியாக மேலுட்டுக் கல்வியாகிய ஆங்கில மொழிக் கல்வியைப் பரப்பத் தொடங்கினர். ஆங்கில மொழி அறிவைப் படிப்படியாகப் புகட்டி இந்தியரை ஆங்கில மனம் படைத்தவராக மாற்ற முயன்றனர். எழுத்தர்களை உண்டாக்கும் கல்வி முறை கைக் கொள்ளப்பட்டது. புதுமையை விரும்பும் மனித இயல்பு கொண்ட அன்றைய இந்தியர், ஆங்கில மோகத்திற்கு ஆட்பட்டனர்.

சாதி மதக் கொடுமைகளால் அடிமை விலங்கு பூண்டிருந்த ஆதிதிராவிடர் போன்றோர் உரிமை வாழ்வளிக்க வந்த பாதிரிக் கல்வி முறையை நோக்கிப் பயணம் தொடங்கினர். பாதிரிமார்களாலும், புதுமை விரும்பிகளான சில இந்தியராலும் புகுத்தப்பட்ட புதிய கல்வி முறையே தற்காலக் கல்வி முறையாம்.

1813-ல் கிழக்கிந்தியக் கம்பெனிச் சட்டம் இந்தியா முழுவதும் நிலவிய கல்விக்குத் தானே பொறுப்பேற்றுக் கொண்டது. 1835-ல் வெளியான மெக்காலே குறிப்பு ஆங்கில மொழிக் கல்விக்கும் பயிற்றுமொழிக்கும் அடித்தளம் அமைத்தது. இந்தியரையும் ஆங்கிலேயரையும் இணைக்கும் ஒரு புதிய இனத்தை உருவாக்குதலும், இந்தியப் பண்பாட்டு அடிப்படையை நீக்குதலும், ஆங்கிலப் பண்பாட்டைப் புகுத்தலும், நோக்கங்களாயின. அதற்கேற்ப ஆங்கில ஆட்சி தன் போக்கினை அமைத்துக் கொண்டு தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்டுள்ளது என்பது கண்கூடாம்.

## 2-2: குழுக்களும் திட்டங்களும்:

ஆங்கிலக் கல்வியை இந்தியாவில் பரப்புவதற்கெனப் பல குழுக்கள் அமைக்கப்பட்டு அதற்கேற்ற நோக்கத்தோடு கூடிய திட்டங்கள் வெளியிடப்பட்டன. ஆயினும், இந்திய உரிமை எண்ணம் பரவி எழுந்ததன் விளைவாக நம் நாட்டுக்கு ஒவ்வாத ஆங்கிலக் கல்வி முறையை மாற்றியமைக்க வேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் கல்விக் குழுக்கள் அமைக்கப்பட்டன. அவை பற்றிய செய்திகளாவன:-

### 2-2-1: ஆதாரக் கல்வி நோக்கு:

1937-ல் காந்தியடிகளால் கொண்டு வரப்பட்டது ஆதாரக் கல்வித் திட்டம் என்பது. ஆங்கிலக் கல்வி முறை இந்திய நாட்டுப் பண்புக்கு ஒவ்வாது; ஏழ்மை நாடான இந்தியாவுக்கு உகந்த ஓர் எளிய கல்வித் திட்டம் வேண்டும்; என்ற நோக்கால், ஆதாரக் கல்வித் திட்டம் வெளியிடப்பட்டது. உண்மையற்றதும் செயற்கையானதும், வாழ்வுடன் தொடர்பற்றதும் ஆன ஆங்கிலக் கல்வி முறையை நீக்கி, உடல், உள்ள, ஆன்மக் கூறுபாடுகளை வெளிக் கொணரும் திறனையே நோக்கமாகக் கொண்ட இக்கல்வித்

பயனுள்ள உடல் உழைப்பு, நடைமுறைப் பயன், சிக்கனம் பொருந்திய வாழ்வு, முதலியவை ஆதாரக் கல்வியின் அடிப்படை நோக்கங்களாம்.

2-2-2: ஜாக்கீர் உசேன் அறிக்கை: காந்தியடிகளின் கல்வித் திட்டம் பற்றி ஆய்ந்து கூற அமைக்கப்பட்ட இக்குழு ஏழாண்டு வரை இலவசக் கல்வியளிக்கவேண்டும்; தாய்மொழியே பயிற்று மொழியாய் அமைய வேண்டும், கைத் தொழிலை மையமாகக் கொண்ட கல்வி முறையில் கிடைக்கும் ஊதியம் கல்விச் செலவுக்கு உதவுதல் வேண்டும் என்பன போன்ற நோக்கங்களை வெளியிட்டது.

2-2-3: உயர்நிலைக் கல்விக் குழு நோக்கு: 1952-ல் இக்குழு கூறிய நோக்கங்களாவன:

1) ஆக்கத்திறம் படைத்த குடி மக்களாக வாழத் தேவைப்படும் அறிவும் ஒழுக்கமும் அடையச் செய்தல்.
2) தொழில் துறையையும், பொருளாதார வளர்ச்சிக்குப் பாடுபடும் செயல் திறனையும், தலைமை தாங்கும் ஆற்றல்களையும் வளர்த்தல்.
3) இந்திய நாட்டுப் பண்புக்கேற்ற ஆளுமைப் பண்புகள் வளர உதவி செய்யும் இலக்கியம், நுண் கலைகள் வளர்ச்சிக்கு வழி வகுத்தல்.
4) ஒழுக்கக் கல்வி, அறிவுரை கூறல், வழிகாட்டல், இதற்கான வழி வகை காணுதல், இவற்றை நோக்கங்களாகக் கொண்டு இக்குழு மாபெரும் அறிக்கை வெளியிட்டது.

2-2-4: கோத்தாரிக் குழு நோக்கம்: 1964-ல் கீழ்க்கண்ட நோக்கங்களை வெளியிட்டது.

1. தேசியக் கல்வி அமைப்பை அமைத்தல்
2. உடனடியான புரட்சிகரமான மாற்றம்.
3. எல்லாக் கல்வி நிலையங்களிலும் ஆராய்ச்சி
4. ஆசிரியப் பயிற்சியையும் நிலையையும் உயர்த்துதல்

5. பெண்கல்வி, பிற்பட்டோர் கல்வி, முதியோர் கல்வி ஏற்பாட்டுத் திட்டங்கள்.
6. உணவிலே தன்னிறைவு பெறுதல்.
7. ஏழ்மை நீக்கம்.
8. படித்தோரிடம் வேலையின்மையினை நீக்குதல்
9. ஒருமைப்பாடு பெறுதல்.
10. குடியாட்சிப் பண்புகளை வளர்த்தல்.
11. பாதுகாப்பு உரிமையைப் பெருக்கி நாட்டைப் புதுமைப் படுத்துதல்.
12. உலக முன்னேற்ற நாடுகளின் நிலைக்கு இந்தியாவை உயர்த்துதல்.

இதன் தொடர்பாக 1968-ல் கல்விக்கான தேசியக் கொள்கை வெளியாயிற்று.

2-2-5: ஆதிசேஷய்யா குழு நோக்கு: அறிவாற்றலை வளர்த்தல், உலக நாடுகளின் பண்பாட்டை உணர்த்தல், அறநெறிப் போதனை, விஞ்ஞானம், தொழில் நுட்பத் திறன், ஆராய்ச்சி வளர்ச்சி ஆகியன இக்குழு நோக்கங்களாகும்.

இவ்வாறு அமைக்கப்பட்ட குழுக்களின் பரிந்துரைகள் திட்ட அளவிலேயே தேங்கிவிட்டன என்றல் மிகையாகாது. 'மெக்காலே' திட்டத்தால் விளைந்த மக்களின் மனமாற்றம் இன்னும் மறுமாற்றம் பெறாதிருத்தலே இதற்கு ஏதுவாமோ?

## 2-3: கல்வி பற்றிய கருத்துகள்:

கல்வி என்ற சொல்லின் ஆங்கில, இலத்தீன் மொழி மூலங்களை ஆய்ந்து பார்த்தால் 'கொண்டு வருதல்' 'முன்னேறுதல்', 'வளர்த்தல்', 'உயர்த்தல்', 'வெளிக் கொணர்தல்', 'தோன்டுதல்' என்றெல்லாம் பொருள் படும்.

கற்க வேண்டியவைகளை எல்லோரும் குற்றம் நீங்குமாறு கற்று, கற்றதன்பின் அதற்கேற்ப வாழ்க்கை நடத்துவதற்கு உதவியாகும் கருவியே கல்வி - திருவள்ளுவர்.

வாலறிவனுடைய நற்றுள் பற்றுதற்கும், சிறப்பு என்னும் செம்பொருள் காணுதற்கும், மீண்டும் பிறவா நிலை அடைதற்கும் உரிய கருவி கல்வியே - திருவள்ளுவர்.

குழந்தையின் உடல், உள்ள, ஆன்மப் பண்புகளை வெளிக் கொணர்தலே கல்வி எனக் கருதுகிறேன் - காந்தியடிகள்.

மனிதனிடம் உள்ள இயற்கை நிறைவினை வெளிக் கொணரும் கருவியே கல்வியாகும் - விவேகானந்தர்.

பரந்த உலக மனப்பான்மை பெறுதல், உரிமை பெறுதல், நடைமுறைப்பயன் தருதல் - இவையே கல்வி நோக்கமாகும் - தாகூர்.

சமூகமே பள்ளியாகும்; தனி மனிதனுக்கு நற்கல்வி அளிக்கப்பட்டால் சமூகத்தைப் பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை - எம்.எஸ். படேல்.

"அறியாமையைக் களைந்து, தோண்டி எடுத்து, அறிவை விளக்குவதே கல்வி எனப்பட்டது. அறிவு என்பது மனத்தைச் சென்றவிடத்தெல்லாம் செல்லவிடாமல் தீது நீக்கி நன்றின்பால் உய்க்கும் உணர்வு நிலையாகும். அறிவு என்பது புதிதாகப் புகுத்தப்படுவது ஒன்றன்று. உள்ளத்தே உறைந்து கிடக்கும் நுண் உணர்வேயாகும். கற்கப்படுபொருள் நம் உள்ளமே. புறப்பொருள் அமைப்பு நாம் கற்றற்கு வேண்டற்பாலனவாகிய குறிப்பையும் வாய்ப்பையும் நல்கும் கருவியே. இவ்வாற்றான் மனத்தின் கண் மறைந்து மண்டிக் கிடக்கும் ஞானத்தை வெளிப்படுத்தலே கல்வி கற்றலாம்"[2] என்பர் திருஉந்னசாமி.

எல்லா அறிவையும் எல்லார்க்கும் கற்பிக்கவேண்டும். ஆண், பெண், ஏழை, பணக்காரன், வேறுபாடு கல்வியில் இல்லாத உரிமை வேண்டும்; கல்வி மக்களாட்சித் தத்துவம் பெறவேண்டும் – காமினியஸ்.

குழந்தை உள்ளத்தின் கட்டுப் பாட்டுக்கு வழி செய்வதே கல்வியாகும் – ஜான் லாக்.

உணர்வுக் கல்வி, உரிமைக் கல்வி, செய்து கற்றல் கல்வி, இயற்கை வழிக்கல்வியே கல்வியாகும் – ருசோ.

இயல்பான வளர்ச்சிக்கு உதவும் உளவியல் முறைக்கல்வியே கல்வியாகும் – பெஸ்டலாசி

ஒழுக்கத்தை வளர்ப்பதே கல்வியின் இறுதி நோக்கமாகும் – ஹெர்பர்ட்.

குழந்தைகள் சமூகச் செயலில் ஈடுபடச் செய்வதே கல்வியாகும் – புரோபெல்;

முழுமையான நிறைவு பெற்ற வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்துவதே கல்வியாகும் – ஸ்பென்சர்.

பரந்த நோக்கமுடைய கல்வியே கல்வியாகும் – ஹக்ஸ்லே.

கல்வி என்பது வளர்ச்சியாம். புலப்பயிற்சிக் கல்வியே போற்றற்குரியதாகும் – மாண்டிசோரி.

உடலுக்கு உணவு தேவை, அதுபோல் சமூகத்திற்குக் கல்வி தேவை. குழந்தையின் இயல்பில் வாழ்வுடன் இயைந்த ஆற்றலை வெளிப்படுத்துவதே கல்வி. செய்து கற்றல், வாழ்ந்து கற்றல், செயல் முறைகளே கல்வி நோக்கமாகும். – ஜான்டூயி.

கல்வியின் பணி மனிதனை உருவாக்குதலே – மார்க்டெய்ன்.

இவ்வறிஞர் கூற்றுக்களால் கல்வி என்பது மனிதனை மனிதனாக வாழச் செய்ய உதவும் கருவி என்பதும் இம்மையைச் செம்மையாக்கி மறுமைக்கு உதவும் வழிகாட்டி எனவும் கூறலாம்.

## 2-4: தத்துவம் பற்றிய கருத்துக்கள்:

எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.[3]

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப தறிவு.[4]

இக்குறட்பாக்களால் காண்டல் கேட்டல் வாயிலாக பெறும் அறிவின் ஆர்வமே தத்துவம் என உரைலாம். இதையே மேனாட்டறிஞர் பின்வருமாறு குறிப்பர்.

'பிலாசபி' (தத்துவம்) என்ற ஆங்கிலச் சொல்லின் கிரேக்க மூலத்தை ஆய்ந்தால் அறிவை விரும்புதல் எனப் பொருள்படும். இதையே அறிவார்வம் என்றும் குறிப்பர்.

கல்வியிலிருந்து தத்துவம் உருவாகிறது – ஜான் டூயி.

தத்துவம் வியப்பில் தொடங்குகிறது. தத்துவத்தின் ஆய்வு உண்மையே – பிளேட்டோ.

தகுதியான வாழ்வு அமைப்புக்களை முடிவு செய்யும் முக்கியப் பணியே தத்துவம், தகுதியான வாழ்வு வாழச் செய்யும் பணி கல்வியுடையதாம்.

ஞாயமையான எண்ணத்தொடர்புடையது, ஞாயம், பொருள், ஆன்மா, உண்மையுடன் தொடர்புடையதே தத்துவம் - டானஜே, வி.ஆர்.

வாழ்வு பற்றியும் உலகம் பற்றியும் தனி மனிதனின் மனம் கொள்ளும் கொள்கையே தத்துவம். காரண காரியத்தொடர்புடன் கூடிய ஆய்வு இது. எல்லாவற்றையும் முழுமையாகப் பார்க்கும் பார்வை. பல சிக்கல்களையும் சிக்கல்களைத் தீர்க்கும் வழி வகைகளையும் உடையது. அறிவியலின் அறிவியலே தத்துவம். தத்துவம் என்பது வெறும் அறிவுடைமை அன்று. வாழ்வுக்காகவும் வாழவும் பயன்படுவதே தத்துவம் - ஹெரால்டு டைட்டஸ்.

இவற்றால் மனிதன் தன்னைப் பற்றியும் தான் வாழும் உலகம் பற்றியும் உலகத்தின் உண்மை மதிப்புகள் பற்றியும் தொகுத்து எண்ணி மெய்யுணர்வினைக் காண முயல்கின்ற முறைப்பட்ட அறிவார்வமே தத்துவம் எனலாம். நிலையில்லாத் தன்மையில் நிலைத்த தன்மை, பொருளுள் மெய்ப் பொருள் காணவிழையும் அறிவு, காட்சி, அனுமானம், ஏற்றல் முதலிய முறைகளால் அறிவைப் பெருக்கி உலகம் ஒன்றே எனத் தொகுத்துக் கூறும் பொதுநோக்கே தத்துவம். பேரறிவுப் பாதைக்கு மனிதனை அழைத்துச் செல்லும் வழிகாட்டியாகிய ஒளி விளக்கே தத்துவம் எனக் கூறப்படலாம்.

<u>2-4-1: தத்துவம் ஏன் தேவைப்படுகிறது?</u> மனிதன் வாழ்வாங்கு வாழ வழி காட்டவும் கருத்துகளில் தெளிவு காணவும் தெளிந்த பின் முடிவுகளை எடுக்கவும், அனுபவ அறிவியலை வடித்தெடுக்கவும், எதிர்காலம் பற்றி வழி வகுக்கவும், சிந்திக்கவும், செயற்படுத்தவும், தத்துவமே உதவி செய்கிறது.

<u>2-4-2: கல்வியும் தத்துவமும்:</u> "தகுதியான வாழ்வுக்குத் தேவையான அமைப்பைக் கூறுவது தத்துவம். தரமான வாழ்க்கை அமைய வழி செய்வது கல்வி. ஆகவே இரண்டும் இணைந்தவை."[5]

"தத்துவம் சிந்தனைப் பகுதி எனக் கொண்டால், கல்வி இதனுடன் தொடர்புடைய செயற் பகுதி எனல் பொருந்தும். [6]

"தத்துவ அடிப்படை அற்ற அமையும் பொதுக் கல்வி உலகில் எங்கும் குடியரசுச் சமுதாயத்தை உருவாக்க இயலாது". [7]

"கல்வியும் தத்துவமும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாம். முன்னது எண்ணப் பகுதி; பிந்தியது செயற் பகுதியாகும்" [8]

"பெரும் தத்துவ அறிஞரெல்லாம் எப்போதும் கல்வி அறிஞராகவே காட்சி தருகின்றனர்." [9]

## 2-5. கல்வித் தத்துவம்:

மேற்கண்டவற்றுள் மெய்யறிவின் நாட்டமே தத்துவம் என்றும் அதைப் பெறுதற்குக் கல்வியே கருவியென்றும் பெறப்படும். ஆதலால் கல்வித் தத்துவம் என்பதைப் பின் வருமாறு வரையறுக்கலாம். அறிவு – மெய்யறிவு – பெறுவதற்கு கருவியாகிய கல்வி செய்ய வேண்டிய பணியை வரையறுப்பதே கல்வித் தத்துவமாம்.

"கல்வித் தத்துவம் என்பது கல்வியின் நோக்கம், கல்வித் திட்டம், கற்றல், கற்பித்தல் முறைகள், ஆசிரியர், தயாரிப்பு, அளவிடுதல் முதலியவற்றையும் வாழ்வு எண்ணங்களையும் அடிப்படையாகக் கொண்டது" [10] என்று தாமஸ் குறிப்பிடுகின்றார். இவ்வடிப்படை ஏதுவாகத் தோன்றிய சில மேனாட்டுக் கல்வித் தத்துவங்களை அறிதல் இவ்வாய்வுக்கு நலம் தரும்.

## 2-6: மேனாட்டுப்புதிய கல்வித் தத்துவங்கள்:

### 2-6-1: கூட்டுப் பொருள் கொள்கை:

உள்ளமும் உடலும்

சடப் பொருளே என்னும் கொள்கை உடையோர் சடப்பொருள் கொள்கையினராம். அண்டம் சடப்பொருளால் ஆன சிக்கலிகு இயந்திரம் எனவும் மனிதனும் இவ் வியந்திரத் தன்மை பெற்றவன் எனவும் கருதுகின்றனர். வரலாறு, அரசியல் போக்கிலிருந்து பொருளாதாரப் போக்கின்படி மனித வாழ்வு உருவடைகிறது. சடப்பொருளால் ஆகிய பொருளே முழுப் பங்கு வகிக்கிறது. பொருளாதாரமே சமூக அரசியல் நிலைகளைக் கட்டுக்கு உட்படுத்திப் பின்னர் அறத்தின் அடிப்படையான சமயத் தத்துவங்களைக் கட்டுப் படுத்துகின்றது. இதுவே முரண் நிலைச்சடக் கொள்கையாகும். பொதுவுடைமைத் தத்துவத்திற்கு இதுவே வித்தாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் அறிவியல் போக்கின் விளைவே இச்சடப் பொருள் கொள்கையாகும்.

<u>2-6-2: இயற்கைக் கொள்கை:</u> இயற்கையே உண்மைப் பொருள் என்ற கொள்கையை அடிப்படையாக உடையது. இது மூன்று பிரிவுகளை உடையது. இயற்பியல் கோட்பாடு, உயிரியல் கோட்பாடு, செயலறிவு முறைக் கோட்பாடு என்பன அவை.

இயற்பியல் கோட்பாடு குழந்தையின் தடையற்ற வளர்ச்சிக்கு உதவுகிறது. உயிரியல் கோட்பாடு நிலைத் தன்மையிலிருந்து மாறுகொண்டு வளர உதவுகிறது. செயலறிவு முறை இயற்கைக் கோட்பாடு மனித-குல வரலாற்றையே துணை எனக் கொண்டு ஆய்கிறது.

'இயற்கை வழி நில்'

'குழந்தையே கல்வியின் மையம்'

குழந்தையின் இயற்கை இன்பமும் உரிமையும் தடையற்ற இயற்கைப் போக்கும் இக்கொள்கையில் இடம் பெறுகின்றன. கல்வி உளவியலும், விளையாட்டு முறையும், நேர் அநுபவ முறையும் செய்து கற்றலும், இயற்கைக் கோட்பாட்டில் இடம் பெறுகின்றன.

அரிஸ்டாட்டல், டார்வின், ஜான்லாக், கார்ல் மார்க்ஸ், ஸ்பென்சர் முதலியோர் இயற்கைக் கொள்கையினர்.

2-6-3: கருத்துக் கொள்கை: ஆன்மீகக் கொள்கை என்ற வேறு பெயரும் கருத்துக் கொள்கைக்கு உண்டு. உள்ளம் அல்லது ஆன்மாவே உயர் உண்மைப் பொருளாகும். மனித உணர்வைக் காட்டிலும் உள்ளமே உயர்வானது. அறிவும் உண்மையும் உணர்வும் அழகும் செயலும் நன்மையும் தொடர்புடையவை. நல்வாழ்வே இக்கொள்கையினரின் அடிப்படை நோக்கமாகும்.

கல்வித் துறையில் இக்கொள்கை, மதிப்பியல், அற இயல், அழகியல் கருத்துக்களைச் செயலாக்க முயல்கின்றது. சாக்ரடீஸ், பிளேட்டோ, காண்ட், ஹெகல் போன்றோர் இக்கொள்கையினர்.

2-6-4: பயனளவைக் கொள்கை: இஃது அமெரிக்கப் புதிய கொள்கையாகும். 'கருவிக் கொள்கை' எனவும் 'செயல் முறைக் கொள்கை' எனவும் பெயர் பெறும். நிரந்தரமான மதிப்புக் கிடையாது. மதிப்பு அவ்வப்போது மனிதனால் உருவாக்கப்படுகிறது. மதிப்பு என்றும் முழுமை அடைவதில்லை. தத்துவம் வாழ்வுடன் தொடர்பும் பயனும் கொள்ளவேண்டும். அநுபவமே இக்கொள்கையின் மையம். உண்மை மாறுவதன்று; விளைவுகளைச் சார்ந்தது; நடைமுறைப்பயனும், மனநிறைவும், விளைவும், முடிவும் உண்மையோடு தொடர்புடையன. இறந்த காலத்தை விட எதிர் காலமே முக்கியம்.

இன்றைய தொழில் நுட்பச் சமுதாயத்திற்குப் பொருத்தமான கொள்கை இது. புதிய மதிப்புகளை உருவாக்கவே கல்வி பயன்படவேண்டும். பயனுள்ள கல்விக் கோட்பாடுகளினின்றும், தத்துவக் கருத்துக்கள் வெளிப்படுகின்றன. குழந்தையும் சமூகமுமே கல்வியின் மையப் பொருள்களாகும். செய்து கற்றல்

அதன் விளைவினைக் கண்டு பிடித்தல், சிக்கல் தீர்த்தல் முதலியன வலியுறுத்தப் படுகின்றன.

உள்ளத்தைக் கருதி மதிப்பு அளிக்காததும் இம்மையையே பெரிதென்று நோக்குதலும் பயனளவைக் கொள்கையின் குறைகளாகும்.

2-6-5: புற உண்மைக் கொள்கை: புலன்களில் உணரப்படும் புறப் பொருள்களுக்குத் தனிப்பட்ட உண்மை நிலை உண்டு என்று வலியுறுத்தும் கொள்கை இது. புற உலகு தூய்மையானது. உற்று நோக்கலே அறிவு பெறுதற்கு வழி என இக்கொள்கை வலியுறுத்துகிறது. உண்மை உலகு எப்போதும் உண்டு. உற்று நோக்கும்போது திரிபுக் காட்சி எழுந்தாலும்உடனடியாகத் தெளிவு கிடைக்கும். தொழிற்கல்வி, பொதுக்கல்வி, இரண்டும் ஒருங்கிணைந்து செயல் படும் முறை இதனுல் உருவாயிற்று.

அரிஸ்டாட்டல், பேகன், ரசல், ஒயிட் எட் போன்ருேர் இக் கொள்கையினர்.

2-6-6: வல்லாண்மைக் கொள்கையும், பொதுவுடைமைக் கொள்கையும்:

வல்லாண்மைக் கொள்கையில் அரசே மையம், முக்கியமானது. மக்களாட்சிக்கு எதிரானது. கடமையும் கட்டுப்பாடும் அரசுக்காகவே ஏற்பட்டன. இத்தா லியும் ஜெர்மனியும் இக்கொள்கையின. தனி மனித உரிமை கிடையாது.

பொதுவுடைமைக் கொள்கை, புற உண்மைக் கொள்கையுடனும் சடப் பொருள் கொள்கையுடனும் தொடர்புடையது. இதில் உழைப்பே நீடு இடம் பெறுகிறது. தொழில் அனுபவமே முக்கியமானதாகும். சமயத் திற்கு இடமே இல்லை. கட்டுப்பாடு வற்புறுத்தப்பட்டது. கடவுள், மறுமை நம்பிக்கை கிடையாது.

2-6-7: குடியரசுக் கொள்கை: குடியரசுக் கொள்கையில் தனிமனித உரிமை வற்புறுத்தப்படுகிறது. குடியரசுக்கு உரிமையே கோட்பாடாகும். நாட்டு நலனுக்குகந்த வரம்புகளைக் கொண்ட உரிமை ஆட்சி. இந்தியா போன்ற நாடுகளில் காணப்படுகிறது.

2-6-8: சமரசப் போக்கு: மேற்கண்டவற்றுள் காணப்படும் முரண்பாடுகளை நீக்கிக் குறைகளைந்து நிறைகளைத் தொகுத்து ஆக்கப்பட்டுள்ள சமரசப் போக்கே தற்போது இந்தியாவில் காணப்படுகிறது. இயற்கைக் கொள்கையினரின் இயற்கையோடு இயைந்த வாழ்வு கருத்துக் கொள்கையின் ஆன்மப் பண்பு வளர்ச்சி, புற உண்மைக் கொள்கையின் அநுபவ உண்மை, பயன் அளவைக் கொள்கையின் செய்து கற்றல், பயன் முறைத்திட்டம், குடியரசுக் கல்வி, குறிப்பிடும் தனி மனித உரிமை போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட பொதுக் கல்வி முறை ஒத்துக் கொள்ளப்பட்டு இதற்கேற்பத் திட்டங்கள் தீட்டப்படுகின்றன.

இனி இக்கல்வித் தத்துவத்தோடு தொடர்புடைய கல்வி பற்றியும், தத்துவம் பற்றியும் கல்வித் தத்துவம் பற்றியும் பிற ஆய்வாளர் ஆய்வுகளைக் காணலாம்.

2-7: தொடர்புடை இலக்கியம்-தொகை:

குழந்தைவேல் என்பார் 'ஜான்டூயி-காந்தியடிகளின் கல்வித் தத்துவங்கள் பற்றி ஓர் ஒப்பீட்டாய்வு' செய்து 1963-ல் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பியுள்ளார்.

எம்.எஸ்.படேல் என்பார் காந்தியடிகளின் கல்வித் தத்துவம் பற்றி ஓர் ஆய்வு செய்து பம்பாய்ப் பல்கலைக் கழகத்திற்கு 1953-ல் அனுப்பியுள்ளார்.

மனி என்பார் 'காந்தியடிகள்; தாகூர், இவரின் கல்விக் கொள்கைகளும் கோட்பாடுகளும்' பற்றி ஆய்வு செய்து சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு 1964-ல் அனுப்பியுள்ளார்.

எம்.கே.சார்லு 'பகவத் கீதையின் கல்வித் தத்துவம்' பற்றி கட்டுரை வெளியிட்டுள்ளார்.

எல்.திருவேங்கடாச்சாரி என்பார் 'திருவள்ளுவரின் கல்வித் தத்துவம் பற்றி' சுப்புரெட்டியார் மணிவிழாமலரில் 1968-ல் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார்

ந.மு.வேங்கடசாமி நாட்டார் 'கட்டுரைத் திரட்டு' பகுதி 1-ல் 'கல்வி' பற்றிக் கட்டுரை எழுதியுள்ளார்.

க. வெள்ளை வாரணன் என்பார் 'தமிழர் கல்வி நிலை' பற்றி சங்க காலத்தமிழ் மக்கள்' என்ற நூலில் 1950 -ல் எழுதியுள்ளார்.

சி.இலக்குவனார் என்பார் 'சங்க காலம்' என்ற நூலில் 1962-ல் எழுதிய கட்டுரையில் 'கல்வி' பற்றி ஆராய்கிறார்.

ஜெயா கோதை பிள்ளை என்பார் 'பண்டைய கல்வி முறை' பற்றி நூலொன்றை வெளியிட்டுள்ளார்.

தனிநாயக அடிகள் 'பழந்தமிழ்ப்புலவராசிரியர்' பற்றி 1957 -ல் கட்டுரை எழுதியுள்ளார். இவரே 'தமிழ்ச் சமுதாயத்தின் தொடக்கக்கல்வியாளர்' 'சங்க இலக்கியத்தில் தத்துவ வளர்ச்சி' ஆகிய கட்டுரைகள் எழுதி உள்ளார்.

க.பொ. ரத்தினம் என்பார் 'பழந்தமிழ் நாட்டில் கல்வி' பற்றிக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

சத்தியமூர்த்தி என்பார் 'சங்க இலக்கியத்தில் தத்துவக் கருத்துக்கள்' பற்றி ஆய்வொன்றை நிகழ்த்தி கேரளப் பல்கலைக் கழகத்திற்கு 1976-ல் அனுப்பியுள்ளார்.

2-7-1: 'ஜான்டூயி காந்தியடிகளின் கல்வித் தத்துவங்கள் ஓர் ஒப்பீட்டாய்வு' என்ற ஆய்வில் குழந்தைவேல் என்பார் ஆய்ந்ததை அறிவோம். இவ்வாய்வு மூன்று பகுதிகளாக அமைகிறது.

காந்தியடிகளின் கல்வித் தத்துவம் அமைப்பில் இயற்கைக் கொள்கையும் நோக்கில் கருத்துக் கொள்கையும் நடைமுறைப் பயன் கொள்கையும் கொண்டது என்று எடுத்தாள்கிறார். மாறாக, ஜான் டூயி என்பார் நடை முறைப் பயன் கொள்கையே கல்வித் தத்துவமாக உடையவர் என்றும், கடவுள் நம்பிக்கை அற்றவரென்றும், நிலையான மதிப்புக்கள் மீதும், நிலைத்த உண்மை மீதும் நம்பிக்கையில்லாதவர் எனவும் குறிப்பிடுகிறார். சமூகத்தில் வாழும் திறன் பெறுதலே கல்வி நோக்கம் என்ற தத்துவம் கொண்டவர் என்று குறிப்பிடுகிறார்.

இவ்வாறு மாறுபட்ட கொள்கையுடைய இரு பெரும் கல்வியாளரை எடுத்துக் கொண்டு கல்வித் தத்துவத்தை ஆராய்கிறார். இருவர் நோக்கமும் ஒன்று; ஆனல் வழி மட்டும் வேறுளது. சமூக நலனே இருவருடைய நோக்கமாகும். ஜான் டூயி அறிவியல், சமூக இயல் வழியாகச் செல்கிறார். காந்தியடிகள் ஆன்மீக அறவழியில் செல்கிறார். இருவரும் சமூக நலனையும் நாட்டு முன்னேற்றத்தையும் குறிக்கோளாகக் கொள்கின்றனர்.

சமூக நலன் என்ற கடலை எதிர்த் திசைகளிலிருந்து வந்து சந்திக்கும் இருபெரும் ஆறுகளாக இருவர் தத்துவங்களைக் குறிப்பிட்டு ஆய்வை முடிக்கிறார்.

2-7-2: காந்தியடிகளின் கல்வித் தத்துவம்: 'காந்தியடிகளின் கல்வித் தத்துவம்'[23] பற்றி எம். எஸ். பட்டேல் என்பார் ஆய்வொன்றை நிகழ்த்தி

1953-ல் பம்பாய்ப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பினார். பதினாறு பகுதி களைக் கொண்டது இவ்வாய்வு. இவர் கண்டறிந்து கூறும் செய்திகளாவன.

காந்தியடிகளின் கல்வித் தத்துவத்தில் கற்றவனின் அருமைப் பண்பே முக்கியமானது; கருவிகளும் பாடங்களும் முக்கியமாகா.[24]

தன் தேவையைத் தானே நிறைவு செய்து கொள்ளுதல் சிறந்த கல்வித் தத்துவம் ஆம்.[25]

இன்னா செய்யாமை மூலம் கற்பிக்கப்படுவதே உண்மைக் கல்வி யாகும்.[26]

சமூகப் பொறுப்புணர்தல் சிறந்த கல்வித் தத்துவமாகும்.[27]

கல்விக் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் அமைப்பதில் கல்வித் தத்துவம் பெரும்பங்குடையது.[28]

முழுமையான சமநிலைப்பட்ட பொருத்தமான உடல் உள்ள உணர்வு வளர்ச்சிக் கேற்ற கல்வியே காந்தியடிகளின் கல்வி நோக்கமாக இருந்தது.[29]

காந்தியடிகள் முடிந்ததைச் சொன்னார்; சொன்னதைச் செய்தார்.[30]

உடனடி நோக்கம், இறுதி நோக்கம் என இரு நோக்கம் காந்தியடிகளுக்குண்டு.[31]

தன்னை உணர்தல், கடவுளை உணர்தல் இவையே காந்தியடிகளின் உயர் கருத்தாகும்.[32]

சமூக அமைப்பில் அமைதி, நிம்மதி, நிறைவு, முதலியன கல்வி நோக்கங்களாம்.[33]

தனி மனிதனுக்குப் போதுமான கல்வி அளிக்கப்பட்டால், சமூகத்தைப் பற்றி ஒருவரும் கவலைப் படவேண்டியதில்லை.[34]

சமூக சேவை, தன்னலம் துறத்தல் இரண்டும் தன்னை உணர வழி காட்ட வல்லனவாம்.[35]

பிறர் அநுபவத்தில் இன்றித் தன் அநுபவக் கொள்கைகளையே கல்வித் திட்டமாக வகுத்தது காந்தியடிகளின் தனிச் சிறப்பாகும்.[36]

கல்வியில் அன்பே ஆணிவேர் என்பது காந்தியடிகளின் கொள்கை.

டால்ஸ்டாயின் 'கடவுள் உன்னுள் உள்ளார்' என்ற கருத்தும் இரஸ்கினின் 'கடையனுக்கும் கடைத் தேர்வு' என்ற கூற்றும் காந்தியடிகட்கு இருளிலிருந்து ஒளிக்கும், தன்னலத்திலிருந்து பொது நலத்திற்கும் வெறுப்பிலிருந்து விருப்பிற்கும் வழி காட்டியன.

பிறப்பாலும் பணத்தாலும் தொழிலாலும் அமையும் வேற்றுமைகளும் சாதி வேற்றுமைகளும் காந்தியடிகளுடைய கல்வித் திட்டத்தில் இடம் பெற வில்லை.[37]

வார்தா கல்வித் திட்டம் குழந்தைகட்குத் தேவையான உளவியல் தேவைகளை அடிப்படையாகக் கொண்டது.[38]

காந்தியடிகளின் கல்வித் தத்துவம் இந்திய நாகரிகத்தையும், சமூக நிலைகளையும் எதிர் காலத் தேவைகளையும் அடித்தளமாகக் கொண்டது.[39]

காந்தியடிகள் நவயுக ஞானி.[40]

உலகத்து உதித்த சமூகக் கல்வியாளரில் காந்தியடிகள் மிக உயர்ந்தவராவர்.[41]

எளிய வாழ்வு, உயர்ந்த உள்ளம் என்ற தன்மைத் தானே ஒரு தலை சிறந்த எடுத்துக் காட்டாவார்.[42]

மனிதனின் உயரிய குறிக்கோளாவது தன்னை உணர்தலேயாம். தன்னை உணர்தலே கடவுளைக் கண்ணுறக் காண்பதாம்.[43]

ஆகவே, காந்தியடிகளுடைய வாழ்க்கையினையும் செயல் முறைகளையும் கல்வித் திட்டத்தையும் கூர்மையாக ஆராய்ந்து பார்த்து வெளிப்பட்ட இவ்வாய்வில் தன்னை உணர்தலும் கடவுளை உணர்தலும் ஆகிய தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு எளிமையான கல்வித் திட்டத்தை வகுத்துக் காட்டினார். காந்தியடிகள் இந்தியாவுக்கேற்ற உயர்ந்த தத்துவஞானி எனவும் கூறி முடிகிறது.

<u>2-7-3: கல்விக் கொள்கைகளும் கோட்பாடும்-காந்தியடிகள் தாகூர்:</u> 'காந்தியடிகளின் தாகூரின் கல்விக் கோட்பாடுகளும் கொள்கைகளும்,[44]

காந்தியடிகளையும் தாகூரையும் ஒப்பிட்டுக் கல்விக் கோட்பாடுகளும் கொள்கைகளும் பற்றி மனி என்பார் ஆய்வொன்றை நிகழ்த்தி 1954-ல் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பியுள்ளார். இவ்வாய்வு மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

<u>காந்தியடிகளின் கல்வித் தத்துவம் பற்றிக் கூறுவன:</u>

காந்தியடிகள் கருத்துக் கொள்கையினர். சமூக சேவையே கடவுள் சேவை. செயல்படுத்துவதில் நடை முறைப் பயன் கொள்கையினர். காந்தியடிகளின் கல்வித் திட்டம் அவருடைய தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. குழந்தை மையக் கல்வியே காந்தியடிகளின் கல்வியாகும். வெறும் எழுத்தறிவு கல்வியாகாது. தொழில் மூலம் கல்வியும் சமூகப் பொறுப்புமே அவருடைய தத்துவங்கள்.

உடலியல், சூழ்நிலைகளுடன் கல்வியை இணைப்பதே அவருடைய முக்கிய கல்வித் தத்துவமாகும்.[45]

உண்மை, தீயன பொறுத்தல் (அஹிம்சை) அடிப்படையாக அமைந்த தத்துவமே அவருடைய கல்வித் தத்துவமாகும்.[46]

குழந்தையின் உடல், உள்ள, ஆன்ம வளர்ச்சிக்குக் கல்வியே கருவியாகும். எழுதல், படித்தல், கணிதம், இம்மூன்றையும் விட எண்ணல், உணர்தல், உழைத்தல் முக்கியமாம்.

கல்வியின் குறிக்கோள் அமைதியும் இன்பமுமே. செல்வமும் பதவியும் அல்ல.[47]

தனிமனித, சமூக முன்னேற்றமே கல்வி நோக்கமாகும். உண்மையின் மீதும் தீயன பொறுத்தலின் மீதும் அமையும் சமுதாயமே காந்தியடிகளின் நோக்கமாகும்.[48]

தன்னை உணர்தலும் கடவுளை உணர்தலும் காந்தியடிகளின் இருபெரு நோக்கமாகும்.[49]

வாழ்வுக்காக, வாழ்வு மூலம் பயன் படுவதே கல்வியாகும். உழைப்பின் உயர்வும் அருமையும் ஒருங்கு இணைந்த வளர்ச்சியுமே கல்விப் பயனாகும்.[50]

உண்மைக் கல்வி அளிப்பதற்கு உரியோர் பெற்றோரே.[51]

குணநலம் குழந்தைகட்கு அமைந்துவிட்டால் ஏனைய நலன்கள் யாவும் ஓடி வரும்.

எளிய வாழ்வும் உயர்ந்த உள்ளமும் காந்தியடிகளின் நோக்கமாகும்.

குலநலன், குழந்தைகட்கு உள்ளத்தில் சுரப்பது; ஊட்டப்படுவதன்று[52]

உண்மையான கல்வியே மனிதனைக் கடவுளிடம் அழைத்துச் செல்கிறது.[53]

<u>தாகூரின் கல்வித் தத்துவம் பற்றிக் கூறுவன:</u>

இயற்கையே சிறந்த ஆசிரியர். ஆன்மீக அடிப்படை கொண்டதே அவருடைய கல்வித் தத்துவமாகும்; குழந்தையின் உரிமையே உயரிய கல்வி ஆகும்.

தாகூரின் தத்துவம் ஒரு கலைஞரின் தத்துவமாகும்.[54]

அடிமைத் தளையிலிருந்து மனிதனை விடுவிப்பதே கல்வியாகும்.[55]

செய்திகளைத் திரட்டுவதன்று கல்வி. மனிதன் மனிதனை அறிவதும் அறியச் செய்வதுமே கல்வி.[56]

இயற்கையான வாழ்வை மையமாகக் கொண்ட வாழ்வில் மலர்ந்த கல்வியே கல்வியாகும்.[57]

குருகுலத்தின் எளிய வாழ்வு, உயர்ந்த உள்ளம் என்ற கொள்கையைத் தாகூர் மனமார வரவேற்றார்.[58]

தாகூர் மாணாக்கரைத் தண்டித்ததே இல்லை.[59]

பள்ளிக்கும் கல்லூரிக்கும் சென்றுதான் அறிவு பெறவேண்டும் என்பதில்லை. உலகில் பள்ளிகளும் கல்லூரிகளும் தோன்றும் முன்னரே தலைசிறந்த மாணாக்கர் தோன்றியுள்ளனர்.[60]

விளையாட்டு மூலம் உண்டாக்கும் கல்வி உயரியது. மனிதன் முழு வாழ்வு வாழ பொருளாதார அறிவியல், நீதி இயல், ஆன்மீக வளர்ச்சியுடன் கூடிய கல்வியே தேவை.[61]

இருவரைப் பற்றிக் கூறுவன:

இருவரும் ஆன்மீக வாதிகள். கல்விக்கும் நாட்டுப் பொருளாதாரத் திற்கும் நெருங்கிய உறவு வேண்டும் என்ற கொள்கையினர்.

கல்வி, வளையாத கட்டுத் திட்டம் கொண்டதன்று. வளைந்து கொடுக்கும் இயல்புடையதாகும் என்ற கொள்கையினர். வாழ்வு முழுதும் கல்வி வேண்டும் என்ற கொள்கையுடையோர். ஆயினும் கலை இயலுக்கு முக்கியத்துவம் தந்தவர் தாகூர். பொருளாதாரத்தைக் கருதியவர் காந்தியடிகள். தொழில் மூலம் கல்வி என்ற காந்தியடிகளின் கருத்தினைத் தாகூர் ஏற்க வில்லை.

கல்வித் தத்துவம் என்பது உடனடியானதும் இறுதியானதுமான கொள் கைகளையும் நோக்கங்களையும் உடையது. இருவருடைய கல்வித் தத்துவங்களும் மனிதனை உயர் வாழ்வு வாழ உதவி செய்யவேண்டும் என்ற நோக்குடையதே ஆகும்.

2-7-4: பகவத் கீதையின் கல்வித் தத்துவம்: எம்.கே.சார்லு என்பார் 'பகவத் கீதையின் கல்வித் தத்துவம்'[62] பற்றிக்கட்டுரையாத்துள்ளார். கீதையின் கல்வித் தத்துவம் இந்தியாவுக்கு ஏற்றது; பொருத்தமானது; உடல், உள்ளம் ஒருங்கு இணைந்த ஆளுமை வளர்ச்சி, சமூகத் திறனைக் கற்றல், இவையே பகவத் கீதை காட்டும் கல்வித் தத்துவம் என்று குறிப்பிடுகிறார். அறிவும் தன்னலம் மறந்த சேவையும், கடவுள் வழிபாடாகும். கற்றவன் என்பதை உணர்வதற்குப் பயன்படுவது அவருடைய நடத்தையே அன்றிக் கல்வி அன்று. பகவத் கீதையின் உலகறிந்த உபதேசமாகிய 'கடமையைச் செய்;

பலனைப் பற்றிக் கவலைப்படாதே' என்ற தத்துவமே இந்தியாவுக்குகந்ததாகும் எனக் கூறி முடிக்கிறார்.

2-7-5; <u>திருவள்ளுவரின் கல்வித் தத்துவம்</u>: 'திருவள்ளுவரின் கல்வித் தத்துவம்'[63] பற்றி எஸ். திருவேங்கடாச்சாரி என்பார் சுப்பு ரெட்டியார் மணி விழாமலரில் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். அதில் அவர் கூறுவன: தமிழகத்தின் மிக உயரிய கல்வியாளர் திருவள்ளுவரே; வாழ்வு உண்மையானது; நிலையானது; முழுவதும் வாழவேண்டியது என்பது தமிழர் தம் கொள்கை; இம்மை வாழ்வே தமிழர் இதை உணர்ந்த வாழ்வாம்; தனிமனித ஆளுமை வளர்ச்சியே கல்வியின் முதல் பயனாகும்; நல்ல சமுதாயத்திற்குக் குடும்பமே அடிப்படையாகும். சேவை, சமவாய்ப்பு, முதலியவற்றிற்குக் குடும்பமே வழிகாட்டியாகும். வாழ்வில் குறிக்கோள்களாக உழைப்பு, சமூக சேவை, அன்பு, தியாகம், முதலியவற்றைக் குறிப்பிடுகிறார்.

திருவள்ளுவர், கருத்துக் கொள்கையினரே. மனவளம், ஆன்மிக நம்பிக்கை உடையவர். வாழ்வின் நோக்கும் கல்வியின் குறிக்கோளும் தன்னை உணர்தலாம். நன்மை செய்தலே வள்ளுவரின் கோட்பாடாம். உயர் மதிப்புகளை உணர உயரிய கருவி கல்வியாகும். அறிவும் ஒழுக்கமும் கருவியாகத் தன்னை உணர்ந்த வழி செய்தலே கல்வியாகும். அறிவாலும் மனிதக் கூட்டுறவாலும் மன நிறைவும் ஒழுக்கமும் பெறுதலே கல்விப் பயனாகும். உள்ளுணர்வால் உலகை அறிவதே கல்வியாகும். கேள்வியறிவு; காதால் கேட்பது மட்டுமன்று; விழிவிடை, அறிவுமாம். நடைமுறைப்பயன் தத்துவத்தின் வேர்கள் பல குறள்களில் உண்டு. வள்ளுவரின் தத்துவம் சமரசக் கொள்கை உடையதெனலாம். வள்ளுவர் நல்லாசிரியர்க்கு ஒரு சான்றவர். ஆசிரியர் சமுதாயத்திற்கு வள்ளுவர் கூறும் அறை கூவல்களாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுகிறார்:

(1) கற்பித்தபடியே வாழ்க.

(2) அன்பு நெறியே கற்பித்தல் நெறியாகும்.

(3) ஒவ்வொரு ஆசிரியரும் தன் கடமையை மாணவர்க்குச் செய்கிறோமா என தம்மைத் தாமே கேட்டுக் கொண்டு ஒழுகுதல் வேண்டும்.

"இன்றைய கல்வி உண்மைக் கல்வி அன்று. வாழ்வு இழந்த கல்வியாக உள்ளது. கல்வி வாழ்வுடன் தொடர்பு கொண்டால் குறள் கூறியபடி கல்வி நடைபெற்றால் சிக்கல் தீரும்".[64]

இறுதியாக ஒழுக்கம் உள்ள மனிதன் சமுதாயத்தின் சொத்து. அறிதல் உணர்தல் நடைமுறைக் கேற்ற குறிப்புகள் பல உண்டு எனக் கூறி முடிக்கிறார்.

<u>2-7-6: கல்வி:</u> ந.மு.வேங்கடசாமி நாட்டார் என்பார் கட்டுரைத் திரட்டில் 'கல்வி'[65] பற்றிக்கூறுகிறார்.

கற்றலாகிய தொழில், கற்கப்படுவனவாகிய நூல்கள், கற்றலான் எய்தும் அறிவு ஆகியன கல்வி எனப்படும். 'தனக்குப் பாழ் கற்றறிவில்லா உடம்பு' என்கிறார்.

"மாந்தர் அனைவரும் ஒரு தலையாகக் கற்க வேண்டும். கல்வியானது அறிவை வளர்த்து மக்கட் பண்பை நெறிப்படுத்தி உண்மையை உணர்த்தி இம்மை, மறுமை, வீட்டின்பங்களை நல்க வல்லனவாய், புலத்துறை முற்றிய சான்றோர்களால் அவ்வம்மொழிகளில் இயற்றப்பட்டுள்ள இலக்கியங்களையும் விதி நூல்களையும் உண்மை நூல்களையும் கற்றுணர்தலாம்."[66]

கல்வியின் பயன்களாகச் சிறக்கண்டவற்றைக் குறிப்பிடுகிறார்:

1, அறிந்தவற்றில் ஆழமாகத் தோய்தல், 2. உயர்ந்ததையும் அறிந்ததையும்

பிறர்க்கு உதவுதல் 3. உலகத்தோடு பொருந்தும் மக்கட்பண்புடையராதல் 4, வாலறிவன் நற்றுளைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குதல்.

இக்கட்டுரையிலிருந்து கல்வியின் பொருண்மையினையும் அது நல்கக் கூடிய பயன்களையும் பொதுவாகக் கூறலாம்.

<u>2-7-7: தமிழர் கல்வி நிலை:</u> 'தமிழர் கல்வி நிலை'[67] பற்றி வெள்ளை வாரணன் என்பார் 'சங்க காலத் தமிழ்மக்கள்' என்ற நூலில் ஒரு கட்டுரை யாத்துள்ளார்.

"மக்களுக்குக் கண் என்று போற்றப்பட்ட கல்வித் துறையில் தமிழ் வேந்தர் எல்லோரும் சிறந்த பயிற்சியுடையராய் விளங்கினர். விலங்கினின்றும் மக்களை வேறு பிரித்து உயர்த்துவது கல்வி - அத்தகைய கல்வியை ஆடவர், பெண்டிர் ஆகிய இரு பாலாரும் பயில வேண்டும் என்பது பண்டைத் தமிழ் மக்களின் கொள்கையாகும்."[68]

தமிழர் பயின்ற கல்வி வாழ்வாங்கு வாழ உதவும் பயனுள்ள கல்வியாக அமைந்திருந்தது.

"பொருளீட்டல், போர் செய்தல், நாடு காத்தல், முதலிய புறத் துறைக்கு உரிய முறையில் ஆடவர் கல்வி பயின்றனர். மனை வாழ்க்கையினை நடத்துதலும் அன்பால் மன அமைதியை வளர்த்தலும் ஆகிய குடும்பப் பணியினை நிகழ்த்துதற்கு ஏற்ற முறையில் மகளிர் வீட்டிலிருந்தே கல்வி பயின்றனர்."[69]

கல்வியின் முடிந்த எல்லையாகத் திருவள்ளுவர் அறிவுறுத்துவது 'மெய் யுணர்தல்' ஆம்.

"ஓவிய நூலும், சிற்பநூலும், மருத்துவநூலும், வேறு பல நுண் கலைகளை அறிவிக்கும் நூல்களும் சங்க காலத்தில் வழங்கின."[70]

தமிழ் நாட்டில் ஊர் தொறும் இளம் சிறார்க்குத் தொடக்கக் கல்வி வைச் சொல்லிக் கொடுக்கும் தெற்றிப் பள்ளிக்கூடங்கள் இருந்தன.

"அக்காலத் தமிழ் மக்கள் மாணவ நிலையில் மட்டுமன்றி மணந்து கொண்ட பின்னரும் உயர்ந்த நூற்பொருள்களைக் கற்றற்கெனவே வேற்றூர்கட்குப் பிரிந்து சென்றுள்ளனர்". [71]

2-7-8: கல்வி: சி. இலக்குவனார் என்பார் 'சங்க காலம்' என்ற நூலில் 'கல்வி' பற்றிய சில கருத்துக்களைக் கூறுகிறார்.

வாழும் மக்களுக்குக் கல்வியே கண்ணாகும். ஆண், பெண், சாதி வேறுபாடின்றி அனைவரும் கல்வி பெற வேண்டும் என்ற கொள்கையே தமிழ் நாட்டில் நிலவியது.

"தமிழர் அறிவியலை எண்கலை என்றும் கலை இயலை எழுத்தறக்கலை என்றும் அழைத்து வந்துள்ளனர்". [72]

அக்காலக் கல்வித் திட்டம் பொதுக் கல்வி, சிறப்புக் கல்வி, ஆராய்ச்சிக் கல்வி, என மூவகை நிலைகளைப் பெற்றிருந்தது. ஆராய்ச்சிக் கல்வி, விரும்பும் தொழில் அல்லது கலை பற்றிய ஆய்வாகும்." [73]

"கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் எவ்வாறு இயங்கின என்று கூறுதற்குரிய குறிப்புகளில் ஒன்றும் இன்று கிடைக்கப் பெறவில்லை என்னும் அவை இருந்தில என்று சொல்ல முடியாது. ஒவ்வொரு துறையிலும் கற்றுத் துறை போகிய பேராசிரியர்கள் இருந்தனர். ஒவ்வொருவருடைய வீடும் ஒவ்வொரு துறையில் ஒவ்வொரு கல்லூரிகளாக விளங்கியது." [74]

"சங்க கால மக்கள் வாழ்வில், கடவுட் கொள்கை, உலகக் கண்ணோட்டம் பேணி உயர்ந்த பண்பாடு உடையவராக வாழ்ந்தனர்". [75]

"தமிழகத்தில் கி.மு. 7-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2-ஆம் நூற்றாண்டு வரை 9 நூற்றாண்டுகளில் 9 போர்கள் தான் நிகழ்ந்துள்ளன. ஆனால், அறிவியல் வளர்ச்சி பெற்ற இருபதாம் நூற்றாண்டில் இருபத்தைந்து ஆண்டில் இரண்டு உலகப் போர்கள் நடைபெற்றுள்ளன." 76

இக்கட்டுரையால் கல்வியின் பிரிவும் கற்கும் காலமும் கல்வியின் நோக்கமும் தமிழர் அமைதியான வாழ்க்கையும் ஒருவாறு புலப்படுத்தப்பட்டுள்ளன.

<u>2-7-9: பழந்தமிழர் கல்வி முறைகள்:</u> 'பழந்தமிழர் கல்வி முறைகள்' 77 பற்றி திருமதி ஜெயா கோதை பிள்ளை என்பார் ஓர் நூல் வெளியிட்டுள்ளார்: அவர் கூறும் செய்திகளாவன:

"கிறிஸ்துவிற்கு முன்னரே தமிழர் தென்னகத்தில் உயர் நாகரிகம் பெற்று உலக நாடுகளோடு கடல் வணிகத் தொடர்பு கொண்டனர். தமிழரசர் ஆட்சியில் உயர் நாகரிகமான நிலையில் கலை இயலும் இலக்கியங்களும் படைத்து விளங்கினர்." 78

"விவிலிய நூலும், தாலமி குறிப்புக்களும், கி.பி. 77-ல் இருந்த பிளினி குறிப்புகளும் தமிழரின் தொன்மையான கடல் வணிகத்தையும் தமிழர் தலைநகர் பற்றியும் கூறுகின்றன." 79

கடைச் சங்க காலம் கி.பி. 300 வரை நீடித்தது. 80

யாதும் ஊரே; யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர் தர வாரா.

என்பதைத் தமிழர் சமூகத் தத்துவமாக -உலக சகோதர நேயத்தத்துவமாகவும் பழந்தமிழர் கொண்டனர். 81

பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையான் [82]

என்பது தமிழரின் சமுகத் தத்துவமாக விளங்கியது.

தமிழர் வாழ்வின் நோக்கம் பிறவிப் பெருங்கடலை நீந்தி இறைவனடி சேர்தலே ஆகும் என்கிறார்.

தன்னை உணர்தல் வாயிலாக இறைவனை உணர்தலே வாழ்வின்–கல்வியின்–இறுதி நோக்கமாகும். தன்னை உணர்தல் பிறப்பு அறச் செய்யும். [83]

தமிழர் கொடையையும், வீரத்தையும் உயர் இரு குணங்களாக மதித்தனர். [84]

வாழ்வுக் கேற்ற நடைமுறைக் கொள்கைகளை உணர்ந்து கொள்வதே கல்வியாகும். [85]

கல்வி மிகப் பெருகியிருந்தது. சங்க காலத்தில் எல்லா இனத்தாருக்கும் கல்வி கற்க வாய்ப்பிருந்தது. கல்வியே கேடில்லாத விழுச் செல்வம். [86]

அறிவு தீமையிலிருந்து காப்பாற்றும் ஆயுதம். குற்றமறக் கற்பதே கல்வியாகும். [87]

கல்வி முறையில் பாடத்திட்டம், கற்றல் முறைகள், ஆசிரியர் மாணக்கர் பற்றிக் கூறுகிறார். கல்வி கற்பிக்கும் கருவி எது? என்ற வினாவிற்குத் தெளிவான விடைகள் காணப்படவில்லை ஆயினும் கிடைத்தவற்றைக் கொண்டு முடிந்த அளவு அறிய இயலும் என்கிறார். [88]

எண்ணும் எழுத்தும் இரு கண்ணகும் என்பது சங்க காலக் கொள்கை.

கற்பித்தல் முறையில் வாய்மொழி சிறப்படைந்திருந்தது.

பொதுக் கல்வியும் தொழில் கல்வியும் மாறுகொள்ளவில்லை. கலைக் கல்வியும் போர்க் கல்வியும் சங்க காலத்து உண்டு.

முடிவுரையில் கல்வி என்பது அறிவு பெறுதலுக்கேற்ற மனப் பயிற்சியாகும். வாழ்நாள் முழுதும் கல்வி வேண்டும். எல்லோருக்கும் கல்வி உண்டு. ஆசிரியருக்கு மதிப்பு அதிகம். பொதுக் கல்வியும் தொழிற்கல்வியும், புத்த விகாரக் கல்வியும், சமணப் பள்ளிக் கல்வியும் இடம் பெற்றன.

தற்காலக் கல்வித் திட்டத்தில் இலவசக் கல்வி, பகலுணவுத் திட்டம், உதவித் தொகைத் திட்டம், ஆசிரியர் நிலை, எல்லோருக்கும் கல்வி முதலியன பழங்காலத் திட்டத்தில் காணப்பட்ட நன்மைகளாகும் எனக் கூறி முடிக்கிறார்.

<u>2-7-10: சங்க இலக்கியத்தில் தத்துவ வளர்ச்சி:</u> சேவியர் தனிநாயகம் என்பார் 'சங்க இலக்கியத்தில் தத்துவ வளர்ச்சி' [89] பற்றிக் கட்டுரையொன்று எழுதியுள்ளார்.

மாதவி ஏழாண்டுகள் நடனம் பயின்றாள் என்ற முறை சார்ந்த கல்வி முறை காணப்படுகிறது. மணிமேகலையுள் இருபத்தேழாம் காதையாகிய சமயக் கணக்கர் திறன் கேட்ட காதை தமிழகத்தில் நிலவிய சமயங்களைப் பற்றிக் கூறுகிறது. பட்டி மண்டபங்களும் கற்றோர்க்குரிய கொடிகளும் பேசப்படுகின்றன.

திருக்குறளில் மனிதர்க்குரிய கொள்கைகள் குறிக்கப்படுகின்றன. கல்வி வாழ்நாள் முழுதற்கும் உரியதெனப் பேசப்படுகிறது. குறள், முறை சார்ந்த கல்வி பற்றிக் கூறும் நூல் அன்று எனினும் கற்றோரின் இயல்புகளைப் பேசுகிறது. குடும்ப உறுப்பினன், சமூக உறுப்பினன், நாட்டு உறுப்பினன் என்ற நிலைகளிலும் காதலன், கணவன், தந்தை, நண்பன், குடிமகன் என்ற நிலைகளிலும் பேசுகிறது.

ஆயினும் 'கேள்வி' அதிகாரத்து முறை சார்ந்த கல்வியின் அடிப்படை

உள்ளது. முறை சார்ந்த கல்வியின் நோக்கம் சான்றோராக்குதலே. முறை சார்ந்த கல்வியின் உள்ளீடு என்னும் எழுத்தாமாம். தந்தையின் மகிழ்ச்சி தம் மக்களைக் கற்றோராக்குதலில் அடங்கியுள்ளது. மாணாக்கன் முழுதும் கற்க வேண்டும். ஆராய்ந்து கற்றல், யாரிடமிருந்து வருகிறது என்பதை நோக்காது எது வருகிறது என்று நோக்கிக் கற்றல், பணிந்து ஏக்கற்றுக் கற்றல் வேண்டும்.

கற்றோர் பெறும் பயன்களாவன; உயர்வு, நண்பரும் செல்வமும், அன்புடைமை, சொல்லாற்றல், பெறுதலாம்.

<u>2-7-11: பழந்தமிழ்ப் புலவராசிரியர்:</u> எஸ். தனிநாயகம் என்பார் 'பழந்தமிழ்ப்புலவராசிரியர்' [90] பற்றிக் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார்.

அரசனுக்கும் சிற்றரசர்கட்கும் குறுநில மன்னர்கட்கும் எவ்விதத் தொடர்பு இருந்ததோ அதே தொடர்பு அரசர்க்கும் புலவராகிய ஆசிரியர்க்கும் இருந்தது. அரசர்க்கு நண்பராயும் ஆலோசகர்களாயும் புலவர் விளங்கினர். அரசர் ஆதரவில் வாழும் ஏழ்மையைச் சில புலவர்கள் பெற்றிருப்பினும் அரசர்க்குரிய பெருமிதமும் உயர்நிலையும் புலவர்க்கு உண்டு. புலவர்கட்கு அளிக்கப்பட்ட யானைகளும், புரவிகளும், தேர்களும் பொன்னாலான மாலைகளும் உண்கலன்களும் பருகும் குவளைகளும் புலவர் அரசரிடம் பெற்றிருந்த சமூக மதிப்பின் உயர் நிலையைக் காட்டுகின்றன. முற்றிய திருவின் முடியுடை வேந்தராயினும் பெட்பு இன்றி ஈந்ததைப் புலவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

இரட்டைக் காப்பியக் காலத்துப் புலவர் தத்துவ அறிஞராக விளங்கினர். மாணாக்கர்க்குக் கற்பிக்கின்ற காலத்து முறைசார்ந்த கல்வியாளராயும் சமூகத்தில் அறம் உரைக்கும் போதும் நீதி காட்டும் போதும் முறைசாராக் கல்வியாளராயும் காணப்பட்டனர். ஔவையார் என்ற பெண்பாற்புலவர் அரசர்க்கு ஆலோசகராயும்

போரைத் தடுக்கும் ஊதராயும் ஆற்றல் மிக்க ஆசிரியராகவும் விளங்கினர். ஆண்பால், பெண்பால், புலவரின் பெயர்களும் தொழில்களுமே பால் வேறு பாடற்ற கல்விக்கு வழியமைத்திருந்தது என்பதையும் மற்ற தொழில் செய்வோரும் தங்களுடைய கருத்துக்களைத் தெரிவிப்பதற்குச் செய்யுளே ஏற்றவடிவாகவும் இருந்ததென்பதையும் அறியலாம்.

<u>2-7-12: தமிழ்ச்சமுதாயத்தின் தொடக்கக் கல்வியாளர்:</u> 'தமிழ்ச் சமுதாயத்தின் தொடக்கக் கல்வியாளர்' [91] என்ற கட்டுரையில் காணப்படும் செய்திகளாவன:

சங்க காலம் கி.மு.300-க்கும் கி.பி.300-க்கும் இடைப்பட்ட காலம். தொடக்க காலச் சமுதாயத்தில் பெற்றோரே கல்வியாளராக இருந்தனர். பிறகு பாணர்களும் கூத்தர்களும் புலவர்களும் கல்வியாளராயினர். பின்பு எழுந்த காப்பிய காலத்தில் சமய ஆசாரியர்களே ஆசிரியராயினர். வேத பிராமணரும் சமணக் குருமாரும் புத்த பிட்சுக்களும் முக்கியக் கல்வியாளராக மாறினர்.

சங்க காலத்தின் தொடக்கத்தில் கல்வி முறை தனிப்பட்டதாயும், முறைசாராமலும் இருந்திருப்பினும் சங்கத்தின் பிற்காலத்தில் மதக் கல்வியாகவும் முறைசார்ந்த கல்வியாகவும் மாறியது.

<u>2-7-13: பழந்தமிழ் நாட்டில் கல்வி:</u> 'பழந்தமிழ் நாட்டில் கல்வி' [92] பற்றி க.பொ. இரத்தினம் கூறும் செய்திகளாவன.

பழந்தமிழர் கல்விக்குப் பெருமதிப்பு அளித்தனர். தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலில் கல்வியால் பெருமிதம் உண்டாகும் எனக் கூறப்பட்டுள்ளது. எண்ணும் எழுத்தும் மக்களுக்கு இரண்டு கண்களாகும் எனவும் கண்ணுடையர் என்பர் கற்றோர் எனவும் கல்வி, தொடர்ந்து உதவி செய்யும் கருவி எனவும் குறள் கூறுகிறது. மேலும் கல்வியே மருந்தாகும் என நாலடியாரும், கல்லாதார்

விலங்கு எனத் திருக்குறளும், மரம் என மூதுரையும், நாய் என நாலடியாரும், கூறுகின்றன. கல்லாதார் கடவுளைக் காண முடியாது எனத் திருமந்திரம் பேசுகிறது. தத்துவத்தின் தாய் செய்யுளே ஆகும். பழந்தமிழ்ப்புலவர் கல்வியாளராயும் தத்துவ அறிஞராயும் விளங்கிக் கல்விக் கொள்கைகளைக் கூறினர். அறிவு பெறுதலும் குணநலன் பெறுதலும் சமுகத் திறன் பெறுதலும் சமுக சேவை செய்தலும் கொள்கைகளாகக் குறளும் புறமும் கூறுகின்றன. உயர் மக்களின் நாகரிகம் ஒரு நாளில் உண்டாக்கப்படுவதன்று. பல்லாண்டுகளின் படி-வளர்ச்சி நிலையே நாகரிகம். ஆண்டாண்டு காலமாக வாழும் வாழ்வின் பயனே இலக்கியமும் கலைகளும் ஆகும். நாகரிகத்தையும் ஆக்கத்திறனையும் ஆக்குதலில் கல்வி பேரிடம் வகிக்கிறது. அக்கல்வியின்றேல் சமுதாயம் குன்றும்.

கி.மு. 4000 முதல் பழந்தமிழர் கால்டியர்களுடனும் சாலமன் போன்ற பிறநாட்டினருடனும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். கடல் கடக்கும் ஆற்றலையும் நாகரிக மேம்பாட்டினையும் கல்வியினால் பெற்று தமிழர் பெருஞ் சிறப்படைந்தனர்.

<u>2-7-14: சங்க இலக்கியத்தில் தத்துவக் கருத்துகள்:</u> 'சங்க இலக்கியத்தில் தத்துவக் கருத்துகள்'[93] பற்றி சத்தியமூர்த்தி என்பார் ஆய்வொன்றை நிகழ்த்திக் கேரளப் பல்கலைக் கழகத்திற்கு 1976-ல் அனுப்பியுள்ளார்.

இன்பதுன்ப உள்ளுணர்வே தத்துவத்தின் தொடக்கம். அறிவார்வத்தை நிறைவு செய்யும் முயற்சியே தத்துவம். இன்றைய அறிவியலாரும் தத்துவத்தை மதிக்கின்றனர். கிரேக்க முறைப்படி தத்துவம் என்பது அறிவைத் தேடலே. 'தத்வ' என்னும் சமஸ்கிருதச்சொல் 'உண்மைப் பொருள்' எனப் பொருள்படும். 'தர்சனம்' என்பதும் தத்துவ முறையே. தமிழில் வழங்கும் 'காட்சி' என்பதும் தத்துவமே. இந்தியத் தத்துவத்திற்கும் மேலைநாட்டுத் தத்துவத்திற்குமுள்ள வேறுபாடுகளை ஆய்வோம். இந்தியத் தத்துவம் வரலாற்றுக்கும் எட்டாத பழைமை

உடையதெனவும் ஆய்நிலைத் தொடக்கமாக உடையதெனவும் துன்ப நீக்கத்திற்கு வழிகாணும் நோக்குடையதெனவும் சமயத் தோடு இணைந்தும் ஆய்கின்ற முறை உடையவை எனவும் கூறுகிறார். ஆயின் மேனாட்டு முறை, தெரிந்த காலவரையறையுடைய அண்மைக்காலத்ததெனவும் புற உலகையே பெரிதும் மதிப்பதெனவும் பொழுது போக்காகக் கருதுவதெனவும் சமயத்தையும் தத்துவத்தையும் பிரித்துக் காணும் முறையுடையதெனவும் கூறுகிறார். தத்துவப் பிரிவுகளான நாத்திகம் ஆத்திகம் இவற்றின் பிரிவுகள் கூறப்படுகின்றன. இந்திய தத்துவ வளர்ச்சியைக் கூறுகிறார். தமிழ் இலக்கியத்தில் சைவத்தையும் வைணவத்தையும் அறியக்கூடும் என்கிறார். சோழர் காலத்தில் தத்துவத் தொடக்க நூல்கள் கூறப்படுகின்றன.

இந்தியத் தத்துவ ஆட்சி பேசப்படுகிறது. 'சர்வகா' தத்துவமும், சமணமும், புத்தமும் சாங்கியமும் யோகமும் பூர்வமீமாம்சையும் கூறப்படுகின்றன.

கிரேக்கத்தத்துவ ஆட்சி பற்றிக் கூறுகிறார். வணிகமும் பழக்கமும் இந்தியரையும் தமிழரையும் பாதித்த செய்திகள் கூறப்படுகின்றன. பாலை விளக்கும் மதுவகையும், அரிஸ்டாட்டில் கொள்கையும் பாதித்தன என்கிறார்.

இருமரபு-ஆரிய மரபும் தமிழ் மரபும் ஆயப்படுகின்றன. இரு வேறு கொள்கையினராயினும் இணைந்து பழகினர்.

தமிழர் கடவுள், உலகம், உயிர், மறுபிறவி, துறக்கம் நரகம், முதலியவற்றை நம்பினர். நிலையாமையால் நிலைத்த இன்பம் பெற விரும்பி அனுபவித்தனர்.

<u>அடிக்குறிப்புகள்:</u>

1. Rai, B.C; 1974. <u>History of Indian Education</u>, Lucknow, Prakasam Kendra, Prefactory Note.

2. திருஞானசாமி, ந; 1951. 'கல்வி' <u>செந்தமிழ்ச் செல்வி</u>, திருநெல்வேலி சிலம்பு, 26, பரல் 21, 1951-52, கழகம், ப-35,

3. குறள் 473.

4. குறள் 355.

5. Taneja; 1965. <u>Educational Thought and Practice</u>, New Delhi, University Publishers, P-45.

6. சந்தானம், எஸ்; 1969. <u>கல்விக் கோட்பாடுகளும் தத்துவங்களும்</u> சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், ப-135.

7. Alfred North White Head; 1953. <u>Adventures of Ideas</u>. New York, American Library of World Literate, P-25.

8. Ross, S; James; 1976. <u>Ground Work of Educational Theory</u>, Delhi, Oxford University Press, P-16. (2nd Edi).

9. Patel, M.S; 1968. <u>Educational Philosophy of Mahatma Gandhi</u>, Ahamadabad, Navjivan Publishing House, P-5.

10. Thomas, F.W; Lang, A.R; <u>Principles of Modern Education</u>, P-39.

11. Kuzhandaivel, K; 1965. <u>A Comparative Study of the Educational Philosophies of John Dewey and Mahatma Gandhi</u>, Unpublished Docteral Dissertation, University of Madras.

12. Ibid, P-21.

13. Ibid, P-71.

14. Ibid, P-79.

15. Ibid, P-167.

16. Ibid, P-173.

17. Ibid, P-198.

18. Kuzhandaivel, K; A Comparative Study of The Educational Philosophies of John Dewey and Mahatma Gandhi, P-407.
19. Ibid-P.407.

20. Ibid, P-415.

21. Ibid, P-415.

22. Ibid, P.434.

23. Patel, M.S; 1953. Educational Philosophy of Mahatma Gandhi, Navjivan Publishing House, Published Docteral Dissertation University of Bombay.

24. Ibid, P-17.

25. Ibid, P-19.

26. Ibid, P-22.

27. Ibid, P-23.

28. Ibid, P-34.

29. Ibid, P-36.

30. Ibid, P-38.

31. Ibid, P-41.

32. Ibid, P-43.

33. Ibid, P-46.

34. Ibid, P-51.

35. Ibid, P-54.

36. Ibid, P-71.

37. Ibid, P-108.

38. Ibid, P-186.

39. Ibid, P-188.

40. Ibid, P-242.

41. Ibid, P-214.

42. Ibid, P-245.

43. Ibid, P-251.

44. Mani, M.S; 1964. Educational Ideas and Ideals of Gandhi and Tagore, New Delhi, New Book Society of India Published Docteral Dissertation, University of Madras.

45. Ibid, P-29.

46. Ibid, P-31.

47. Ibid, P-32.

48. Ibid, P-33.

49. Ibid, P-34.

50. Ibid, P-42.

51. Ibid, P.61.

52. Ibid, P-130.

53. Ibid, P-157.

54. Ibid, P-178.

55. Ibid, P-180.

56. Ibid, P-184.

57. Ibid, P-188.

58. Ibid, P-189.

59. Ibid, P-196.

60 Ibid, P-259.

61. Ibid, P-262.

62. Charlu, M.K; 1974. 'The Educational Philosophy of Bhagavat Gita, A Survey of Research in Education, ~~Baroda~~, Baroda, University of Baroda, P-30.

63. Thiruvenkatachari, S; 1978. 'Educational Philosophy of Thiruvalluvar', Studies in Arts and Science - A facilitation volume to N.Subbu Reddiar, Ram Brothers, pp-198-230.

64. Ibid, P-227.

65. வேங்கடசாமி நாட்டார், ந.மு; 1972. 'கல்வி', கட்டுரைத் திரட்டு சென்னை, நாட்டார் பதிப்பகம், பக்-1-25.

66. மேற்படி ப.15.

67. வெள்ளை வாரணன், க; 1950. 'தமிழர் கல்வி நிலை', சங்க காலத் தமிழ் மக்கள், சென்னை, நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி (2-வது பதி) பக் - 103-124.

68. மேற்படி ப-87.

69. மேற்படி ப-88.

70. மேற்படி ப-118.

71. மேற்படி ப-123.

72. இலக்குவனார், சி, 1962. 'கல்வி' சங்ககாலம் புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம், ப-46.

73. மேற்படி ப-47

74. மேற்படி ப-48

75. மேற்படி ப-89

76. மேற்படி ப-133.

77. Pillai, J.K; 1972. Educational Systems of the Ancient Tamils, Tinnevelly, Kazhagam.

78. மேற்படி ப-3.

79. மேற்படி ப-4.

80. மேற்படி ப-8.

81. மேற்படி ப-16.

82. குறள் 972.

83. Pillai, J.K; 1972. Educational Systems of the Ancient Tamils, P-19.

84. மேற்படி ப-21.

85. மேற்படி ப-22.

86. மேற்படி ப-26.

87. மேற்படி ப-28.

88. மேற்படி ப-29.

89. Thanninayagam, S; 1958. 'The Philosophic Stage of Development in Sangam Literature', Tamil Culture, Madras, Vol. VII. No. 1, Jan. 1958. Journal of the Academy of Tamil Culture.

90. Thaninayagam, S; 1957. "Ancient Tamil Poet Educators" Tamil Culture, Vol. VI, No. 4, Oct. 1957, Madras, Journal of the Academy of Tamil Culture.

91. Thaninayagams, S; 1956. "The Educators of the early Tamil Society", Tamil Culture, Vol. V. No. 2, April 1956.

92. Rathnam, K.P; 1952. 'Education in the Ancient Tamil Countries', Tamil Culture, Vol. I & II, No. 3 & 4, Sep. 1952, and Sep. 1953, P-324.

93. Sathiamoorthy, S; 1976. Philosophic Thought in Sangam Literature, Thycaud, Unpublished Docteral Dissertation, University of Kerala.

# 3. ஆய்வியல் முறை.

## 3.0: ஆய்வு முறை:

தமிழர் தந்த ஆய்வு நோக்கத்தினையும் முறையையும், ஆய்வியல் முறை பற்றிய பொதுக் கருத்துக்களையும், மேனாட்டாரின் ஆய்வுக் கூற்றுக்களையும் இப் பகுதி கூறும். சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவம் பற்றி ஆய்வதற்கு மேற் கொண்ட ஆய்வு முறைகளும் இப்பகுதியில் காணப்படும். ஆய்வு என்பது யாது? அதன் தொன்மை யாது? மேனாட்டார் ஆய்வு முறைகள் யாவை? இவ்வாய்வுக் குரிய ஆய்வு முறையாது? முதலிய ~~பற்றி~~ செய்திகள் இப்பகுதியில் இடம் பெறும்.

## 3-1: தமிழர் தந்த ஆய்வு முறை:

முதுமொழி நீராப் புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர [1]

என்ற கலித்தொகைப்பகுதி ஆய்வின் நோக்கத்தினையும் ஆய்வு முறையையும் கூறும். எவ்வாறெனில்

மூன்றவிந்தடங்கிய சான்றோர் தொன்று தொட்டுக் கூறிவரும் அறமொழிகளை நீராகக் கொண்டு புலன் நா உழவராகிய கல்விப் புலவர் பலர் ஒன்று கூடிப் பலவாறு பலகால் ஆய்ந்து கண்டறிந்த புதுக் கருத்துக்களையும் விளக்கங்களையும் சமூக நன்மைக்குப் பயன்படுத்தலையே நோக்கமாகவும் முறையாக வும் கொண்டனர். உழவர் பொது நலத்துக்கே பயன்படுதல் போல் புலன்நா உழவரின் ஆய்வும் பொது நலத்துக்கே பயன்படவேண்டும். ஆய்வும் ஆய்வின் விளைவான பொது நலமும் உயர் குறிக்கோளாகக் கருதப்படவேண்டும் என்பது உருவகத்தின் நோக்கமாகும்.

அஃதி அகன்ற அறிவென்றும் [2]

ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்

அவயின் நான்கும் உள்ளதன் நுணக்கம் [3]

என்ற பகுதிகளால் நுணுக்கமாக, அஃகி ஆய்கின்ற ஆய்வுமுறை - பலரொடும் பலகாலும் ஆய்கின்ற ஆய்வு முறை - காணப்பட்டதென்பது புலனும்.

இறந்தது காத்தல் எதிரது போற்றல் , .

தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறுத்தல்

மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் . . .

வந்தது கொண்டு வாராத துணர்த்தல் . . .

இனத்தில் சேர்த்தல் . . . முறைபிறழாமை . . .

நுனித்தகு புலவர் கூறிய நூலே [4]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கேற்ப தமிழர் பழைய மரபினைப் போற்றினர். புதிய புதிய கருத்து விளக்கங்களையும் செய்திகளையும் ஏற்றுக் கொண்டனர். அவற்றைத் தொகுத்தும் வகுத்தும் மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தும் இனத்திற்சேர்த்தியும் முறைபிறழாதும் பற்பல உத்திகளைக் கையாண்டு தாம் கண்டறிந்த நன்மைகளைச் சமூகத்தின் தன்மையையும் நன்மையையும் நோக்கிப் பயன் படுத்தினர்.

அவ்வாறு பயன்படுத்துங்கால் தொகுத்தவற்றுள் சமூக நன்மைக்கு ஏற்றனவற்றை இனம் இனமாக 'வகுத்து மெய்ந்நிறுத்தியும்' 'முறை பிறழாமையும்' 'இறந்தது காத்தலும்' 'எதிரது போற்றலும்' 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தலும்' 'ஒப்பக் கூறலும்' 'இனத்திற் சேர்த்தலும்' 'உய்த்துக்கொண்டு உணர்தலும்' போன்றவற்றை ஆய்வின் வரிவடிவமாக நூலமைக்கும் முறைகளாக அமைத்துக் கொண்டனர்.

இம்முறைக்குச் சான்றுகவும் விளக்கமாகவும் தமிழர் கல்வியின் நோக்கம்

எதுவாக இருந்தது என்று இவ்வாய்வில் ஆய்ந்ததை எடுத்துக் கொள்வோம்.

மேற்குறித்த பலரொடும் பலகாலும் ஆய்தல் என்ற கருத்து, ஒருவருடன் ஒருவர் முகம் நோக்கி ஆய்கின்ற காலத்துத்தான் இயலும்; ஆயின் பழந்தமிழர் கல்விநோக்கினை ஆய்கின்றபோது அவர்தம் நூல்களுடன் மறைமுக உரையாடல் மூலமே பெற இயலும் என்று கொள்ளப்படும்.

அடுத்து, கல்வி நோக்கம்பற்றி அறிவதற்குத் துணையான கல்வி பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களிலிருந்து எடுக்கப்படுகின்றன. எடுக்கப்பட்ட இச் செய்திகள் 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்' 'எதிரது போற்றல்' போன்ற விதிகளின்படி – உத்திகளின் படி – தற்காலக் கல்வி இயலார் மொழிகின்ற 'நோக்கம்' என்ற பொருளோடு ஒன்றுமாறு தொகுக்கப்படுகிறது. இவ்வாறு தொகுக்கப்பட்ட செய்திகளை 'நோக்கம்' என்ற தலைப்பில் 'இனத்திற் சேர்த்தல்' உத்திப்படி அமைக்கப்படுகின்றது. இவ்வாறு கையாண்ட ஆய்வு முறையின் விளைவாகக் கிட்டிய தமிழரின் கல்வி நோக்கமாவது:

குற்றம் நீங்குதற்கும், நீக்குதற்கும் கற்றல் வேண்டும்: அவ்வாறு கற்ற பிறகு கற்றதற்கேற்ப வாழ்க்கை நடத்துதல் வேண்டும் என்று கல்வியின் இம்மை நோக்கம் பற்றிக் குறள் கூறுகிறது. [5] மேலும் கற்றதன் பயன் தூய அறிவினை உடைய இறைவனுடைய நலம் தரும் பாதங்களைப் பற்றுதலே என மறுமை நோக்கம் பற்றித் திருக்குறள் கூறுகிறது. [6] உலகத்தோடு பொருந்த நடத்தலைக் கல்லாதவர் அறிவில்லாதவராவர் எனவும் [7] அரத்தைப் போலக் கூர்மையான அறிவுடையவராயினும் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம் இவற்றுலான பண்பினைப் பெறாதவர் மரத்துக்கு ஒப்பாவார் எனவும் [8] திருக்குறள் கூறுகிறது. இதனால் உலகத்தோடு ஒத்து வாழுகின்ற கல்வி நோக்கமும் மக்கட்பண்போடு வாழுகின்ற கல்வி

பெறப்படுகின்றன.

"இவ்வுலகத்து புகழோடு விளங்கி மறுமை உலகத்தினையும் தவறுமல் எய்தும் தன்மையினையும் பகைவரும் விரும்பும் சிறப்பினையும் நல்ல இல்லறத்தோடு கூடிய வாழ்வினை நடத்தி நன்மக்களைப் பெறுதலையும் அடைகின்றவரே உயர்ந்தோர்" [9] என அகநானூறு கூறுகிறது. இதனுல் இல்லற நோக்கமும் புகழ் பெற்று வாழ்தல் நோக்கமும் நன்மக்களைப் பெறும் நோக்கமும் பெறப் படுகின்றன.

"நன்மக்களைப் பெற்றெடுத்து உலக நன்மைக்கென அளித்தல் தாயின் கடமையாகும். அம்மக்களைக் கல்வி கேள்வி அறிவுடைய சான்றோராக்குதல் தந்தையின் கடமையாகும்" [10] எனப் புறநானூறு கூறுகிறது. இதனுல் நன்மக்களைப் பெறும் நோக்கமும் அவரைச் சான்றோராக்கும் நோக்கமும் பெறப்படுகின்றன.

செய்யும் தொழில் ஆடவர்க்கு உயிர் போன்றதாகும் எனக் குறுந்தொகை கூறுகிறது. [11] இதனுல் வாழ்வின் நோக்கம் — கல்வியின் வாயிலாக நிறைவேற்றப்படும் வாழ்வின் நோக்கம் — தொழில் செய்தல் என்பது பெறப்படுகிறது.

காமம் நீங்கிய காலத்துக் கணவனும் மனைவியும் மக்களிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டு அறத்தை விரும்பும் சுற்றத்தாருடன் சிறந்த பொருளாகிய இறைவனைப் பற்றும் வாழ்வு நடத்துதல் [12] நோக்கம் தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படுகிறது.

இவற்றால்

கற்றல் நோக்கங்களை 'உய்த்துக் கொண்டுணர்தல்'
'வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்' உத்திப்படி
தமிழர் கல்வி நோக்கம் பெறப்படும்.

தற்காலக் கல்வி இயலார் கல்வியின் நோக்கங்களாக 1) அறிதல் 2) தொழில் 3) ஒழுக்கம் 4) நாகரிகமடைதல் 5) நிறைந்த வாழ்வு 6) ஆன்மீக வளர்ச்சி [13] எனக் குறிப்பிடுவர் என்பது ஈண்டு ஒப்புநோக்கி உணரற்பாலதாம்.

இவ்வாறு விவாதித்துக் கட்டவகைளைத் தொகுத்து நூலிக்கின்ற மேற்கூறிய உத்திகளையும் கண்டுரைத்துச் சமூக நலன் விளைத்தனர். அப்படி ஆக்கப்பட்ட நூல்கள் இக்கால நோக்கில் 'ஆய்வுக் கட்டுரைகள்' எனக் குறிக்கப்படலாம்.

இவ்வாறு 'தமிழர் கல்வி நோக்கத்தை ஆய்ந்து கண்டாற்போலவே கல்வித் தத்துவத்தின் ஏனைய பகுதிகளான உள்ளீடு, ஆசிரியர்-மாணக்கர் செய்தி, கற்பிக்கும் கற்கும் முறைகள், ஒழுக்கம், கல்வி நிலையங்கள் முதலியனவும் ஆய்ந்து கூறப்படும்.

இனி மேலுட்டுப் புதிய ஆய்வு முறைகளை ஒருபுடை நோக்கி அறிதல் ஒப்பீட்டு ஆய்வாக அமையுமாதலால் அவற்றை அறிவோம்.

## 3-2: ஆய்வின் தோற்றமும், வளர்ச்சியும்:

அறிவியல் வளர்ச்சி மிக்க காலம் இது. இயற்கையில் ஐம்பெரும் பூதங்களாக காற்று, நெருப்பு, நீர், நிலம், ஆகாயம் பற்றி மனிதம் ஆய்ந்து பார்த்து அவற்றை வெல்லவும் தனக்குத் துணையாகக் கொள்ளவும் நினைக்கிறான்.

மண்ணையும், விண்ணையும் கடலையும் அளந்து ஆராய முற்படுகிறான். பொறியியல், மருத்துவம், கல்வி, சமூக நலன் முதலியவற்றிற்கு நலம் செய்யும் வகைகளை ஆய முற்படுகிறான்.

மனித சமுதாயத்தில் பல சிக்கல்கள் தோன்றுகின்றன. தனி மனிதனோ சமூகமோ அச் சிக்கல்களை நீக்கிச் சீராக்குவதற்கும், அச்சிக்கல்களைத் தீர்ப்பதற்கும் உரிய முறையை எண்ணுகின்ற முயற்சியே ஆய்வு எனப்படும். மனிதன் தோன்றிய நாள் முதல் சிக்கல்கள் தொடர்ந்து கொண்டேயுள்ளன. அவை தீர்க்கப்பட்டும் உள்ளன. இச்செயல் ஆய்வு முறையாகவே நிகழ்ந்தது தான். சிக்கலைத் தீர்க்க எடுத்துக் கொள்ளும் முயற்சி அளவும் கால அளவும் இடந்தோறும் மாறுபடக் கூடியவை. சிக்கலை மனிதன் தன் அறிவாலும், அனுபவத்தாலும் செயல் முறையாலும் தீர்க்கிறான். தீர்க்க எடுத்துக் கொள்ளும் முயற்சியே ஆய்வு. இவ்வாய்வு தனி மனிதனுடைய முயற்சியாகவோ குழுவாலோ நடைபெறலாம். இவ்வாய்வு நிகழ்வதற்கு வேண்டிய மூலப் பொருள்களையோ துணைப் பொருள்களையோ தொகுத்தலும் தொகுத்தவற்றை வகுத்து ஆராய்தலும் மெய்ம்மை காணலும் ஆய்வின்படி-நிலைகளாகும். ஆகவே தான், மௌலி என்பார் "பொருள்களைத் திட்டமுறைப்படி அமைத்தும் சேர்த்தும் பகுத்தும் விளக்கியும் கூறிச் சென்று முடிவு காண் முறையே ஆய்வாகும்" [14] என்றார்.

3-3: ஆய்வின் தொன்மை:

மனித வாழ்வு தோன்றியதிலிருந்து சிக்கலும் அவற்றைத் தீர்க்கும் ஆய்வும் நடந்து கொண்டேயிருக்கின்றன.

ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம் [15]

என்பது தொல்காப்பியம். நுணுக்கமாக - நுட்பமாக - ஒரு பொருளை

ஆராய்கின்ற செயலே ஆய்தல் எனப்படும்.

> நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
> மண்மாண் புனைபாவை அற்று [16]

என்பது திருக்குறள். நன்கிதாகப் பல நூல்களையும் ஆய்ந்து பார்க்க முயலாதவனுடைய அழகும் எழுச்சியும் மண்ணால் மாட்சிமைப்படப் புனைந்த பாவையின் எழுச்சியும் அழகும் போன்றது.

> வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
> ஆராய்வான் செய்க வினை [17]

என்பது குறள். ஈண்டு ஆராய்வான் என்பதற்கு நாள் தோறும் ஆராய்கின்றவன் என் பொருள் கூறப்படுகிறது.

> அறிவுரு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன்
> செறிவுடையான் செல்க வினைக்கு [18]

என்ற திருக்குறளில் ஆராய்ந்த கல்வி என்பதற்குப் பலராலும் பலகாலும் ஆராயப்பட்ட கல்வி எனப் பொருள் கூறப்படுகிறது.

> அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்
> செறிதோறும் சேயிழை மாட்டு [19]

அறிவுக்கு எல்லையின்மையின் மேன்மேலும் நூல்களானும் நுண் உணர்வானும் பொருள்களை அறிய அறிய முன்னை அறியாமை கண்டாற்போலும் என்ற உரை கூறிச் செல்கின்றது.

ஆகவே, ஒரு கருத்தையோ பொருளையோ சிக்கல்களையோ பற்றித் தனித்தும் பலரொடும் பலகாலும் ஆழமாக எண்ணிப் பார்க்கு செயலே

ஆய்வு ஏற்படும் என்பதை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட இந்நூல்கள் கூறுகின்றன.

"ஆய்வு என்பது முறையானது; திட்டமிட்டது; ஆழமானது; அறிவியலால் பகுத்து நடத்திச் செல்லப்படுவது"[20] என்று பெஸ்ட் கூறுகிறார்.

3-4: நோக்கம்:

வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை முறையாகத் தீர்த்துச் சீர் படுத்தும் நெறி முறையின் கருதுகோளே ஆய்வின் தொடக்கமாகும். சீர்படுத்திச் செம்மை பெறுவது ஆய்வின் நோக்கமாகும். மருத்துவம், கல்வி, சமூக நலன் முதலிய இன்றியமையாத் துறைகளுக்கு நலம் செய்யும் நோக்கமே ஆய்வின் நோக்கமாகும்.

"கல்வி பற்றிய ஆராய்ச்சியை விட உடனடியானது ஆய்வு பற்றிய கல்வி அறிவே".[21]

ஆய்வு என்பது மனித முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆய்வின் குறிக்கோள் மனித முன்னேற்றமும் சீரான வாழ்வுமே.[22] அதனால் தான் பல கண்டுபிடிப்புகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

"பத்தொன்பதாம் நூற்றாண்டின் மிகப் பெரிய கண்டுபிடிப்பு முறை யாதெனில் கண்டுபிடிப்பு முறையைக் கண்டுபிடித்ததேயாகும்"[23] என ஆல்பிரெட் நார்த் ஒயிட் எட் கூறினார்.

ஆய்வுகள் ஆய்வுக்காகவே நடைபெறலாம். தனி மனித முன்னேற்றத்திற்கென நடைபெறலாம். சமூக நன்மைக்காகவும் நடைபெறலாம். தனி மனித ஆய்வும் சமூக நல ஆய்வும் உடனடியாக மேற்கொள்ளவேண்டிய

ஆய்வுகளாம். ஆய்வுக்காக நடைபெறும் ஆய்வுகள் மிகப் பெரும் செல்வத்தைச் செலவிடுகின்றன. அறிவியல் ஆய்வுகளை விட மனித–இயல் ஆய்வுகளே உடனடியாகத் தேவைப்படுவனவாம். மனிதகுல நன்மைக் கென மேற்கொள்ளப்படவேண்டிய ஆய்வுகளையே இன்று பெரிதும் வற்புறுத்துகின்றனர். அறிஞர் அறிவியலால் பெற்ற நன்மையை மக்கள் நுகர்தற்கும் அமைதியாக வாழ்தற்கும் மேற்கொள்ளப்பட வேண்டியவை சமூகஇயல் ஆய்வுகளே.

"தற்போது மனித வாழ்வு சீர்படுதற்கேற்ற முன்னேற்ற வளர்ச்சியில் ஈடுபடுதல் அவசியம்" [24] என்று பெஸ்ட் கூறுகிறார்.

"ஆய்வு நிகழ்த்தாமலேயே அறிவாளி ஆகக் கூடும். ஆனால் நெறி முறை அறிவின்றி ஆய்வு நிகழ்த்த இயலாது" [25] என்று பெஸ்ட் கூறுகிறார்.

ஆகவே, ஆய்வு நெறிமுறைகள் ஆய்வுக்குப் பெரிதும் பயன்படுவன, அவை பற்றிய செய்திகளை இனிக் காண்போம்.

## 3–5: ஆய்வு முறைகள்:

"சிக்கல் தோன்றுமிடத்தில் தீர்வு காணும் ஆர்வமும் அவ்வார்வத்தின் வழி ஆய்வும் தோன்றுகின்றன. மாந்தர் தம் வாழ்வு சிக்கல்கள் நிறைந்ததாக இருப்பதும் அச்சிக்கல்களைத் தீர்ப்பதில் அவர்கள் காட்டும் உறுதிப்பாடுமே ஆய்வு பிறக்கக் காரணம் எனலாம்" [26] என்று கூறுவர்.

ஆய்வென்பது அறிவை அடிப்படையாகக் கொண்டு தோன்றி கிளைத்துப் பரவி மலர்வது. மேனாடுகளில் ஆய்வியல் முறைகள் பலவாகத் தோன்றிப் பெருகியுள்ளன.

"கூர்ந்து நோக்குவதும் அதனுல் கிடைக்கும் புள்ளி
விவரங்களைத் தொகுப்பதும் அவை அனைத்தின் ஊடே
மறைந்திருக்கும் ஒரு பொதுமையைக் காண்பதும் அதனுல்
விதி பெறுவது அறிவியல் ஆய்வின் படி நிலைகளாகும்." [27]

இதன் படிநிலைகள் மேலும்

1) ஆய்விற்குத் தேவையான கருதுகோளை முறைப்படுத்திக் கூறுதல்.
2) நன்குக் கவனித்துத் தொகுக்கப்பட்ட மெய்ம்மைகளைப் பதிவு செய்தல்;
3) மெய்ம்மைகளைப் பகுத்து ஆய்தல்
4) அவ்விதிகளைப் பொதுமைப் படுத்திப் பார்த்துக் கிடைக்கும் முடிவுகளைக் கூறல்[28] என்பர்.

<u>3-5-1: செய்முறை:</u> செய்முறை ஆய்வென்பது முறைப்படுத்தப்பட்ட சூழல்களில் என்ன நிகழும் என்பதைப் பகுத்தும் விரித்தும் கூறும் ஆய்வாம்.[29]

உன்ட் என்பாரே முதல் முதலில் 1879-ல் 'லீப்சிக்' என்ற இடத்தில் உளவியல் சோதனையை நடத்தினர்.

ஆய்வுச் சிக்கல் தொடங்கி சிக்கல் வளர்ந்து கருதுகோளாகி கூர்ந்து நோக்கிக் குறிப்பெடுத்துப் பொதுமைப்படுத்தல் உருவாகி மீண்டும் சோதனைக் குள்ளாகி அடிப்படை 'விதி' கண்டு பிடிக்கப்படுகிறது. ஆய்வுக்கூடம் பெரும் பங்கு வகிக்கிறது.[30]

மேலும் செய்முறையை

1. எளிய முறை ஆய்வுத் திட்டம்
2. பல பகுப்புத் திறனாய்வு
3. தனி ஆய்வு
4. ஒப்பீட்டாய்வு[31]

எனவும் பிரிப்பர்.

மேலும் செய்முறை ஆய்வினை

1. சிக்கல் காணல்
2. கருதுகோள்
3. பொருள்
4. வரையப்பட்டதும் விவரிக்கப்பட்டதுமான கருவிகள்
5. செயல்முறை
6. தெரிபொருள்
7. பொதுமைப்படுத்திய முடிவுகள்
8. பொதுக் களத் தொடர்பு [32]

எனச் சட்டகம் குறிப்பர்.

இத்துடன் செய்முறையின் அடிப்படை முறைகளை ஜான் பெஸ்ட் ஆய்கிறார்.

அதனுடன் தனி ஆய்வைச் சேர்த்து ஆராய்கிறார் 'டைரஸ் உறில்வே' [33] என்பவர்.

அத்துடன் வரலாற்று ஆய்வை நம்பிக்கையின்றி நீக்கிப் புதிய அமைப்பை 'டிராவர்ஸ்' [34] என்பார் கூறுகிறார்.

இத்துடன் தொடர்புடைய காரண காரியப் பகுதியைச் சேர்த்து 'கார்ட்டர்' [35] முதலியோர் ஆய்கின்றனர்.

இத்துடன் விளக்க முறையையும், அளவை முறையையும், தொடர்பு முறையினையும் மருத்துவமனை முறையினையும் 'ப்ரான்சிஸ்' [36] என்பவர் ஆராய்கிறார்.

<u>3-5-2: வரலாற்று ஆய்வு முறை:</u> கடந்த காலத்தைப் பற்றி அக்கறை கொள்கின்றவன் மனிதன் ஒருவனே. கடந்த கால நிகழ்ச்சிகளை அடிபற்றிய ஆய்வு இது. உண்மையை நிலை நிறுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்டு

கருத்து மிக்க ஆராய்ச்சி உணர்வோடு எழுதப்பட்டு மெய்ம்மைகளும் வரலாற்று ஆய்வு எனப்படும்.[37]

கடந்த கால நிகழ்ச்சிகளை அறிவியல் முறையில் ஆய்ந்து நிகழ்கால்ச் சிக்கல்களைத் தீர்ப்பதுடன் எதிர்காலம் கருதியும் செய்யப்படும் ஆய்வு வரலாற்று ஆய்வாம்.

<u>வரலாற்று மூலங்கள்</u>:

வரலாற்று ஆய்வுக்குத் துணையான மூலப் பொருள்களை மூன்று வகையாகப் பிரிப்பர். (1) முதன்மை மூலங்கள் (2) துணை மூலங்கள் (3) சார்பு மூலங்கள். இம்மூவகை மூலங்களுடன் பொருத்திப் பார்க்கப் பட்டு உறுதியோடு கூடிய கருதுகோள் தோன்றி ஆய்வு தொடங்கித் தெரி பொருள் சான்றுகள் தொகுக்கப்பட்டு, வகுக்கப்பட்டு ஆராய்ந்து மீண்டும் மூலங்களுடன் ஒப்பிட்டுச் சரிபார்க்கப்பட்டு முடிவுகள் வெளியாகின்றன.

"மேலும் வரலாற்று ஆய்வினை (1) வரலாறு (2) நீதி (3) (3) அவைச் சான்று என மூன்றுகப் பிரிப்பதும் உண்டு"[38]

வரலாற்று ஆய்வில் (1) சிக்கலும் (2) தரவு சேர்த்தலும் (3) பொதுமைப் படுத்தி உண்மை நாட்டலும் (4) விதி கூறலும் அமையும்.

<u>மூலங்கள்</u>:

மூலங்களே வரலாற்று முறையில் அடிப்படையாகும்.

(1) <u>முதன்மை மூலங்கள்</u>: நிகழ்ச்சியை, கூற்றினை அப்படியே காட்டுவன முதன்மை ஆதாரங்களாம். இதன் மற்றொரு பிரிவு பகுப்பு முறை ஆய்வாகும்.

அடிப்படையான ஆய்வு முறைகளில் பகுப்பு ஆய்வும் ஒன்று. சிக்க லையும் சம்பந்தப்பட்ட பெரும்பகுதியையும் எடுத்துக் கொண்டு அவற்றைச் சிறு பகுதி பகுதியாகப் பிரித்துக் கொண்டு ஆயும் முறை இது.

(2) <u>துணை மூலங்கள்</u>: மூலச் சான்றுகளுடன் இரண்டாவது

இடைப்புகுந்து வருகின்ற ஆதாரங்களாகும்.

(3) சார்பு மூலங்கள்: முதல், துணை மூலங்களைத் தவிர வெளி வரும் பிற யாவும் சார்பு ஆதாரங்களாகும். எல்லா ஆய்வுகளும் முதன்மை மூலம் கிடைக்கப்பெறு, அப்போது துணை மூலங்களையும் சார்பு மூலங்களையும் பயன் படுத்தலாம்.

வரலாற்று ஆய்வில் தெளிந்த அறிவும் நடுநிலை உள்ளமும் உண்மையை ஒப்புக் கொள்ளும் உள்ளமும் தேவை.

ஆவணச் சான்று முறை:

குறிப்பேடுகளையும் ஆவணங்களையும் அடிப்படையாகக் கொண்ட ஆய்வு இது. தாழிகள், இயற்கை மூலப் பொருள்கள், பாறைகள், பூச்சிக் கூடுகள், எலும்புச் சின்னங்கள் யாவும் இவற்றில் அடங்கும்.

முடிவு:

1. நம்பத் தகு சான்றுகள் கிடைத்தல் அரிது ஆதலின் வரலாற்று ஆய்வு கடினமாக உள்ளது.

2. உறுதிப் படுத்துவதற்கு அறிவியல் முறை ஆய்வு போல எளியதாக இல்லை.

3. மூலச் சான்றுகளைத் தவிர மற்ற சான்றுகளில் ஐயம் ஏற்படுதல் இயல்பு. எனினும் வரலாற்று ஆய்வு எல்லா அறிஞராலும் ஏற்றுக் கொள்ளப் பட்ட ஒன்றாகும்.

3-5-3: அளவு ஆய்வு: வரலாற்று ஆய்வு இறந்த காலத்துடன் தொடர்புடையது போல அளவு ஆய்வு நிகழ் காலத்துடன் தொடர்புடையது. ஆராயப்படும் ஒன்றின் தரத்தை உறுதி செய்ய முற்படுகிறது. செம்மையான ஆய்வு முறைகளில் ஒன்று. கல்வியியல், உளவியல், பொருளியல், சமூக வாழ்வியல்

போன்ற துறைகளில் இது பயன்படுகிறது. [39]

1. குறிப்பிட்ட செய்தியை அறியவும்,

2, சமுதாயப் பழக்க வழக்கம் உறவு முறைகளை உறுதி செய்யவும்,

3. ஒரு நிகழ்வினை விளக்கவும்

இம்முறை பயன்படும். [40]

"அளவாய்வின் குறிக்கோள் தற்கால உலகின் இயற்கைப் பொருள்களை ஆய்ந்தறிதலே". [41]

அளவாய்வு என்பது உடனடியானதும் பரந்துபட்டதும் ஆகும். சிக்கலுடன் தொடங்கி உறுதியான பொதுமைப் படுத்தல்களுடன் நிறைவு பெறுகிறது.

கேள்வித் தாள்களின் மூலமும், நேரடிப் பேட்டி மூலமும் அளவு ஆய்வினைத் திறம்பட நடத்தலாம்.

<u>அளவு ஆய்வின் வகைகள்:</u>

(1) <u>விளக்க உரை அளவு ஆய்வு:</u> இவ்வாய்வு குறிப்பிட்ட நிகழ்வு ஒன்றின் தற்போதைய நிலையை விளக்குவதாகும்.

(2) <u>பகுப்பு அளவாய்வு:</u> இவ்வாய்வு குறிப்பிட்ட ஒன்றை அதன் அடிப்படைக் கூறுகளுக்கேற்பப் பகுத்து ஆய்வது.

(3) <u>பொது அல்லது சிறப்பு ஆய்வு:</u> இவ்வாய்வு குறிக்கோளோ முற்கோளோ இன்றி எடுத்துக் கொள்ளப்படுவது என்றெல்லாம் பகுப்பர்.

(4) <u>சுற்று ஆய்வு:</u> இவ்வாய்வு கால இடைவெளிகளுக்கு இடையே திரும்பத் திரும்ப நடைபெறுவது.

(5) தொடர்பட்ட ஆய்வு: இவ்வாய்வு ஒரு முறையோடு கூடி வருவனவும் முடிவனவும் ஆகும்.

(6) முடிநிலை ஆய்வு: வழிகாட்டி ஆய்வுக்குப் பின் முடிநிலை ஆய்வு தொடங்கும்.

(7) முழுக் கணிப்பு ஆய்வும் முன்மாதிரி ஆய்வும்: அனைத்து மக்களைப் பற்றியும் அல்லது நிறுவனங்கள் பற்றியும் தேவையான தகவல்கள் யாவும் ஒரு அளவெடுப்பின் மூலம் பெறுதல்.

இவற்றின் கருவிகளும் உத்திகளும்:

1. வகைப்படுத்துதல்
2, வினாத்தாள்
3. பேட்டி
4. அட்டவணை
5. உற்று நோக்கல் எனவும் கூறுவர். 42

3-5-4: புள்ளிவிவர ஆய்வு: புள்ளி விவர ஆய்வு சமூகத்திலிடையே நிலவும் நிலையை எடுத்துக் காட்டுவன.

புள்ளி விவர ஆய்வென்பது இன்றியமையாத ஓர் ஆய்வுக் கருவியாகும்.

வருமானம், செலவு, மக்கட் தொகைப் பெருக்கம், மருத்துவம், முதலிய துறைகளில் பயன்படுவன. திறனாய்வுக்கும் பயன்படும். எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்ட ஆய்வு முறை.

இதன் செயல்களாவன:

1. புள்ளி விவரங்களைத் தொகுத்தல்
2. அவற்றை வகைப்படுத்துதல்
3. ஒப்பிட்டாய்தல், என்ற படி நிலைகளில் இவ்வாய்வு நிகழ்கிறது.

சமூக ஆய்வுகளில் பெரும் பங்கு வகிப்பது புள்ளி விவர ஆய்வேயாகும். தெளிவடைவதற்கு வழிகாட்டுவதும் ஒப்பீட்டுக்கு வழி செய்வதும் இதன் தன்மைகள் ஆதலால் யாவரும் புள்ளி விவரங்களை விரும்பி இவ்வாய்வை மேற்கொள்ளுகின்றனர். சமூக நிலைகளை உள்ளவாறே காட்டும் தன்மையுடையது. இதனால் பல மாற்றங் களைச் செய்ய உதவுகிறது. சமூகத்திலுள்ள நிலைகளைக் காட்டும் இவ்வாய்வு அந்நிலைகளின் காரணங்களை விளக்கிக் காட்டுவதில்லை. எப்படியிருக்கிறது என்பதை இவ்வாய்வு காட்டுமேயன்றி ஏன் இவ்வாறு இருக்கிறது என்று காட்டு வதில்லை.

இதை இரு வகையாகப் பகுப்பதுண்டு. ஒன்று விளக்க முறைப் புள்ளி விவர ஆய்வு; இரண்டு நடைமுறைப்புள்ளி விவர ஆய்வு.

இயற்கைக் கூறுபாடுகளை ஒருங்கிணைத்து விளக்கமாகக் கூறுவதற்கு விளக்க முறைப்புள்ளி விவர ஆய்வு பயன் படும்.

நடைமுறைப்புள்ளி விவர ஆய்வானது தரவுகளைத் தொகுத்து நிலையான முடிவு காட்டுதற்கு வழி செய்கிறது.

<u>3-5-6: தருக்கமுறை ஆய்வு:</u> தருக்கங்களை வழியாகக் கொண்டு உண்மை காண முயலும் ஆய்வே தருக்க முறை ஆய்வாம். மிகப் பழைய ஆய்வு முறை இது. சமயத் துறையில் பெரும் பங்கு கொண்டது. காரணகாரியத் தொடர்பு, தருக்க மூலம் உண்மை நிலைநாட்டல் இதன் படி நிலைகளாகும். உலகத்தின் எந்தச் சமயவாதியும் தத்துவ அறிஞரும் தருக்க முறையையே ஆய்வு நிகழ்த்துதற்கு அடிப்படையாகக் கொள்கின்றனர். கணிதம், அறிவியல் போன்ற தற்காலத் துறைகட்கு அடிப்படையானது தருக்கமுறை ஆய்வேயாகும்.

3-5-6: தனிநிலை ஆய்வு முறை: தனிப்பட்ட மனிதனையோ குழுவையோ இனத்தையோ நாட்டையோ எடுத்துக் கொண்டு காரண காரியத் தொடர்பை ஆய்வது இம்முறையாகும். கல்வி இயற்கைச் சூழ்நிலை ஆய்வு குறித்து - அதன் தொடர்பு குறித்து - ஆய்வதற்குத் தனி நிலை ஆய்வு முறை பயனுள்ள முறையாக அறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்படுகிறது.[43]

கல்வி, விஞ்ஞானம், மருத்துவம், உளவியல், பொருளியல், அரசியல் சமூக இயல், ஆகியவை இத்தனி ஆய்வு முறையை மேற்கொள்கின்றன. உற்று நோக்கல் மூலமோ அளவியல் மூலமோ தற்போதைய குறிப்பிட்ட துறையில் நிலையைக் குறித்துக் கொள்ளுதல், அறிந்ததன் மூலம் ஒரு கருதுகோளினை எடுத்துக் கொள்ளுதல், தொடர்புடைய தரவுகளைச் சேகரித்தல், கருது கோளுக்கேற்பத் தரவுகளை வகைப்படுத்தல், பிறகு கருதுகோளைச் சரி பார்த்தல் உண்மை காணல், எனப் பலபடி நிலைகளில் இத்தனிநிலை ஆய்வு அமையும்.

3-5-7: தனிநிலை வரலாறு: குறிப்பிட்ட உயர்வுக்காகத் தனியொரு மனிதனை எடுத்துக் கொண்டு அவனுடைய தோற்றம், வளர்ச்சி, செயல் முதலியவற்றை ஆய்கின்ற ஆய்வு நூல். ஒருவருடைய வாழ்க்கை வரலாறு பற்றிய நேரடிச் செய்திகள், கர்ண பரம்பரைக் கூற்றுக்கள், ஆவணச் சான்றுகள் யாவும் இவ்வாய்வுக்குப் பயன்படும்.

3-6: இவ்வாய்வுக்குரிய ஆய்வு முறை:

சங்க காலத் தமிழரின் கல்வித் தத்துவம் பற்றி ஆராய்கின்ற இவ்வாய்வில் அடிப்படையாகப் பயன்படுவன தொல்காப்பியம், திருக்குறள், பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன. ஆய்வுக் கேற்ற முறையில் இந்நூல்களைத் தொகுத்துக் கொண்டும் வகை வகையாக வகுத்துக் கொண்டும் ஆய்வு செல்கிறது. ஆகவே இவ்வாய்வு

முறையில் அளவியல் முறையில் ஒன்றான பகுப்பு முறை ஆய்வு ஈண்டு பெரிதும் மேற்கொள்ளப்படுகிறது.

பகுத்து ஆய்தல் அறிவியல் அடிப்படை பொருந்தியதாகும். பகுத்தாய்தல் விளக்கமுறை ஆய்வுடன் தொடர்புடையது. இயற்கையைப் பகுத்தலென்னும் முறையில் மதிப்பு முறை ஆய்வே பேரிடம் பெறுகிறது. இவ்வாய்வு பொருள் பொதி பகுப்பாய்வு என்றும் மூலச் சான்றுப் பகுப்பாய்வென்றும் கூறப்படுகிறது. பொருள் பொதி பகுப்பாய்வு உரையுடனும் நூல்களுடனும் வெளியீடுகளுடனும் கட்டுரைகளுடனும் தொடர்புடையதெனலாம்.

அளவு ஆய்வு நிகழ்காலம் பற்றியதென்பர். ஆயினும் நுணுகி நோக்கின், நிகழ்காலமே இல்லையென்த் தமிழ் இலக்கண இயலார் கூறுவர். ஆகவே, கடந்த காலத்தை அடியாகக் கொண்ட ஆய்வுக் குரிய நூல்களைத் தொகையாக்கியும் பாடல்களை அளவு ஆய்வு செய்தும் அவற்றின் கல்வித் தத்துவத்திற்கேற்றவற்றைப் பகுத்தும் மேலும் அவற்றையே பல உட்பிரிவுகளாகப் பகுத்தும் இவ்வாய்வு அமைவதால் பகுப்பு முறைத்திறத்தையே இவ்வாய்வாளர் மேற்கொண்டு செல்கிறார். தொகுப்பையும் பகுதி பகுதியான பகுப்பையுமே அடிப்படை முறையாகக் கொண்டு இவ்வாய்வு செல்கிறது. வரலாற்று முறை ஆய்வில் பொதுவாகப் பயன்படக் கூடிய கல்வெட்டுக்கள், சின்னங்கள், எலும்புக் கூடுகள் போன்ற சான்றுகள் இன்றி சங்கத்தமிழர் காலம் பல அறிஞரால் வரையறுக்கப்பட்டுள்ளதால் அவற்றையே அடிப்படையாகக் கொண்டு ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. சங்க காலம் பற்றிய முற்கூறிய துணைகளின்றி, அக்காலத்து எழுதப்பட்ட இலக்கியச் சான்றுகளையே மூலச் சான்றுகளாகக் கொண்டு ஆய்வு செல்கிறது. வரலாற்றுக் காலத்தை அடியாகக் கொண்ட முறை இவ்வாய்வில் இடம் பெறுதலால் வரலாற்று முறை ஆய்வு முறையும் ஆய்வாளரால் மேற்கொள்ளப்பட்டது.

கி.மு.300 முதல் கி.பி.300 வரை எனக் கடந்த கால வரையறையை எடுத்துக் கொண்டு செல்வதாலும் தொல்காப்பியம், திருக்குறள், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, இரட்டைக் காப்பியங்களின் மூலங்கள், முதன்மை மூலங்களாகவும் அவற்றின் உரைகள் துணை மூலங்களாகவும் இவற்றைப் பற்றிய மொழிபெயர்ப்புகளும் ஆய்வு நூல்களும் கட்டுரைகளும் சார்பு மூலங்களாகவும் கொண்டு வரலாற்று முறை ஆய்வும் பயன் படுத்தப்பட்டுள்ளது.

தமிழர், கல்வியை வளர்ப்பதற்கென ஒன்று கூடிச்சங்கத்தில் விவாதித்து ஆராய்ந்து நலம் பயக்கின்றவைகளைச் சமூகத்தின் நன்மைக் கெனப் பயன் படுத்தும் நோக்கத்தோடு நூல் பலயாத்தனர் என்பது வரலாறு. அவ்வாறு நூல் ஆக்குதற்கெனக் கூறப்பட்ட உத்திகளை இக்கால ஆய்வுத் துறையில் ஆய்வு முறைகள் எனக் கூறுதல் பொருந்தும். ஆய்வு ஆய்வுக்கன்றி சமூகத்தின் நன்மைக்கே என்பது தமிழ் நூல் துணிவாகும்.

ஆகவே, ஆய்வாளர் பழந்தமிழ் இலக்கியங்கள் அமைதற்கேதுவான தமிழறிஞர் கூறிய உத்திகளை அடிப்படையாகக் கொண்டும், இக்காலத்தில் மேலை நாட்டார் ஆய்வு முறைகளைத் துணையாகக் கொண்டும் ஆய்வினை இயக்கிச் செல்ல முற்படுகிறார்.

அடிக்குறிப்புகள்:

1. கலி 68.

2. குறள் 175.

3. தொல் 813.

4. தொல் 1610.

5. குறள் 391.

6. குறள் 2.

7. குறள் 140.

8. குறள் 997.

9. அகம் 66.

10. புறம் 312.

11. குறு 135.

12. தொல் 1138.

13. Bhatia, K.K; Narang, C.L; 1976. Principles and Techniques of Education. Luthiana, Parkash Brothers, P-44.

14. Mouly, J; 1964. The Science of Educational Research, New Delhi, Eurasia Publishing House, P-4.

15. தொல் 813.

16. குறள் 407.

17. குறள் 512.

18. குறள் 684.

19. குறள் 1110.

20. John, W.B; 1963. Research in Education. New Delhi, Prentice Hall of India.

21. Menon, T.K.N; 1971. Elements of Educational Research New Delhi; Allied Publishers Private Ltd. Foreword.

22. Sukhia, S.P; (et al. ) 1966. Elements of Educational Research. New Delhi, Allied Publishers Private Ltd. Foreword, P-1.

23. Alfred North White Head, 1964. Quoted by Mouly, J; The Science of Educational Research, P-14.

24. John, W.B; 1959. Research in Education. U.S.A. Englewood Cliffs, Prentice Hall, P-3.

25. Ibid, P-6.

26. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்.எஸ்; 1977. ஆய்வியல் அறிமுகம், மதுரை, மீனாட்சி புத்தக நிலையம்

27. மேற்படி ப-171.

28. மேற்படி ப-171.

29. John, W.B; 1959. Research in Education, P-125.

30. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்.எஸ்; ஆய்வியல் அறிமுகம் ப-173.

31. Mouly, J; 1964. The Science of Educational Research. P-199.

32. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்,எஸ்: ஆய்வியல் அறிமுகம், ப-174,

33. Tyrus Hill Way; 1956. Introduction of Research. Boston, Houghton, Miffin.

34. Robert Travers, W.M; 1954. An Introduction to Educational Research. New York, The Macmillan Company.

35. Carter, V.Good; Doughlass Scates, E; 1954. Methods of Research, New York, Appleton Century Crofts, Inc.

36. Francis, G.I. Walter Manroe, S; 1953. <u>Productive Methods in Research</u>, Phidetta, Phidelta Kappan.

37. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்.எஸ்: <u>ஆய்வியல் அறிமுகம்</u>, ப-176.

38. Mouly, J; 1964. <u>The Science of Educational Research</u>, P-199.

39. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்.எஸ்; <u>ஆய்வியல் அறிமுகம்</u>, ப-184.

40. மேற்படி ப-185.

41. Mouly, J; 1964. <u>The Science of Educational Research</u>, P-232.

42. பெரிய கருப்பன், இராம இலக்குமணன், எம்.எஸ்; 1977. <u>ஆய்வியல் அறிமுகம்</u>, பக்-186, 187.

43. Sukhia, S.P; (<u>et al.</u>) 1966. <u>Elements of Educational Research</u>, P-218.

## பண்டைய கல்வி அமைப்புக்கள் - சில.

**4-0:**

சங்க காலத்தில் "தமிழ் நாட்டில் கல்வி சிறப்புற்று விளங்கியதென்ப தற்குப் பல சான்றுகள் உள்ளன. சமுதாயத்தின் எல்லா நிலைகளிலும் அரசன் முதல் குடிமக்கள் வரையிலும் கல்வியறிவு பரவிக் காணப்பட்டது. சாதி சமய வேறுபாடின்றி எல்லா மக்களுக்கும் கல்வி புகட்டப்பட்டது. கல்வி ஏற்பாட்டில் பிற கலைகள் புறக்கணிக்கப் படவில்லை. ஆசிரியர், நிலை உயர்ந்து காணப் பட்டது. மாணக்கர் ஆற்றலுக்கேற்ப தனிப்பட்ட முறையில் அன்றைய ஆசிரியர் பாடங்கள் கற்பித்து வந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் காணப்படுகின்றன"[1] எனச் சந்தானம் கூறுகிறார்.

அப்படிப்பட்ட சங்க காலத் தமிழர் கல்வித் தத்துவத்தை ஆயும் முன்னர் நாகரிகம் மிக்க பழைமையான நாடுகள் என்று கூறப்படும் கிரேக்கம், உரோம், வட இந்தியா ஆகிய நாடுகளில் நிலவிய கல்வி முறையைக் காணுதல் பெருநலம் பயக்கும்.

கிரேக்கம் என்பது பழைமை மிக்க இரு வேறுபட்ட நோக்கம், கொள்கை, அமைப்பு முதலியவற்றை உடைய இரு பெரும் நகரங்களைக் கொண்டதாகும். ஸ்பார்ட்டாவும், ஏதென்சும், 140 கல் தொலைவில் அமைந்திருந்தாலும் இரு வேறுபட்ட அமைப்பு உடையவையாதலால், இரண்டும் ஒப்புமைக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

வட இந்தியா தமிழகத்துடன் நெருங்கிய தொடர்புடையது. வட இந்தியாவில் நடைபெற்ற வேத காலக் கல்வி முறை, புத்தக் கல்வி முறை, தமிழகத்தோடு ஒப்பு நோக்கிக் கற்கத்தக்க அளவு பழைமையும், தொடர்பும் உடையதாகும்.

கல்வித் தத்துவத்தில் பொதுவாக இடம் பெறுகின்ற கல்வி நோக்கம், உள்ளீடு, கற்பித்தல் கற்றல் முறை, ஆசிரியர் மாணாக்கர், வாயில், கற்கும் காலம் முதலிய தலைப்புகளில் ஈண்டு கூறப்படும்.

தற்கால இந்தியாவில் நடைபெறுகின்ற கல்வி முறை கிரேக்கத்தில் தோன்றி ஐரோப்பில் தங்கி, ஆங்கிலேயர் மூலம் இந்தியாவிற்கு வந்ததென்பது வரலாறு.

4-1: கல்வி நோக்கம்:

கல்வித் தத்துவத்தில் இன்றியமையாத பகுதியாக உள்ள நோக்கம் பற்றி ஸ்பார்ட்டா கொண்டிருந்த கருத்துக்களைக் காண்போம்.

4-1-1: ஸ்பார்ட்டா: வீரம் மிக்க திறனுள்ள நாட்டைக் காக்கும் போர் வீரர்களை உருவாக்குதல் ஸ்பார்ட்டாவின் கல்வி நோக்கமாய் இருந்தது. ஸ்பார்ட்டர்களும் அடிமைகளும் 1:9 என்ற விகிதத்தில் அமைந்திருந்ததால் எந்த நேரமும் தமக்கு ஆபத்து உண்டு என்ற அச்ச உணர்வுடன் தங்களைக் காத்துக் கொள்ளவும் அடிமைகளை அடக்கி ஆளவும் வீரமே தேவைப்பட்டது. போர்ப் பயிற்சியே நோக்கமாயிற்று.

"ஸ்பார்ட்டா வீரன் போர் செய்ததும் இறந்ததும்
தனக்காக அன்று; தன் நாட்டுக்காகவே, [2]

"ஸ்பார்ட்டாவின் ஒரே நோக்கம் திறமையான நாட்டுப் பற்று மிக்க போர்புரியும் இளைஞர் பெருக்குதலே" [3]

"ஸ்பார்ட்டாவின் கல்வி முறை தனி மனித உரிமை கருதாத நாட்டுச் சேவை செய்வதற்கெனவே அமைக்கப்பட்டது." [4]

இதனுள் தனிமனித உரிமை கருதாத நாட்டுக்கு உழைக்கும் உணர்

மிக்க வீர இனத்தை உண்டாக்குதலே ஸ்பார்ட்டாவின் கல்வி நோக்கம் என்பது தெளிவு.

<u>4-1-2: ஏதென்ஸ்:</u> மனஎழுச்சிகளைப் பயன்படுத்தவும், சமூக அறநெறிப் பண்புகளின் அடிப்படையில் செயல்படும் மன உறுதியை வளர்த்தலுமே ஏதென்சின் கல்வி நோக்கமாகும்.

> "பொது நன்மைக்குப் பயன்படும் தனி மனித வளர்ச்சி வற்புறுத்தப் பட்டது. அத்தீனியர்கள் அழகினையும் தூய உடலையும் அறிவினையும் விரும்பினார்கள்" [5]

'தனி மனித மகிழ்ச்சியும் நாட்டு நலனுமே நோக்கமாக இருந்தது' என்று பிளேட்டோவும், 'அறிவு மிக்க மக்களை உண்டாக்குதலே நோக்கமாக இருந்தது' அரிஸ்டாட்டிலும் குறிப்பிட்டனர். ஆகவே, நடைமுறைப்பயனுள்ள வாழ்விற்கேற்ற கல்வியே ஏதென்சின் கல்வி நோக்கமாக இருந்தது.

<u>4-1-3: உரோம்:</u> திறமை மிகு பெற்றோரையும் போர் வீரர்களையும் குடிமக்களையும் உருவாக்கும் முறையில் நடைமுறைப்பயனை அடிப்படையாகக் கொண்டதே உரோமானியக் கல்வி முறையாம். பொது வாழ்வுக்குப் பயன்படும் மாணக்கரை உருவாக்குதலே உரோமானியக் கல்வி நோக்கமாகும்.

<u>4-1-4: வட இந்தியா:</u>

<u>வேதக் கல்வி:</u>

"வேத காலக் கல்வி, மதத்தை நோக்கமாகக் கொண்டிருந்தது. கல்வி அறிவு பெறுவதற்காக மட்டுமன்றி வீடு பேற்றுக்கும் வழிகாணும் நோக்க முடையது". [6] உடல், உள்ள, ஆன்மீக வளர்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு தற்கட்டுப்பாடு, குல நலம் இவைகளே வேதக் கல்வியின் நோக்கமாகும்.

<u>புத்தக் கல்வி:</u> புத்தக் கல்வியின் நோக்கம் சமயத்தைப்

பரப்பலும் சமய குருக்களாகிய பிட்சுக்களை உருவாக்குதலும் ஆகும். உலகத் துன்பம், துன்பத்தின் எழு, துன்ப நீக்கம், நீக்கல் வழி முதலியவற்றை ஆராய்ந்த 'நிர்வாணம்' காணுதலே கல்வியின் நோக்கமாக அமைந்தது.

4-2: உள்ளீடு:

பாடத் திட்டத்தில் கல்வியின் சார்பாகக் கற்பிப்பதற்கென அமையும் பொருளே உள்ளீடெனப்படும். நாடு வாரியாகக்கல்வித் திட்டத்தில் எவை எவை இடம் பெற்றன என அறியலாம்.

4-2-1: ஸ்பார்ட்டா: பாடத் திட்டத்தில் உடற்பயிற்சியும் போர்ப் பயிற்சியும் சிறப்பிடம் பெற்றன. வீரத்தை ஊட்டுகிற ஓமரின் சில பாடல்களும், லைக்கர்களின் சட்டங்களில் சிலவும் இடம் பெற்றன. வாழ்நாள் முழுவதும் ஒவ்வொருவரும் தன்னையே நாட்டுக்கு அர்ப்பணிப்பதற் கேற்ற திட்டங்கள் உள்ளீட்டில் இடம் பெற்றன. வலிமையான குழந்தைகளைப் பெற்றெடுத்தல் பெண்களின் கடமையாக இருந்தமையால், பெண்களுக்கேற்ற அத்தகு பயிற்சிகள் வீட்டில் பெண்களுக்கு அமைந்தன. வலிமையற்றதும் எடை குறைந்ததுமான குழந்தைகள் அழிவுக்குள்ளாயின.

வன்மை மிகு வீரர்களைத் தோற்றுவித்தற்கேற்ற திட்டங்கள் அமைந்திருந்ததே தவிர மனிதர்க்குரிய அறிவுக் கவர்ச்சி, நுண்கலை ஊர்வு நல்லொழுக்கம், பண்பு, கலை வளர்ச்சி, தத்துவம் போன்ற எவையும் ஸ்பார்ட்டா நாட்டுக் கல்வித் திட்டத்தில் இடம் பெறவில்லை.

4-2-2: ஏதென்ஸ்: குடியாட்சியை அடிப்படையாகக் கொண்ட பாடத் திட்டம் 'சோலன்' என்பவரால் அமைந்தது. இலக்கணம், இசை, கவிதை, உடற்பயிற்சி, முதலியவை இடம் பெற்றன. ஆடவர்க்கே கல்வி உரிமை; அதிலும் குடிமக்கட்கே கல்வி கற்பதற்கு வாய்ப்பு உண்டு. அடிமை

கட்கும், பெண்களுக்கும் உயர் கல்வி இல்லை. 'ஓமர்'ன் சில பாடல்களும், 'சோலன்'ன் திட்டமும், உடற் பயிற்சியும், இராணுவப் பயிற்சியும், வாணிபமும், தத்துவமும் இலக்கணமும் சொற்பொழிவுக் கலையும் பயிற்சியில் இடம் பெற்றன. மனனம் செய்தலும், சொல்வதெழுதலும் நல்ல குடிமகனையும் நல்ல மனிதனையும் நல்ல நாட்டையும் உண்டாக்கவல்ல பாடத் திட்டமும் ஏதென்சில் அமைந்திருந்தன.

4-2-3: உரோம்: நாட்டைக் காக்கும் வீரருக்கும் திட்டத்தை ஸ்பார்ட்டா அமைத்துக் கொள்ள, நல்ல குடிமகனுக்கும் திட்டத்தை ஏதென்ஸ் ஏற்றுக் கொள்ள, நடைமுறைப்பயனுக்கேற்ற கல்வித் திட்டத்தை அமைக்க உரோம் முயன்றது. கிரேக்கத்தின் திட்டம் வரவேற்கப்பட்டு வற்புறுத்தப்பட்டது. கிரேக்கத்தை விட சிறந்த திட்டத்தை உரோம் அமைத்தது. சிசிரோ, குவிண்டிலியன், புளூட்டார்க் போன்றோர் வழி அமைத்தனர். இலக்கியமும், வரலாறும், விஞ்ஞானமும், அரசியல் அமைப்பும் மேற்பார்த்தலும் சட்டமும் ஆட்சியியலும் உலகெல்லாம் பரவும் வகையில் கல்வித் திட்டம் அமைந்திருந்தது. வாழ்வு முறையும் குடிமைப் பயிற்சியும் புராணப் பாடல்களும் மதப் பாட்டுகளும் பன்னிரு அட்டவணையும் திட்டத்தில் இடம் பெற்றன. லைகர்கஸின் முறை ஸ்பார்ட்டாவுக்கும் சோலன் முறை ஏதென்சுக்கும் அமைந்தன போல "பன்னிரு அட்டவணை முறை' உரோமின் திட்டங்களாயிற்று. சொற்பொழிவாளனே கல்வி மாணாக் கருதப்பட்டான். இலக்கியம், இலக்கணம் இடம் பெற்றன. மேல்நிலைக் கல்விக்காக அலெக்சாண்டிரியா, ரோட்ஸ் முதலிய இடங்களுக்குச் சென்றனர். கிரேக்கம் எவ்வாறு தத்துவத்திற்குப் பெயர் போனதோ அது போல மருத்துவம் சட்டம் உரோமுக்குப் பெயர் பெற்றுத் தந்த திட்டங்களாக அமைந்திருந்தன.

4-2-4: வட இந்தியா: வேதக் கல்வி: வேதக் கல்வியில் வேதம், வியாகரணம், தத்துவம், கணிதம், வரையியல், வாணியல், பொருள் நூல், நியாய சாத்திரம் முதலியன இடம் பெற்றன என்று சாந்தோக்ய உபநிடதத்தின் ஏழாம் பகுதி கூறுகிறது. உள்ளத்தின் அடக்கம், வாழ்வழி

காட்டுதல், பொறியடக்கம், சத்தியம், சிவம், சுந்தரம் காட்டுதல் அடிப்படையாகக் கொண்ட திட்டம். வியாகரணம், சோதிடம், நாட்டியம், விவாதம், முதலியவும் இத்திட்டத்தில் இடம் பெற்றிருந்தன. நடைமுறைக்கேற்ற ம வளர்ச்சிக்குதவும் திட்டங்கள் இடம் பெற்றன. சாங்கியம், பதஞ்சலி யோகம், கௌதம நியாயம், பூர்வ மீமாம்சை, உத்திர மீமாம்சை, வைசேடிகம் ஆகிய ஆறும் இடம் பெற்றன. நுண்கலைகளும் இசையும் உப வேதங்களும் உள்ளீட்டில் இடம் பெற்றன. வேதத் துதிப்பாக்கள் வழிவழியாக இடம் பெற்றன. வேத விளக்கங்களாகிய பிராமணங்கள் பாடத்திட்டத்தில் இடம் பெற்றன. இலக்கணம், சட்டம் போன்றவற்றின் தொடக்கக் கருத்துக்கள் பிராமணக் கல்வியின் உள்ளீட்டில் இடம் பெற்றன. வேதத் துதிப்பாக்கள் வழிவழியாக இடம் பெற்றன. வேள்வி செய்தற்கான யாவும் பாடத்திட்டத்தின் உள்ளீட்டில் இடம் பெற்றன. இலக்கணம், சட்டம் போன்றவற்றின் தொடக்கக் கருத்துகள் பிராமணக் கல்வியின் உள்ளீட்டில் இடம் பெற்றன. தத்துவ நூல்களாகிய உபநிடதங்கள் தோன்றின. தர்ம சூத்திரத்தில் கல்வி பற்றிய பல செய்திகள் உண்டு. பிராமணக் கல்வி முறையில் இலக்கணம், சமூகச் சட்டங்கள், புராணங்கள், தருக்கம், தத்துவம், படித்தல், எழுதுதல், கணிதம், ஆயுர்வேதம் ஆகியவை இடம் பெற்றன.

> "இக்கல்வி முறை தோன்றி நம் நாட்டில் பரவியிருந்த போது ஐரோப்பிய நாடுகளில் அக்காலத்தில் பரவியிருந்த கல்வி முறையைக் காட்டிலும் சிறப்பாக இம்முறை அமைந்திருந்தது என்பதை மேல் நாட்டு அறிஞர்களே ஒப்புக் கொள்கின்றனர்."[7]

<u>புத்தக் கல்வி:</u> கலைகளும், தொழில்களும், வங்கம் புகுதலும், சிற்பமும், ஓவியமும், திரிபிடகங்களும், ஆயுர்வேதமும், அறுவைச் சிகிச்சையும், மதக் கல்வியும், தத்துவமும், இயற்கைப் படிப்பும் உள்ளீட்டில் அமைந்தன. தொடக்கக் கல்விக்கும் உயர்நிலைக் கல்விக்கும் ஏற்ற திட்டங்கள் அமைந்திருந்தன.

4-3: கற்றல், கற்பித்தல் முறைகள்:

கற்றலும் கற்பித்தலும் தொன்று தொட்டு நடைபெற்று வரும் ஒன்றாகும். முறைசாராக் கல்வியில் ஒரு விதமாகவும் முறைசார்ந்த கல்வியில் வேறு விதமாகவும் கற்றல் கற்பித்தல் நிகழ்கின்றன. தமிழகத்தைப் பொறுத்த அளவில் இன்றைய கல்வி நோக்கில் முறைசாராக் கல்வியே பெரிதும், முறைசார்ந்த கல்வி சிறிதும் நடைபெற்றன எனலாம். ஆயின், ஏனை நாடுகளில் இவை எவ்வாறு நடைபெற்றன என அறிவோம்.

4-3-1: ஸ்பார்ட்டா: ஓமரின் பாடல்களையும் லைக்கர்களின் சட்டங்களையும் மனனப் பயிற்சி மூலம் கற்றனர். ஸ்பார்ட்டாவில் 7 வயது முதல் 30 வயது வரை பொது மன்றங்களிலும் இராணுவப் பாசறைகளிலும் நேரடிப் பயிற்சியும் பின்பற்றலும் பார்த்துச் செய்தலும் கற்றல் முறைகளாகப் பயன்பட்டன.

பெண்கல்வி வீட்டில் வாய்மொழி மூலமும் பயிற்சியளித்தல் மூலமும் நடைபெற்றது. உடல் பயிற்சிக்குப் பேரிடமும், மனனப் பயிற்சிக்குச் சிற்றிடமுமே அளிக்கப்பட்டன. கீழ்ப்படிந்து கற்றல் மரபாக இருந்தது. கற்பித்தலில் நேரடிப் பயிற்சியும் வாய் மொழிப்பயிற்சியும் பயன்பட்டன. 'எயிரன்' என்னும் சட்டாம்பிள்ளை முறையும், 'பெய்டமாஸ்' என்ற ஆசிரியர் முறையும் கற்பித்தலில் பெரிதும் பயன்பட்டன.

4-3-2: ஏதென்ஸ்: குடியாட்சிப் போக்கை அடியாகக் கொண்ட கல்வி முறை ஏதென்சில் நிலவியது. பின்பற்றல், பங்கேற்றல், பயிற்சி பெறுதல் இவைகளே கற்கும் முறைகளாக அமைந்தன. படித்தல், எழுதுதல், மனனம் செய்தல், கற்கும் முறைகளாக அமைந்தன. 'விரித்துரை' முறையும், 'வாய்மொழிப்' பயிற்சியும் செய்துகாட்டலும் பெரும் பொருள் பெற்றுக் கல்வி கற்பித்தலும் முறைகளாய் அமைந்தன.

4-3-3: உரோம்: இளங்கல்வி, வாய்மொழிப் பயிற்சி மூலம் அமைந்தது. நேரடிப் பயிற்சியும், மனனப் பயிற்சியும் பின்பற்றலும் பார்த்துச் செய்தலும் கற்றல் முறைகளாக அமைந்தன. கி.மு.55-ல் சிசிரோவின் 'டி சிரேட்டோர்' என்ற வெளியீடு உரோமக் கல்விக் கருத்துகளை வெளியிடும் வெளியீடாயிற்று. சிசிரோவும் (கி.மு. 106-53), குவின்டிலாலும் சிறந்த உரையாளராகக் கருதப்பட்டனர். வாய்மொழி மூலம் கற்பித்தல், நேரடிப் பயிற்சி முதலியன கற்பிக்கும் முறைகளாய் அமைந்தன. கல்வி விதி முறைகளும் கடுமையான சட்ட திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டன.

4-3-4: வடஇந்தியா: வேதக் கல்வி முறை: 'தந்தையிடமிருந்து மகனுக்கு' என்ற முறையில் வாய்மொழிக் கல்வியே வழக்கிலிருந்தது. வேதங்கள் முதலியன பரம்பரையாக வாய்மொழிப் பயிற்சி மூலமே நடைபெற்றன. செவி வழிக் கேட்டலும் திரும்ப உரைத்தலும் பலரொடு பயிலுதலும் கற்றல் முறைகளாய் அமைந்தன. வாய்மொழிப் பயிற்சி, திரும்பக் கூறல், உச்சரிப்பு, அழுத்தம் திருத்தம் பெறக் கூறல், உடனுறைந்து கற்பித்தல் முறைகளாகும். கண்டிப்பு அதிகம்; ஆயின் கொடுங்கோன்மை இல்லை. பழமையான முறையாகும். குருகுல முறையே கடைப்பிடிக்கப்பட்டது. மாணக்கரும் ஆசிரியரும் பல்லாண்டு உடனுறைந்து பயிலும் முறையே குருகுல முறையாகும். ஆசிரியர் தந்தை போன்றும் மாணக்கன் மகன் போன்றும் கருதப்பட்ட முறை நிலவியது.

வேதக் கல்வி முறையில் வாய்மொழிப்பயிற்சியுடன் விவாதம், விளக்க உரை முறை, வினாவிடை முறை, விரித்துரை முறை முதலியனவும் இடம் பெற்றன. 'உருட்டு மனன' முறையும் இடம் பெற்றது.

புத்தக் கல்வி முறை: வாய்மொழிப்பயிற்சி, நேரடிப் பயிற்சி, பின்பற்றல், விவாதம் முதலியன கற்கும் முறைகளாக அமைந்தன. மாணக்கர் புத்த விகாரங்களில் தங்கி, புத்த பிட்சுக்களிடம் இவற்றைக் கற்றனர். வாய்மொழி,

தருக்கமுறை, வினாவிடை முறை, தியானம் மூலம் கற்பித்தல் முதலியன கற்பித்தலில் பயன்பட்டது. குறைந்தது 10 ஆண்டுகளேனும் மாணுக்கன் கல்வி கற்றல் வேண்டும். இதுவும் ஒரு வகைக் குருகுல முறையே.

4-4: ஆசிரியரும் மாணுக்கரும்:

ஆசிரியருக்கும், மாணுக்கருக்கும் அமைந்திருந்த தொடர்பு பற்றி இப்பகுதியில் காணலாம்.

4-4-1: ஸ்பார்ட்டா: ஸ்பார்ட்டாவில் கற்க உரியராகக் கருதப் பட்டோர் ஆண்களே. அதிலும் குடி மக்களே. இது பொதுவுடைமை நாடு. கல்விப் பொறுப்பு அரசுக்கே உரியது. நாடு காத்தலே கல்வியின் நோக்கம். அதற்கேற்ற கல்வி தேவைப்பட்டது. பெண்டிர் மென்மைத் தன்மையினராயினும் வல்லமையுள்ள குழந்தைகளைப் பெற்றெடுப்பதற்கேற்ற பயிற்சிகளை வீட்டிலேயே பெற்றனர். 'எபர்ஸ்' என்ற முதியோர் குழுவால் தெரிந்தெடுக்கப்பட்ட வளமையான குழந்தையே மாணுக்கனாக முடியும். 30 வயது வரை மாணுக்கனாக அமைந்து 30-ம் வயதில் கட்டாயத் திருமணம் செய்து கொண்டு சில ஆண்டு இல்லறம் நடத்திய பிறகு போர்ப் பயிற்சி, இராணுவப் பயிற்சி அளிக்கும் ஆசிரியனாகித் தன்னையே நாட்டுக்களிக்கும் நிலை இருந்தது. பல சமயங்களில் வயது முதிர்ந்த அடிமையே ஆசிரியனாகப் பணி செய்தான்.

4-4-2: ஏதென்ஸ்: 7 வயது முதல் வீட்டிலேயே கல்வியும் அதற்கு மேல் 13 வயது வரை தொடக்கக் கல்வியும் அதற்கு மேல் 16 வயது வரை நடுநிலைக் கல்வியும் அதற்கு மேல் உயர் கல்வியும் சொற்பொழிவுப் பயிற்சிக் கல்வியும் இடம் பெற்றன. கல்விக் கூடங்கள் தனியார் துறைக்கு விடப்பட்டன. ஆகவே, ஆசிரியர்களும் தனிப்பட்டோரே. பெரும்பாலான அடிமைகளே ஆசிரியராயமர்ந்தனர். இலக்கண ஆசிரியரும் சொற்கோப்புப் பள்ளி ஆசிரியர்களும் இடம் பெற்றனர். 'ஜானேவின்' (கி.மு.336-264)

சொற்கோப்புப் பள்ளிகளும் 'எபிர்கசின்' (கி.மு. 342-270) தத்துவப் பள்ளிகளும் புகழ் பெற்று விளங்கின.

இம்னேசியம்: ஏதன்ஸ் கல்வித் துறையில் இம்னேசியம் முக்கிய இடம் பெற்றது. ஊரின் வெளிப்புறமைந்த மதிற்சுவரை ஒட்டிய விளையாட்டுப் பயிற்சி இடங்களில் ஒவ்வொரு அத்தீனியனும், 'இம்னேசியப் பயிற்சி' பெற்றான். 16-18 வயதில் 2 ஆண்டுகள் கட்டாயப் பயிற்சி, கல்விப்பயிற்சியின் ஒரு கூறாக அமைந்து காணப் பட்டது. ஆசிரியர் கட்டுப்பாட்டிலோ, அல்லது தலைவன் கட்டுப்பாட்டிலோ நடைபெற்ற இன்னேசியப் பயிற்சியால் அத்தீனியர் உடலுரம், அஞ்சாமை, தன்னடக்கம், நாட்டுப் பற்று, குடிமகன் உணர்வு, வீர உள்ளம், பெற்றனர். அத்தகைய இம்னேசியம் ஸ்பார்ட்டாவில் அரிதாம்.

4-4-3: உரோம்: கிரேக்கர் செல்வாக்கு உரோமில் பரவும் வரை உரோமில் கல்விக்கூடங்களே இல்லை. கிரேக்கத்தின் செல்வாக்கால் உரோமில் கல்வி நிலையில் மாறுதல்கள் பல ஏற்பட்டன. இதன் விளைவாக 1) தொடக்கப்பள்ளிகளும், 2) இலக்கியப் பள்ளிகளும், 3) சொற்கோப்புக் கலைப்பள்ளிகளும் தோன்றின. வரலாறு, இலக்கியம், விஞ்ஞானம், முதலியன கற்பிக்கப்பட்டன. குவின்டிலியன் என்பார் 'நல்ல ஆசிரியர் நல்ல மனிதனாக அமையாத வரை நன்றாக அமையாது' எனக் குறிப்பிடுகிறார்.

ஆசிரியர்க்குக் கற்பிக்கும் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன. கிரேக்க அடிமைகள் உரோமில் பயிற்றுனர் என்ற பெயரில் ஆசிரியராயமர்ந்தனர். மாணாக்கர்க்குக் கடுந்தண்டனை உண்டு. மரண தண்டனை கூட விதிப்பதற்குத் தந்தைக்கு உரிமையிருந்தது. கிரேக்க நாட்டின் தலை சிறந்த அடிமைகளே உரோமில் ஆசிரியராயமர்ந்தனர். 'ஓமர்' எழுதிய 'ஒடிசி' முதலிய காவியங்களை மொழி பெயர்த்தவனும் கிரேக்க அடிமையே என்று கூறுவர். 'சிசிரோ' (கி.மு. 106-43), 'குவின்டிலியன்' (கி.பி. 55-100),

'டேசிடஸ்' (கி.பி. 55-117) முக்கிய இடம் பெற்றனர்.

4-4-4. வட இந்தியா: வேதக் கல்வி: மத குருக்களே ஆசிரியர்களாய் விளங்கினர். தலைமைக் குரு 'ஹோத்திரி' எனவும் கீதங்களை இசைக்கும் குரு 'உத்காத்ரி' எனவும் சடங்குகளை நடத்துபவர் 'அத்ரவயு' எனவும் பெயர் பெற்றனர். மாணக்கர் பிரம்மச்சரியம் காத்து ஆசிரியருடன் உண்டு தங்கி உறங்கிக் கற்கும் நிலை நிலவியது. பொருள் கருதாது ஆசிரியர் கற்பித்தனர். தாமே எடுத்துக் காட்டுகளாக விளங்கினர். மாணக்கர் ஆசிரியர் சொல்லைக் கேட்டு பின்உறங்கி முன்னெழுந்து பணிந்து கற்றனர்.

"வேத கால முனிவர் கற்றதை உலகெலாம் கூறினர். இவ்வாறு பழம்இந்தியா உலகுக்கெல்லாம் கல்வி முறையைக் காட்டும் எடுத்துக் காட்டாக விளங்கியது"[8] என்று பி.சி. ராய் கூறுகிறார்.

பெண்கல்வி உண்டெனினும் பரவலாக இல்லை. ஆசிரியர், படிப்பு முடிந்தவுடன் நிறைவு விழா உரையில் 'வேதத்தைக் கற்பதையும் கற்பித்தலையும் புறக்கணித்து விடல் வேண்டா' என்பதே வேண்டுகோளாம். 'சரகர்' எனப்படும் நடமாடும் ஆசிரியர் நாடெங்கும் கல்விப் பணி செய்தனர். ஆசிரியர் ஆன்மீகத் தந்தையாகவே கருதப்பட்டார். ஒழுக்கம் தவறிய மாணக்கன் எந்த நேரத்திலும் வெளியேற்றப்பட்டான்.

புத்தக் கல்வி: புத்தப் பள்ளிகளில் எல்லோரும் அனுமதிக்கப்பட்டனர். புத்த சமயப் பணி புரிய விரும்புவோரே மாணக்கராக முடியும். விகாரங்களில் தங்கிப் பயிற்சி பெறுமாறு அமைந்திருந்தது.

புத்த பிட்சுக்களே ஆசிரியராயமர்ந்தனர். வியாதியின்றி, கடன் படாது, அடிமையாக இன்றி, அரசப்பணியாளராக அன்றி இருக்கும் எவரும் குறிப்பிட்ட வயதில் மாணக்கராகச் சேர்த்துக் கொள்ளப்படுவார்.

தலை முடி நீக்கி மஞ்சள் உடையணிந்து சங்கத்தின் பிட்சுக்களைத் தலைவணங்கிக் குருவின் பீடு அமர்ந்து தர்மத்திடமும், சங்கத்திடமும், தஞ்சம் புகுதலை உடன்பட்ட பின்னரே 8 வயதில் மாணாக்கனாகச் சேரும் 'பப்பஜா' என்னும் சடங்கு நடைபெற்றது. சங்கத்தின் முழு உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படும் மாணாக்க நிலை 'உபசம்பா திகழ்ச்சி' எனப்படும். 20 வயதான பிறகே முழு உறுப்பினராக முடியும். சங்கத்தில் சேர்ந்த பிறகு ஒரு புத்த குருவை ஆசிரியராகத் தேர்ந்தெடுத்து வேண்டுகோளை ஏற்ற பிறகே மாணாக்கர் கற்க அனுமதிக்கப்படுவர்.

<u>மாணாக்கர் தகுதிகள்:</u> (1) பெற்றோரின் அனுமதி வேண்டும். (2) நோயாளியர் சேர்த்துக் கொள்ளப்படுதல் இல்லை. (3) குற்றம் செய்த பாவியர்க்கு இடமில்லை: (4) வேறு பொறுப்பும் மாணாக்கராக இயலாத நிலையும் இத்தகுதி நோக்கியே மாணாக்கர் சேர்த்துக் கொள்ளப் பட்டனராயினும் விதிகளில் தவறினால் எந்த நேரமும் வெளியேற்றப்படுவர்.

உடல் தூய்மை, எளிமை, உலக இன்பங்களை ஒதுக்குதல், எளிய உணவு, எளிய உடை முதலியன பற்றிக் கடுமையான விதிகள் பின்பற்றப்பட்டன.

உடல் உழைப்பு, தியானம், புத்தப் பெருமான் போதனைகளை ஆழ்ந்து கற்றல், மதத்தைப் பரப்புதல், மாணாக்கர் கடமைகளாக இருந்தன.

<u>ஆசிரியர் தகுதிகள்:</u> (1) ஆசிரியராக விளங்க வேண்டும் எனில் ஒரு புத்த பிட்சு 10 ஆண்டுகளேனும் பிட்சுவாக இருந்திருத்தல் வேண்டும். (2) ஒழுக்கம் உடைமை, இன்றியமையாததாம். (3) மதப்பற்று, அவசியம். (4) புத்த மதக் கோட்பாடுகளை நன்கு கற்றுத் தேற வேண்டும்.

பெண் கல்வி முதலில் இல்லை. எனினும் கௌதமரின் சீடராகிய ஆனந்தரால் பெண்களும் மாணவ்ரகளாகப் பின்பு சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

4-5: வாயில்:

கல்வி கற்பிப்பதற்கும் கற்றலுக்கும் வாயில்களாகப் பயன்பட்டவை ஈண்டு கூறப்படும்.

4-5-1: ஸ்பார்ட்டா: பொது இடங்களும் உடன் உறை இல்லங்களும் பயிற்சி சாலைகளும் இராணுவப் பள்ளிகளும் கல்வி கற்பிக்கும் இடங்களாகப் பயன்பட்டன. ஸ்பார்ட்டா பொது உடைமை நாடாதையால், அரசே தலை சிறந்த வாயிலாக அமைந்தது.

4-5-2: ஏதென்ஸ்: தந்தையை ஆசிரியராகக் கொண்ட வீடுகளே முதல் வாயிலாக அமைந்தன. 'பாலியெஸ்ட்ரா' என்ற இசைப்பள்ளிகளும் தனி அறைகளும் பொது இடங்களும் விளையாட்டு இடங்களும் கல்வி கற்பிக்கும் வாயில்களாக அமைந்தன. அடுத்த நிலையில் தொடக்கப் பள்ளிகளும் நடுநிலைப் பள்ளிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் சொற்கோப்புப் பள்ளிகளும் இலக்கணப் பள்ளிகளும் வாயில்களாக அமைந்தன. கல்வி அரசுடைமையன்று, தனியார் துறையே.

4-5-3: உரோம்: தொடக்கப் பள்ளிகளும் இலக்கிய இலக்கணப் பள்ளிகளும் சொற்கோப்புப் பள்ளிகளும் இடைநிலைப் பள்ளிகளும் ஒருங்கிணைந்த பள்ளிகளும் வாயில்களாக அமைந்தன. நூல் நிலையங்கள் பெரிதும் பயன்பட்டன.

4-5-4: வட இந்தியா: வேதக் கல்வி: வேதக் கல்வி முறையிலும் பிராமணக் கல்வி முறையிலும் குருகுலங்களே கல்வி கற்பிக்கும் வாயில்களாக அமைந்தன. 'பரிசத்' எனப்பட்ட நிலையங்கள் தத்துவக் கல்விக்கு வாயிலாக அமைந்தன. 'சாரணு' என்ற ஓரநிலைக் கல்விக் கூடங்களும் வேதப் பள்ளிகளும்

வீடுகளும் 'சகா' எனப்பட்ட கிளைகளும் 'கோத்திரா' என்ற குழு அமைப்பும் 'சோமவர்த்தம்' என்ற உயர்நிலைப் பள்ளிகளும் கல்விக்கு வாயில்களாக அமைந்தன.

புத்தக் கல்வி: விகாரங்கள் எனப்படும் மடக் கோயில்களும் புத்தப் பள்ளிகளும் சங்கங்களும் வாயில்களாகப் பயன்பட்டன. காசி, தட்ச சிலம், நாலந்தா முதலிய இடங்களில் அமைந்திருந்த பல்கலைக் கழகங்கள் சிறப்புக் கல்வி பயிலும் வாயில்களாக அமைந்தன.

## 4-6: கற்கும் காலம்:

கல்வி கற்பதற்குரிய காலம் தற்கால அமைப்பாகும். நாடுதொறும் கல்வி கற்கும் காலம் சூழ்நிலைக்கு ஏற்ப மாறுபட்டிருந்தது. அவற்றை ஈண்டறிவோம்.

### 4-6-1: ஸ்பார்ட்டா:

1-7 வயதில் வீட்டில் கல்வி நடைபெற்றது.

8-17 வயதில் அரசுக்குரிய பொது நிலையங்களில் போர்ப்பயிற்சி நடைபெற்றது.

18-20 வயதில் இராணுவக் களத்தில் போர்ச் சேவைப் பயிற்சி நடைபெற்றது.

20-30 வயதில் நாட்டுப் பாதுகாப்புப் பயிற்சிக்கேற்ற கல்விமுறை அமைந்திருந்தது. ஆகவே, ஸ்பார்ட்டாவில் 30 வயது வரை கல்வி கற்றற்குரிய காலமாக அமைந்ததெனலாம்.

4-6-2: ஏதென்ஸ்: 1-7 வயதில் வீட்டுக் கல்வி நடைபெற்றது. தந்தையே பொறுப்பாளராக அமைந்தார். 8-13 வயதில் தொடக்கக்கல்வி நடைபெற்றது. 13-16 வயதில் நடுநிலைக் கல்வி நடைபெற்றது. 16-க்குப் பின் உயர் கல்வியோ சொற்கோப்புக் கல்வியோ பயில வாய்ப்பு அமைந்திருந்தது.

4-6-3: உரோம்: கி.மு. 753-ல் தான் உரோம் உருவாயிற்று என்பர். கிரேக்க ஆதிக்கத்தால் தொடக்கப்பள்ளிகளும் இலக்கியப் பள்ளிகளும் சொற்கோப்புக் கலைப் பள்ளிகளும் தோன்றின.

1-7 வயது வரை வீட்டுக் கல்வியும்

7-10 வரை தொடக்கக் கல்வியும்,

10-16 வயதில் நடு நிலைக் கல்வியும்

16-க்குப் பிறகு இலக்கணப் பள்ளிகளிலும் சொற்கோப்புக் கலைப் பள்ளிகளிலும் பயின்றனர். மேல் கல்வி விரும்புவோர் ஏதென்ஸ், அலெக்சாந்திரியா முதலிய இடங்களுக்குச் சென்றனர்.

4-6-4: வட இந்தியா: வேதக் கல்வி: பிராமணருக்கு8 வயதிலும் க்ஷத்திரியர்க்கு 10 வயதிலும் வைசியர்க்கு 11 வயதிலும் கல்வி தொடங்கியது. குறைந்தது 12 ஆண்டுகளேனும் ஆசிரியருடன் உறைந்து கல்வி கற்க வேண்டும். கற்கும் காலம் பொதுவாக 12 ஆண்டுகளாகும். ஆயினும் 48 ஆண்டுகள் கூடக் கல்வி கற்கும் வாய்ப்பு அமைந்திருந்தது.

புத்தக் கல்வி: புத்தக் கல்வி 8 வயதில் தொடங்கியது. 20 ஆண்டு வரை கல்வி நீடித்தது. குறைந்தது 10 ஆண்டுகளேனும் கல்வி கற்கவேண்டும்.

4-7: கற்போர் - கற்பிப்போர் உறவு:

கற்போருக்கும், கற்பிப்போருக்கும் நெருங்கிய தொடர்பு அன்பின் அடிப்படையில் அமைந்தால்தான் கல்வி வெற்றி பெற இயலும். அத்தொடர்பு பற்றிய செய்திகளை காணலாம்.

4-7-1: கிரேக்கம், உரோம்: ஸ்பார்ட்டாவிலும், ஏதென்சிலும், உரோமிலும், இராணுவப் பயிற்சியை அடிப்படையாகக் கொண்ட கல்விமுறை அமைந்திருந்ததாலும், அடிமைகள் அதிகமாக விளங்கியதாலும், அடிமைகளில் பலர்

ஆசிரியராக விளங்கியதாலும் ஆசிரியர் மாணக்கர் தொடர்பு அன்பின் அடிப்படையில் அமையவில்லை. கல்விக்காக மாணக்கரிடமிருந்து பெரும் தொகை வசூலிக்கப் பட்டது. பித்தகோரஸ் என்பார் 10,000 டிரச்மால் கட்டணம் பெற்றதாகக் கூறப்படுகின்றது.

"ஆசிரியர் மாணக்கர் உறவு நெருங்கியிருந்தது என்பதற்குச் சான்றுகள் இல்லை." [9]

<u>4-7-2: வட இந்தியா: வேதக் கல்வி:</u> குரு குலக் கல்வி முறையாகப் பிராமணக் கல்வி முறை அமைந்ததால் ஆசிரியர்க்கும் மாணக்கர்க்கும் உண்டான தொடர்பு தந்தைக்கும் மகனுக்கும் உண்டான தொடர்பாக விளங்கியது.

<u>புத்தக் கல்வி முறை:</u> புத்த பிட்சுக்கள் மாணக்கர் தொடர்பு குருவுக்கும் சீடனுக்கும் அமைந்த உறவாகவே காணப்பட்டது.

<u>அடிக்குறிப்புகள்:</u>

1. சந்தானம், எஸ்: 1969. <u>கல்விக் கோட்பாடுகளும் தத்துவங்களும்</u>, சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், ப-21.

2. Castle, E.B; 1961. <u>Ancient Education and Today</u>, USA. Penguin Books Ltd. P-16.

3. Frank Deiva Pont Greaves; 1936; <u>A Student History of Education</u>, The Macmillan Company, P-29.

4. Ibid, P-30.

5. Castle, E.B; 1961. <u>Ancient Education and Today</u>, P-96.

6. Rai, B.C; 1974. <u>History of Indian Education</u>, Lucknow, Prakasam Kendra New Buildings, P-17.

7. சந்தானம், எஸ்: 1969. <u>கல்விக் கோட்பாடுகளும் தத்துவங்களும்</u>, சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், ப-17.

8. Rai, B.C; 1974. <u>History of Indian Education</u>, Prefactory Note.

9. Castle, E.B; 1961. <u>Ancient Education and Today</u>, P-63.

## 5. தமிழர் கல்வியின் தத்துவப் பின்னணி.

5-0:

> "ஒருவரின் வாழ்வின் தத்துவத்தை ஒட்டியே கல்வித் தத்துவம் அமைகிறது" [1]

அத்தகைய கல்வியின் தத்துவப் பின்னணி என்பது யாது? வாழ்வின் வரலாறும் வாழ்வியலின் பின்னணி வரலாறும்தான். அவ்வாழ்வின் பின்னணியைக் காண்போம்.

### 5-1: முப்பொருள் உண்மை:

தமிழர் உலகத்துக் காணப்படும் பொருள்களையெல்லாம் கண்ணாலும் கருத்தாலும் கூர்ந்து நோக்கி முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், எனப் பகுத்தனர். நிலமும் பொழுதும் முதலெனப்படும். நிலத்திலும் பொழுதிலும் தோன்றும் தெய்வம், உணவு முதலியவற்றைக் கருப்பொருள் என்றனர். மக்கட்கே உரிய புணர்தல், பிரிதல், ஊடல், இருத்தல், இரங்கல், முறையே குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை, நெய்தல் நிலப் பாகுபாடுகளில் தோன்றும் உரிப்பொருள் என உணர்ந்தனர் [2] எனத் தொல்காப்பியம் குறிப்பிட்டது. இம்முறை கால வரலாற்றில் கல்வி வளர்ச்சியால் – முதிர்ச்சியால் – விளைந்த பயனாகும்.

நாடோடி வாழ்வின்றி நிலைத்த வாழ்வுக்கு வழியமைத்த தமிழர் வாழ்வின் பயனை அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருள் உண்மையாகக் கண்டனர்.

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு [3] என்பதற்கேற்ப இன்பத்தை விரும்புதல் உயிரின் இயல்பு. உயிருள் சிறந்த மனிதரும் இன்பத்தை விரும்புதல் இயல்பன்றோ? இன்பத்திற்கு ஏதுவான பொருளீட்டலில் வினையாற்றினர்.

வினையை எவ்வழி ஆற்றவேண்டும் என ஆய்ந்து அற வழியே என முடிவு கட்டினர். அறத்தான் வருவதே இன்பம் பயக்கும் என உணர்ந்தனர். ஆதலின் அறம் பொருள் இன்பம் தமிழர் கண்ட முப்பொருளாயின. இதன் சார்பாக வீடு பேற்றைக் குறித்தனர்.

முற்கூறப்பட்ட முதல் கரு, உரியால் அறம், பொருள், இன்பம் பேணிய தமிழர் இம்மையிற் செம்மையான வாழ்வில் நிறைந்த பிறகு-அன்பு அருளாகக் கனிந்த பின்பு – யான் எனது என்னும் பற்றின் திறன் உணர்ந்த பிறகு – உலகம், உயிர், கடவுள் என்ற முப்பொருள் உண்மை ஓதி உணர்ந்தனர். இதன் அடிப் படையாக நின்ற நிலப்பாகுபாடு அவர்தம் அறிவியலுக்குச் சான்றும்.

5-1-1; இயற்கையோடு இயைந்த வாழ்வு: கதிரவன் ஒளியின் முழுகலும் நீரில் ஆடலும் மலை, நாடு, கடல், போன்ற பகுதிகளில் உலவி வருதலும், இயற்கை படைத்த காய்கனி உணவை மிகுதியாக உண்ணலும், மலர் களை மிக அணிதலும் காலத்திற்கேற்ப, இடத்திற்கேற்ப உணவு, உண்ணுதலும், உடை அணிதலும், கடல் செலவும், தரைச் செலவும் தமிழர்தம் உடலையும் உள்ளத்தையும் நலத்துடன் காத்தன. இயற்கையுடன் இயைந்து வாழ்தல் என்ற இன்றைய இயற்கைக் கோட்பாடு ( Naturalism ) தமிழர் வாழ்வில் ஊடாடி இருந்தது.

இத்தகைய வாழ்வுக்கு-வாழ்வில் மலர்ந்த கல்வியின் தத்துவத்துக்கு – அடிப்படையாக அமைந்த அரசியல், பொருளாதாரம், சமுதாயம் ஆகிய நிலைகளைக் காண்போம்.

5-2; அரசியல் வரலாறு:

5-2-1; மூவேந்தர்: சேர, சோழ பாண்டியர் ஆண்ட தமிழகம்

'வன்புகழ்மூவர் தண்பொழில் வரைப்பு'[4] என்று குறிக்கப்பட்டது. பரந்து பட்ட 600 ஆண்டுகளில் மூவேந்தருள் ஒவ்வொரு காலமும் ஒவ்வோர் அரசன் சிறப்புற்று இருந்தான். கடைச் சங்க காலத்து அரசர்கள் எல்லோரும் கல்வி அறிவு உடையவராக விளங்கினர். முடியுடை மூவேந்தர்களும் சிற்றரசர்களும் அறத்தை அடிப்படையாகக் கொண்டு ஆட்சி செய்தனர். கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறந்த புலவரை நன்கு மதித்தனர். அவரைப் பின்பற்றி ஆட்சி செய்தனர். தாம் தவறான வழியில் சென்ற காலத்திலெல்லாம் சுட்டிக் காட்டபட்டபொழுது திருந்திய வாழ்வு மேற்கொண்டனர். அரசரையெல்லாம் குறிப்பிடும்போது 'அன்' விகுதி சேர்த்து நெடுஞ்செழியன், செங்குட்டுவன் என்று அழைத்தனர். ஆயின் புலவர்களைக் குறிப்பிடும்போது நெடுங்கழுத்துப் பரணர், ஒக்கூர் மாசாத்தியார், சீத்தலைச் சாத்தனூர் என 'அர்', 'ஆர்', என்ற சிறப்பு விகுதிகள் பயன் படுத்தப்பட்டன. இதனால் சங்க காலத்துப் புலவர் பெற்றிருந்த பெருமை புலனாகும். வளம் பெற்ற சோநாட்டைக் கொண்ட சோழர் 'வளவர்' எனப் பட்டனர். மலைநாட்டை மிகுதியாகக் கொண்ட சேரர் 'மலையர்' எனப் பட்டனர். அரசர் யாவரும் புலவர், பொருநர், கூத்தர், பாணர் முதலியோர் கட்கு மதிப்பும் பொருளும் மிக அளித்துப் பாராட்டினர்.

<u>5-2-2 : மன்னரும் மக்களும் :</u> மக்கள் அரசருடன் நினைத்த போது நேரடித் தொடர்பு கொள்ளும் உரிமை பெற்றிருந்தனர் என்பதற்குக் கண்ணகி வரலாறே சான்றாகும். அறம்புரி செங்கோலாட்சி செய்த மன்னர் குடிப்பழிக்கு அஞ்சினர். மழை பெய்யாவிட்டாலும் வருமானம் குறைந்தாலும் இயற்கைக்கு மாறுபட்ட செயல்கள் உலகத்தில் நடந்தாலும் அரசனே அதற்குக் காரணமானவன் என்று மக்கள் கூறினர். ஆகவே மன்னன் மக்களைக் குழந்தைகள் போல் காப்பாற்றினான்.

5-2-3: மன்னரும் புலவரும்: கல்வி அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும் ஆதலால் கற்றறிந்த புலவர் வழியே அரசர் ஆட்சி நடத்தினர். ஒழுக்கத் திற்கும் சான்றாண்மைக்கும் நேர் வழி காட்டுதற்கும் புலவர்களே எடுத்துக் காட்டு களாக அமைந்தனர். அரசருடைய ஒற்றுமைக்கு வழி வகுத்து நல்லாட்சி நடை பெறப் புலவர்களே வழிகாட்டியாய் அமைந்தனர்.

5-2-4: அரசியல்: ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும் பெற்றிருந் தார் ஆயினும் புலவர் கூறும் அறவுரைகளை மிகக் கேட்டு மதித்தொழுகினர். சிற்றூர்களில் ஊராட்சி மன்றங்களும் ஊர் அவையினரும் பற்பல வாரியங்களும் அமைந்து குற்றம் குறைகளை அவ்வப்போது களைந்தன. உயிர் கொடுத்த நெடுஞ்செழியனும் கையைக் கொடுத்தபொற்கைப் பாண்டியனும் உலக வரலாற்றில் குறிப்பிட வேண்டியவராவர். அரச பதவி, வழி வழியாகத் தந்தையிடமிருந்து மகனுக்கு வந்தது.

5-2-5: ஆட்சியியல்: தமிழகத்தை ஆண்ட மூவேந்தரும் சிற்றரசரும் குறுநில மன்னர்களும் நடத்திய ஆட்சியில் உயர்ந்த கல்வி மலர ஏதுவாயிற்று. அறமும் செம்மையும் உடையவராக விளங்கினர் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு. பாண்டியன் நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் அறிவுறுத்தும்போது படை பலம் மிக்கு இருப்பினும் அரசன் வெற்றி அறத்தை அடிப்படையாக உடையது ஆகவே நம்மவர், பிறர் என்று வேற்றுமை பாராட்டாது ஆண்மையும், அருளும் வன்மையும் கொண்டு ஆற்று மணலினும் பல்லாண்டு வாழ்க எனக் குறிப்பிடும்போது அறநெறி முதற்றே அரசின் கொற்றம்[5] எனக் குறிப்பிடுகிறார்.

தொண்டைமான் இளந்திரையன் தீமைகளை நீக்கி அறமே விரும்பும் செங்கோலாட்சி செய்தான் என்பதை 'அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்[6] என்ற தொடரால் உணரலாம்.

கழாத் தலையார் என்ற புலவர் நெடுஞ்சேரலாதனும் பெருவிறற் கிள்ளியும் மறப்போர் செய்து மாண்டபோது அறப்போர் செய்தே அழிந்தனர் என்பதை

அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர் 7

என்ற பாடலால் கூறினர்.

காக்கைப் பாடினிநச்செள்ளையார் ஆடு கோட்பாட்டுச் சேரலாதனைப் பாடும்போது அரசர் யாவரும் நாட்டு மக்களைக் குழந்தைகளைப் போல் எண்ணிப் பாதுகாத்தனர் என்பதை

குழவி கொள்வாரின் குடிபுறம் தந்து 8

என்று கூறுதலால் உணரலாம்.

பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனர் என்ற புலவர் நீர் நிலைகளைப் பெருகச் செய்யும் நல்லாட்சியே தேவை எனக் கூறி நல்லாட்சிக்கு வழியமைத்தபோது,

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே 9

என வழி காட்டினர்.

அறந்துஞ்சும் செங்கோல் 10

என்ற அடியால் இயற்கைப் பொருள்களை அளந்து அறியினும் அளந்தறிய முடியாத அருள் உடைய இரும்பொறை ஆட்சியில் அறம் மிக்கு விளங்கிற்று என்று குறுங்கோழியூர்க்கிழார் பாடினர்.

மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஓம்பிய நாடு பொன்னுலகம் போல் இனிது விளங்கிற்று என்பதை

மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஓம்பிய நாடே
புத்தேள் உலகத்தற்று [11]

என்பதால் உணரலாம்.

சினனே காமம் கழி கண்ணோட்டம்
அச்சம் பொய்ச் சொல் அன்பு மிக உடைமை
தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து
அறம் தெரி திகிரிக்கு வழியடையாகும்
தீது சேணிகந்து நன்று மிகப் புரிந்து [12]

என்ற பாடலால் சினம், காமம், அச்சம், பொய்ச்சொல், முறையற்ற அன்பு, கடுமை, முதலியன நல் அரசாட்சிக்குத் தடை என விலக்கி நன்மைகளையே செய்யும் ஆட்சி நடைபெற்றதென அறியலாம்.

நாளின் நாளின் நாடு தொழுதேத்த
உயர்நிலை உலகத்து உயர்ந்தோர் பரவ
அரசியல் பிழையாது [13]

என்ற பாட்டால் வாழ்நாள் முழுவதும் நாடு தொழுது ஏத்தும்படி அரசியல் பிழையாத ஆட்சி நடைபெற்றது என உணரலாம்..

நன்மையும் தீமையும் கண்டு பிறகு ஆய்ந்து வெளிக் கொணராது அடங்கி அன்பும் அறனும் நீங்காது காத்து பழி நீக்கிய ஆட்சியில் புகழ்

பெற்று நிறைந்தவன் என மாங்குடி மருதனார் பாடலாகிய

நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அடங்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழி ஒரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த [14]

என்பது புலப்படுத்தும்.

ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக [15]

என்பதால் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கங்களால் சிறந்த ஆன்றோரைத் துணை யாகக் கொண்ட நல்லாட்சியே நெடுஞ்செழியன் செய்தான் என்பதை உணரலாம்.

மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப்பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம் [16]

என்ற புறப்பாடலால் மழை பெய்யாவிடினும் வருமானம் குறையினும் இயற்கைத் துன்பங்கள் தோன்றினும் அவற்றிற்கு மன்னரே காரணம் என்று உலக மக்கள் பழித்துக் கூறுவர் என உணர்ந்தனர். ஆதலால் பழிக்கு அஞ்சி அரசர் நல்லாட்சி செய்தனர்.

குடிமகள் ஒருத்திக்கு ஏற்பட்ட குறையை நீக்குதற்காக, கொடுங் கோலை நிமிர்த்துவதற்காகத் தன் உயிரையே கொடுத்துக் கொடுங்கோலை நிமிர்த்திச் செங்கோலாக்கிய நெடுஞ்செழியனுடைய நேர்மையான ஆட்சி சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படுகிறது.

"போருக்குச் செல்லுகின்ற அரசன் பகைவரை வெல்லேன் ஆயின், என் மாலை உன்மைக் காதலற்ற பரத்தையர் மார்பில் புரளட்டும்" [17] என்று வஞ்சினம் கூறிய நலங்கிள்ளி தொடரால் தமிழ் அரசர் தம் ஒழுக்கமும் குடி ஓம்பும் பண்பும் புலனாகும்.

"பகைவரை வெல்லேன் ஆயின், யான் கொடுங்கோலனாகுக; கல்விப் புலவராம் மாவன் ஆகியோர் என்னை விட்டு நீங்குக; தென்புலங்காவல் நீங்கி வன்புலக்காவல் ஆட்சியில் பிறப்பேனாகுக" [18] என்று பூதப்பாண்டியன் பாடு கிறான். "யான் பகைவரை வெல்லேன் ஆயின், கல்விப் புலவராம் மாவன் முதலியோர் என்னை விட்டு நீங்கட்டும்" எனக் கூறிய வஞ்சினத் திலிருந்து கல்வியின் மீதும் கற்ற புலவர் மீதும் எத்தகைய மதிப்புக் கொண்டிருந்தனர் என்பது புலனும். எவரைப் பிரிவதும் கற்ற புலவரைப் பிரிந்து வாழ்தல் கடுங்குற்றம் எனக் காவலர் கருதினர். கற்றோர் வழியேதான் நல்லாட்சி நடைபெற இயலும் என்பதறிந்து, பூதப்பாண்டியன் கற்றோரைப் பிரியாது வாழவேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு பாடிய வஞ்சினப் பாட்டால் தமிழர் கல்வியின் நிலை – தமிழரசரின் கல்விப் பற்று – ஆட்சியில் கற்றோர் பங்கு புலனும்.

ஆகவே தமிழக வேந்தர்களும் குறுநில மன்னர்களும் குடி மக்களைப் பாதுகாத்து அல்லவை நீக்கி குடிப்பழிக்கு அஞ்சி, கற்ற கல்வியாளராகிய புலவரைப் பேணி, கல்வி வளர்த்து, புலமையை மதித்து, கற்றோர் வழியே சென்று, அறத்தை அடிப்படையாகக் கொண்ட நல்லாட்சி நடத்தினர் என்பது சங்க இலக்கியம் முழுதும் காணப்படும் செய்தியாகும். முடியாட்சி என்ற பெயரில் நடைபெற்ற மேலாட்சியே சங்க கால அரசியல் ஆட்சி என்பதைத் தெளிவாக உரை இயலும். அவ்வாறு ஆட்சி செய்வதற்கு அறமே அடிப்படை ஆயினும் பொருள் மிகப் பெரும் துணையாகும். பொருளாதார நிலையை அறவழியில் உயர்த்திக் கொள்ளும் நாடே நன்னிலை எய்தும். ஆகவே, சங்க காலத்திய பொருளாதார நிலை பற்றி ஒரு சிறிது அறிவோம்.

## 5-3: பொருளாதார நிலை:

"ஒரு நாட்டில் பயிர்த்தொழில், கைத்தொழில், வாணிகம், பண்ட மாற்று, நாணயச் செலாவணி என்னும் இவற்றைத் தன்னகத்தே கொண்டது தான் பொருளாதாரம் என்பது" [19] என்பர் இராச மாணிக்கனார்.

பொருளாதார அமைப்பைப் பற்றிக் கூறுகின்றபொழுது பொருள் உற்பத்தி, மாற்று, பகிர்வு, நுகர்வு என வகுத்துக் கூறுவர் பொருளாதார அறிஞர். இன்று செல்வத்துக்கிடையே வறுமையையும், செழிப்புக்கிடையே நிலை பேறின்மையும் காண்கிறோம் எனப் பொருளாதார நிலை பற்றி அறிஞர் கூறுவர். 'செய்க பொருளை' எனப் பொருள் உற்பத்தி பற்றியும், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக' என்று பகிர்வு பற்றியும், நுகர்வு பற்றியும் திருக்குறள் பேசுகிறது. மாற்றைப் பற்றி சங்க இலக்கியங்களிலே பல அகச் சான்றுகள் உண்டு. சங்க காலப் பொருளாதார நிலை எளியது, இயற்கையானது, வளமானது, அறத்துடன் அமைந்தது, பிறர் பொருளை விரும்பாதது, நடுவு நிலைமையை அடிப்படையாகக் கொண்டது, உலகே வரினும் பழியோடு வந்தால் பெற்றுக் கொள்ளாத நேர்மை உடையது. இனி, பொருளாதாரத்திற்கு அடிப்படையான பயிர்த்தொழில், கைத் தொழில், வாணிகம் முதலியன பற்றிக் காண்போம்.

### 5-3-1: பொருளீட்டல்:

'உள்ளது சிதைப்போர் மதிக்கப்படமாட்டார் என்பதும் வினையே ஆடவர்க்கு உயிர்' என்பதும் தமிழர் கொள்கை ஆதலால் ஆடவர் நீரிலும் நிலத்திலும் சென்று பொருட்பொருள் ஈட்டினர். ஆடவர் எவ்வழி ஒழுகு கின்றார்களோ அவ்வழியே நாடு நடைபெறும் என்பது ஆன்றோர் கருத்து.

அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள் [20]

என்பதை உணர்ந்த தமிழர் பொருளின் மேன்மையறிந்து பெரும்பொருள் ஈட்டினர். வாழ்விலும் பொருள் ஈட்டலாலும் நீதிக்குப் பெருமதிப்பளித்தனர்.

<u>5-3-2: நீதி:</u> நெடுநகத்துப் பகல் போல நடுவு நின்ற நன் நெஞ்சினராயிருந்தனர். சமன் செய்து சீர் தூக்கும் கோல் போன்ற நடு நிலைமை நடைபெற்றது. ஊர்தொறும் மன்றங்களும் சான்றோரும் உண்டு. முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் அவ்வவை அப்பொழுதே வழங்கும் அரசருண்டு. நெடுஞ்செழியன் கண்ணகிக்காக உயிர் துறந்தமையும் கோப்பெருந் தேவி உயிர் தேடினள்போல் உடன் இறந்தமையும் பொற்கைப் பாண்டியன் கையிழந்தமையும் மனு நீதிச் சோழன் தேர்க்காலில் மகனை முறை செய்தமையும் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் விட்டமையும் தமிழர் நீதி மீது கொண்ட நம்பிக்கையைக் காட்டுவனவாம்.

<u>5-3-3: தொழில்:</u> - <u>பயிர்த்தொழில்:</u> உழவு, உலகத்தார்க்கு ஆணிவேர் போன்றது. உழவுத் தொழிலைச் செய்யாது பிற தொழில் செய்வார் யாவரையும் தாங்குதலால் உழவர் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர்.

எல்லோரும் உண்ணும் வகையிலே உழுதொழிலைச் செய்து அதனால் தாமும் உண்டு வாழ்கின்றவரே தமக்கு உரியராய் வாழ்கின்றனர். மற்றைய ரெல்லாம் பிறரைத் தொழுது அதனால் தாமும் உண்டு அவரைப் பின்பற்றிச் செல்கின்றனர் ஆவர்.[21]

உழுதலை உடையார் கை அதனைச் செய்யாது மடங்குமாயின் யாவரும் விரும்பும் உணவினையும் துறந்து விட்டோம் என்ற துறவிகளும் துறவறத்தில் நிற்றல் ஆகாதாம்.[22]

"யாம் வறியோம் என்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால் நிலமகள் என்று உயர்த்திச் சொல்லப்படுகின்ற நல்லாள், உழுதல் யாவர்க்கும் செல்வம் கொடுக்கும் என்றுஅறிந்தும் உழுதலைச் செய்யாது வறுமையுறுகின்ற பேதைமை பற்றித் தன்னுள்ளே நகும்" [23]

நீரின்றி வாழ இயலாத இந்த உலகத்து மக்கட்கெல்லாம் உணவு அளிப்போர் உயிர் அளிப்போர்க்கு ஒப்பாவர் என்பதை

நீர் இன்று அமையாயாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே [24]

என்ற பாட்டுக் கூறுகிறது.

உழவுத் தொழில் ஒன்றே, செய்வாரையும் வாழச் செய்து செய்ய இயலாரையும் செய்யாதாரையும் வாழச் செய்யவல்லது என உணர்ந்த தமிழர் உழவினைத் தலையாயது எனக் கொண்டு போற்றி உயர்ந்தனர். பசியற்ற நாடே, கல்வி, கலை முதலியவற்றை வளர்க்க இயலும். ஆகவே பசிப்பிணி என்னும் பாவியை ஒழிக்கப்பன்னூறு ஆண்டுகட்கு முன்பே முடிவெடுத்துச் செய்து காட்டினர் தமிழர்.

ஒரு பிடி படியும் சீறிடம்
எழுகளிறு புரக்கும் நாடு கிழவோயே [25]

என்ற புறப்பாட்டால் ஒரு பெண் யானை படியும் இடத்தில் எழு ஆண் யானைகட்கு வேண்டிய உணவுப் பொருளை விளைவிக்க வல்லராயிருந்தனர் தமிழர் என்பது புலனும்.

சோறு வாக்கிய கொழுங்கஞ்சி
ஆறு போலப் பரந்தொழுகி [26]

என்பதால் காவிரிப்பூம்பட்டினத்தில் சோறு வடித்ததால் உண்டாகிய கஞ்சி ஆறு போலப்பரந்து சென்றது என்பது விளக்கம்பெறும்.

வேலி ஆயிரம் விளையுட்டாக [27]

என்ற அடியால், ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் விளையுமளவு உழவினைப் பெருக்கி இருந்தனர் என்பது தெளிவாம்.

காடுகளை அழித்து நாடாக்கியும், குளங்கள் பலவற்றை வெட்டி நீரைத் தேக்கியும் அதனால் கால்வாய்ப்பாசனத்தால் வளம் பெருக்கியும் அதனால் குடிமக்களைத் தம் குழந்தைகள் போல எண்ணிக் காப்பாற்றினர் தமிழரசர் என்பதை

காடு கொன்று நாடாக்கி
குளம் தொட்டு வளம் பெருக்கி
பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி
கோயிலொடு குடி நிறீஇ [28]

என்பதால் அறியலாம்.

உழவுத் தொழில் உயர்ந்தோங்குமாறு முடியுடை மூவேந்தரும் புரவலரும் ஆற்றிய பணிகளினால் உழவுத் தொழில் மிகுதியாக அமைந்து நாற்றி ~~[illegible]~~ செயிலும் வந்த உணவு, துறைமுகங்கள் வழியாக வெளி நாடுகளுக்குச் சென்று

தமிழருடைய பொருளாதார நிலையை மேன்மேல் உயர்த்தியது. மழைவளம் குறைந்த காலங்களில் வரியைக் குறைத்தும் நிறுத்தி வைத்தும் குடி மக்களுக்கு அருள் செய்யுமாறு இடித்துரைக்கப்பட்டபோது அரசர்கள் புலவர் சொற்படியே நடந்து குடிமக்கட்கு நன்மை விளைவித்தனர் என்பதைப் புறப்பாடல்கள் [29] புலப்படுத்தும்.

வாணிகம்:

உழவும் வாணிகமுமே நாட்டின் பொருளாதாரத்திற்கு அடிப்படையாகும். ஓரிடத்தே உண்டாகும் பொருள்களை வேண்டிய இடத்துக் கொண்டு சென்று எல்லோரும் எல்லாம் நுகரச் செய்யும் தொழிலில் ஈடுபடுவோரே வணிகராவர்.

அளந்தறியாப் பல பண்டம்
வரம்பு அறியாமை வந்து ஈண்டி [30]
நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த பொன்னும் மணியும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத்து உணவும் காழகத்தாக்கமும்

அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு [31]

போற்ற பாடல்களால் கடலின் மூலம் வந்திறங்கிய குதிரைகளும் மிளகு மூடைகளும் வடக்கு மலையிலே தோன்றிய மணியும் பொன்னும் மேற்கு மலையிலே தோன்றிய சந்தனமும் அகிலும் தென்கடலிலே தோன்றிய முத்தும், கிழக்குக் கரையிலே தோன்றிய பவளமும், கங்கைப் பொருள்களும், காவிரிப் பொருள்களும், இலங்கை உணவுகளும் கடாரப்பொருள்களும் கிடைத்தற்கு அரியனவும் பெரியனவும் நிறைந்து விளங்கிய வணிகர் இடங்கள் குறிப்பிடப்படுகின்றன.

மொழிபல பெருகிய பழி தீர் தே எத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும் [32]

என்ற அடிகள் பல தேய மக்களும் ஒருங்கு வந்து கூடி வணிகம் செய்யும் இருப்பிடங்களைப் பற்றிய செய்தி அலைத்தலைய வணிகத்தை எடுத்துக் காட்டும் நற்சான்றாகும்.

காவற்ற யானைகள் வாழும் மலைப் பகுதிகளைக் கடந்து செய்யப்படுகின்ற வாணிகமும் உண்டு.[33]

யவனர் இயற்றிய பாவை விளக்குகள் தமிழகம் போந்தன. [34]

பொன்போன்ற பல பண்டங்களை ஏற்றிச் செல்லும் மலை போன்ற கப்பல்களையுடைய கப்பல் வணிகமும் நடைபெற்றன.[35]

மலைபடுபொருள்களும் நிலம்படுபொருள்களும் நீர்படுபொருள்களும், முத்துக்களும், மணிகளும் சிறந்த பல தேயத்து வணிகரும் குழுமி இருக்கும் கொற்கை நகர் பேசப்படுகிறது. நாளங்காடிகளும் அல்லங்காடிகளும் குறிப்பிடப்படுகின்றன. [36]

"சீனா, ஜாவா, அரேபியா, எகிப்து, கிரேக்கம் முதலிய நாடுகளுடன் தமிழகம் வணிக உறவு கொண்டிருந்தது."[37]

வணிகத்தைத் திறம்பட நடத்தியோர்க்குஎட்டி என்ற பட்டமும் பொன்னாலாகிய பூவும் அளித்து 'மன்னர் பின்னோர்' எனப் பெயரிட்டுச் சிறப்புச் செய்தனர் வேந்தர்.

உள்நாட்டு வணிகமும் வெளிநாட்டு வாணிகமும் பெருகி இருப்பினும் பிறர் பொருளையும் ஒப்பநோக்கும் நடு நிலை நெஞ்சம் பெற்ற அற வணிகமே நடை பெற்றது என்பதை,

நெடுநுகத்துப் பகல்போல
நடுவு நின்ற நன்னெஞ்சினோர்
வடு அஞ்சி வாய் மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும் தொல்கொண்டி துவன்றிருக்கை 38

என்பதே சான்றாகும்.

ஆகவே, தமிழர் உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம், கப்பல் வாணிகம் முதலியவற்றுள் சிறந்த உயர்நிலை பெற்றதற்கு அடிப்படையாக வணிகக் கல்வியும் மொழிக் கல்வியும் கருவிகளாக அமைந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

<u>நெசவு</u>: பொன்போல மின்னக்கூடிய இழை ஓடியது கூட அறிய இயலாத, பூ வேலைப்பாடுகள் கொண்ட, ஓரத்தில் முடிச்சுகள் கொண்ட, பாலாவி, ஆவி, புகை போன்ற, மெல்லிய பருத்தி ஆடைகளையும், பட்டாடைகளையும் நெய்து உடுத்தியும், மேல் நாடுகளுக்கும் அனுப்பியும், **நெசவுத்தொழிலில்** தமிழர் உயர்நிலை பெற்றிருந்தனர் என்பதைச் சங்கக் காலப் பாடல்கள் புலப்படுத்தும்.

<u>அணிகலத் தொழில்</u>: பொன்னாலும் முத்தாலும் பவளத்தாலும் புலிப்பல் கோத்து அமைக்கும் குற்றம் அறப்புனையப்பட்ட பல அணிகள் தமிழரிடம் விளங்கின என அறியலாம். பொன்னாலும் வெள்ளியாலும் நவமணிகளாலும் செய்யப்பட்ட பல விதமான அணிகலன்கள் இருந்தன. ஆயிழை, சேயிழை போன்ற சொற்களே இழைத்துச் செய்யப்பட்ட அணிகலன்கள் விளங்கினமையைப் புலப்படுத்தும்.

சிலப்பதிகாரத்து மாதவி அணிந்த பரியகம் முதலாக இருபதுக்கும் மேற்பட்ட அணிகலன்கள் பேசப்படுகின்றன. [39]

<u>பிறதொழில்கள்</u>: மரவேலை, தச்சுவேலை, இரும்புவேலை, மண்பாண்டம் செய்தல், தையல், தோல் பதனிடுதல், பூத்தொழில் என்றின்னவாறு பல தொழில்களில் தமிழர் மேம்பட்டிருந்தனர். சிலப்பதிகாரமதில் வருணனையின் மூலம் அந்நாளில் இரும்புக் கருவிகள் செய்யும் தொழில் மேன்மையுடன் விளங்கியது என அறியலாம்.

<u>பண்டமாற்றும் நாணயங்களும்</u>: சங்க காலத்திய் பண்டமாற்றுக்குச் சான்றுகள் உண்டு. ஒரு பொருளைக் கொடுத்து வேறொரு பொருளைக் கொள்ளும் முறையே பண்டமாற்று எனப்படும். முல்லை நில மக்கள் பால், தயிர் முதலியன கொடுத்து நெய்தல் நிலத்து மீன் உப்புப் பெறுவர். நெய்தல் நிலத்து மக்கள் மீனைக் கொடுத்து மருத நிலத்து நெல் பெறுவர். மோர் மகள் பொன் பெறுது ஆடு மாடு பெறுவாள்.

<u>நாணயங்கள்</u>: பொன், வெள்ளி, முதலிய நாணயங்கள் தமிழரிடையே இருந்தன. சங்க காலத்துக் காசுகளைப் பரிசோதிக்கும் அலுவலர் வண்ணக்கர் எனப்பட்டனர். வண்ணக்கன் என்ற பெயரிலேயே பல புலவர் உள்ளனர். (பொன் வணிகனார் மகனார் நம்புதனார், வடமவண்ணக்கன் தாமோதரன்)

## 5-4: சமுதாயநிலை:

சங்க காலத்திய தமிழரின் கல்வி நிலை பற்றி அறிதற்குச் சமுதாய அமைப்பும் ஓர் அடிப்படையான காரணம் ஆதலால் சமுதாய நிலை பற்றியும் ஒரு சிறிது காண்போம்.

தொல்காப்பியம், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று நான்கு வகையினரைக் குறிப்பிடும். இப்பிரிவு தொழில்பற்றி வந்ததேயன்றிச் சாதி பற்றியோ குலம் பற்றியோ வந்ததன்று.

கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம், அன்பு, அருள் முதலியவற்றால் அமையும் செம்மைத் தன்மை உடையோரே அந்தணர் எனப்பட்டனர்.

அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான் [40]

அரசு செலுத்தியவன் அரசன். அவன் மரபினர் அரச மரபினராவர். அரசன் மகன் அரசனுக்குக்கூடிய நிலைமையும் வழி வந்தவர் அரசராகக் கூடிய நிலைமையும் மரபாக அமைந்தன. அல்லவை நீக்கி நல்லவை காத்து செம்மையான செங்கோலாட்சி செய்து குடி மக்களைத் தம் குழந்தையெனப் பாராட்டிக் காத்துவந்த நிலையுடையோரே அரசர் எனப்பட்டனர்.

ஓர் இடத்தே கிடைக்கும் பொருளை அது கிடைக்காத இடத்திற்குக் கொண்டு சென்று நடுவு நிலைமையோடு தமவும் பிறவும் ஒப்ப எண்ணி வணிகத் தொழில் செய்தோரே வணிகர் எனப்பட்டனர்.

நீரால் ஆகும் வெள்ளத்தைக் கொண்டு கால்வாய் அமைத்துப்பிறர்க்கும் பயன்படும் வேளாண்மைத் தொழில் செய்து உலகெல்லாம் புரந்த தொழிலுடையோர் வேளாளர் எனப்பட்டனர்.

இதுபோலவே பறையறைபவன் பறையன் எனப்பட்டனன். பள்ளத்தில் இறங்கி வேலை செய்தோன் பள்ளன் எனப்பட்டான். கம்மியத்தொழில் செய்தோன் கம்மியன் எனப்பட்டான். தச்சு வேலை செய்தோன் தச்சன் எனப்பட்டான். இதுபோலவே ஒவ்வோர் இனமும் செய்த தொழிலின் காரணமாகக் குறிப்பிட்ட பெயர் பெற்றதேயன்றி பண்பினால் பெயர் பெற்றதேயன்றி, தற்போது உள்ளது போல் சாதி வேற்றுமைகள் சங்க காலத்தில் இல்லை.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்[41]

என்பது தமிழர் கொள்கை. தமிழகம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என நான்காகப் பிரிக்கப்பட்டு பாலை என்பதும் உடன் இணைக்கப்பட்டு அதற்கேற்ற உரிப்பொருளும் அமைந்தது. நிலமும், பொழுதும் முதற்பொருள் எனவும் நிலத்திலும் காலத்திலும் தோன்றும் உணவு, தொழில், பண், விலங்கு முதலியன கருப்பொருள் எனவும் பெயர் பெற்றன. அந்தந்த நிலத்து வாழ்ந்த மக்கள் அவற்றிற்கேற்ப உரிப்பொருளை ஆக்கிக் கொண்டு சிற்சில விதி விலக்குகளோடு வாழ்க்கையைச் செம்மையாக அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். உயர் நாகரிகம் பெற்றுத் திகழ்ந்தனர்.

5-4-1: கல்வி: சங்க காலத்து ஆடவர், மகளிர் என்ற இருபாலாரும் கல்வி கற்றிருந்தனர். 600 ஆண்டுப் பரப்பிலே 476 புலவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். அவருள் அரசப் புலவர்கள் 30 பேர், பெண்பாற்புலவர் 30 பேர் காணப்படுகின்றனர். பெண்களிலே காக்கை பாடினிபோன்றவர் இலக்கண நூல்கள் செய்தாரெனின் பெண் கல்வியின் உயர்நிலை பற்றிக் கூற வேண்டுமோ? ஔவையார் என்ற அரசியல் புலவர் தூதவராகப் பணியாற்றிய பெண்பாற்புலவர் என்பது வியப்புக்குரியதாகும். எண்ணெண்கலையோர் இருக்கைகள்

பற்றிச் சிலப்பதிகாரம் பேசுகிறது. மாதவி ஏழாண்டுகள் நடனம் பயின்ற செய்தியும் வெளிநாட்டுக் கல்வி மூன்றாண்டுகளுள் முடிவடைய வேண்டுமென்றும் முறைசார்ந்த கல்வி காணப்படினும் முறைசாராக் கல்வியே பெரிதும் இடம் பெற்ற தென்பதை அறியலாம். ஆசிரியர்கள் பல படிநிலைகளிலிருந்து பல துறைக் கல்வியினைக் கற்பித்தனர். சங்கங்கள் உயர்நிலைக் கல்விக் கூடங்களாக அமைந்து பல துறைக் கல்வியினைக் கற்பிப்பதற்கு வாயிலாக விளங்கின. மாணக்கர் ஆசிரியர்க்கு உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாதும் ஏக்கற்றும், வழிபட்டும் கற்ற செய்திகள் கல்வியானது தனியார் துறையில் அமைந்திருந்தது என்பதை உறுதிப்படுத்தும். இம்மையிற் செம்மையான வாழ்வும், மறுமைக்கேற்ற அருளொடு கூடிய வாழ்வும், வாலறிவனுடைய நற்றாள் பற்றுதலும் கல்வி நோக்கங்களாக அமைந்தன.

<u>5-4-2: கலைகள்</u>: 64 கலைகளும் தமிழகத்தில் உண்டு என்பதற்குச் சிலப்பதிகாரம் சான்றாகும். மேலும் சிற்பக் கலை, ஓவியக்கலை, கட்டடக்கலை, நடனக் கலை முதலியன உயர்நிலையிலிருந்தன என்பதைச் சங்கப் பாடல்கள், இரட்டைக் காப்பியங்கள் கூறுகின்றன.

<u>5-4-3: இல்லறம்</u>: ஒன்றிய மனம் படைத்த கணவனும் மனைவியும் கூடி நன்மக்களைப் பெற்றெடுத்து விருந்தோம்பி சுற்றம் தழுவி பழிக்கு அஞ்சி பகுத்து உண்டு அறத்தாற்றின் அன்பு கலந்த வாழ்வை மேற்கொள்ளுதலே இல்லறம் எனக் கூறப்பட்டது. இல்லறம் அல்லது நல்லறம் இல்லை என்பது தமிழர் தம் கொள்கை. இல்லத்தின் தலைவி இல்லாள் எனப்பட்டாள். மனைக்கும் வாழ்க்கைக்கும் விளக்க மான விளங்கியவள் மனைவியே.

<u>5-4-4: ஒழுக்கம்</u>. உலக வரலாற்றை ஆராய்ந்து, நன்மை எனக் கண்டு, சான்றோர் நெறி எனக் கூறிய வழி முறைகளில் காப்பன காத்துக் கடிவன கடிந்து வாழும் வாழ்வே ஒழுக்க வாழ்வாகும். மனைவிக்குரிய ஒழுக்கம்

கணவனைப் போற்றுதல், தன்னைக் காத்துக் கொள்ளுதல், நன்மக்களைப் பெற்றெடுத்தல் முதலானவை. கணவனுக்குரிய ஒழுக்கம் இல்லறத்தைச் செம்மையாக நடத்துதல்; அரசனது ஒழுக்கம் குடிமக்களைக் காத்தல்; ஆன்றோர் ஒழுக்கம் சான்றாண்மை காட்டுதல்.

5-4-5: சமயம்: சமயம் என்பது யாது? மனிதன் அறத்தொடன் கூடிய செம்மையான வாழ்வு வாழ்தற்கும் அதன் பயனாக அருள் முதிர்ந்து பிற நலம் பேணுதற்கும், அதனால் வாலறிவன் நற்றாள் பற்றுதற்கும் ஏதுவான கோட்பாடுகளின் தொகுப்பேயாம். வாழ்வு நெறியே சமயநெறியாம். ஈண்டு தமிழர் சமயநெறி காண்போம்.

அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல. [42]

என்பதே தமிழர் கண்ட சமயநெறியாம். இவ்வறம் இல்லறமும் ' ஏனைத் துறவறமும் என இருபாற்பட்டது. அறத்தான் வருவதே உண்மையான இன்பம் என்பது தமிழர் கொள்கை. அவ்வறத்துள் இல்லறத்தை முதலறமாகப் போற்றினர்.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது [43]
அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை [44]

என்ற பாடல்களால் அன்புடனும் அறத்துடனும் கூடிய இல்வாழ்க்கை — மனம் ஒன்றிய கணவன் மனைவியோடு கூடிய இல்வாழ்க்கை — அதன் விளைவாகிய பண்பு நலன்களையும் பயனையும் தரும். அப்படிப்பட்ட இல்வாழ்க்கையே அறவாழ்வாம்.

அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் 45

என்ற சிலம்பின் பகுதியால் நன்மக்கட்பேற்றுடன், அறவோர், துறவியர், உறவினர், சுற்றத்தார் முதலியோர்க்கு உதவும் அருள் வாழ்வாக மலர்தற்கு இல்லறமே ஏதுவாம் என உரைலாம்.

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல 46

என்ற புற நானூற்றுள் தமிழர் கண்ட அறம்பொருள் இன்பம் என்ற மூன்றனுள் அறத்தையே முதற்பொருளாகக் கருதினர் என்பது புலனும்.

அறநெறி முதற்றே அரசின் கொற்றம் 47

என்ற பாட்டால் நாட்டை ஆளுகின்றஅ அரசனுக்கும் அவ்வறமே தலையாயதென்றும் அதனால் அரசரும் அறனொடு புணர்ந்த செங்கோலாட்சி செய்தனர் என்பது பெறப்படும். அவ்வறத்தின் நலன் காண்பதற்குரிய வழியாது?

வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங் காலைப் புணை பிறிதில்லை 48
நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் 49

அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றுவதூஉம் 50

போன்றவற்றுல் அறம் திறம்பின் அறக்கடவுளே அழிவினைச் செய்துவிடும் என்பதறிந்தும் கண்டும் கேட்டும் உணர்ந்த தமிழர் அறம் பெருகுதற்கு நல்வினைகளே ஏதுவாம் என அறிந்தும், உயிர் பிரிகின்ற காலத்தும் அவ்வறமே உற்ற துணையாம் என்பதை உணர்ந்தும் நல்வினைகளையே செய்ய முற்பட்டனர்.

அவ்வாறு நல்வினை செய்ய இயலாவிட்டாலும் தீவினை செய்யாமலாவது இருத்தல் நலம் எனக் கூறி நல்வினையை ஊக்குவித்தனர், ஆயினும் நல்வினை தீவினைகளை ஆக்கும் ஆற்றல் முற்றிலும் தம்கையில் இல்லை என்பதைத்

தீதும் நன்றும் பிறர்தர வாரா
ஆருயிர் முறைவழிப் படூஉம் [51]

என்பவற்றால் உணர்த்தினர். நன்மையும் தீமையும் பிறரால் வருதல் இல்லை. அவரவர் செய்த வினையால் நன்மை தீமையும் வந்து சேரும்; உயிர் விதிப் படியே இயங்கும் என்ற உண்மைகளை உணர்த்தினர்.

ஊழிற் பெருவலி யாவுள? [52]
ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் [53]

போன்ற விதி முறையையும் விளைவையும் உணர்ந்து நல்வினையாலே ஆகூழும் தீவினையாலே போகூழும் அமையும் என்றறிந்து நல்வினை செய்தலைத் தலையாகக் கொண்டனர். அத்தகைய வினைக்குத் தக்கவிளைவினைத் தர வல்லதாகிய தெய்வம் – இறைவன் – உண்டென உணர்ந்தனர். உணர்ந்தோரை – சான்றோரை – மதித்துப்போற்றினர் என்பதை

தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின் [54]

என்பதால் அறியலாம்.

ஆகவே செய்கின்ற வினையாலே விதியாலே,
வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது [55]

என்ற மறையினை ஓர்ந்து உணர்ந்தனர். பிறவிப்பிணி அறுக்கத் தலைப்பட்டனர். பிறவிப் பெருங்கடல் நீந்துதற்கு இறைவனையே துணையெனக் கொண்டனர். அவ்விறைவனை அடைதற்குரிய வழி யாது?

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் [56]
காமஞ்சான்ற கடைக்கோட்காலை . . .
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே [57]
உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை [58]
அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் [59]

போன்றவற்றால் அறவழியிலே இல்வாழ்க்கை நடத்துதலும், அன்பு முதிர்ந்த அருள் பிறந்து சிறந்த செம்பொருளாகிய இறைவனை உணர்தலும் காமம் சான்ற காலத்து அருளின் அடிப்படையில் துன்பம் பொறுத்தலும், பிற உயிர்க்குத் துன்பம் செய்யாமையும் அடிப்படையாகக் கொண்ட வாழ்வு நடத்துதலே எனக் கருதினர். யான் என்ற அகப் பற்றும் எனது என்ற புறப்பற்றும் நீக்கி உடைமை எல்லாம் ஆற்றல் எல்லாம் சமுக நலனுக்கே என\அர்ப்பணிக்கும் பற்றறுந்த துறவு நிலை பூண்டு

யாதும் ஊரே யாவருங்கேளிர் [60]

என்ற பொதுநிலை பெறலேயாம், என உணர்ந்தனர்.

ஆகவே அன்பொடும் அருளொடும் அறத்தொடும் நல்வினையொடும் கூடிய இல்லறமும் ஏனைத்துறவறமும் தமிழர் சமய நெறியாம்; தமிழர்க்கு வாலறிவனே தலையாம். இவையே தமிழர் உய்த்த சமய நெறியாம்.

சுருங்கக் கூறின், அமைதியோடு கூடிய செம்மையான வாழ்வினைத் தமிழர் நடத்தினர். அவ்வாறு வாழ்தற்கு அறிவு அடிப்படையன்றே? அவ்வறிவின் வாயிலாகிய அவர்தம் கல்வித் தத்துவத்தை அடுத்துக் காண்போம்.

அடிக்குறிப்புக்கள்:

1. Kuzhandaivel, K; 1965. A comparative study of the Educational Philosophies of John Dewey and Mahatma Gandhi, Madras, Unpublished Docteral Dissertation, University of Madras, P-21.

2. தொல் 949, 950, 960, 964.

3. தொல் 1038.

4. தொல் 1336.

5. புறம் 55.

6. பெரு 36.

7. புறம் 62.

8. பதி 6, பதிகம்

9. புறம் 18.

10. புறம் 20.

11. புறம் 22.

12. பதி 22.

13. பதி 89.

14. மது 496.

15. புறம் 26.

16. புறம் 35.

17. புறம் 73.

18. புறம் 71.

19. இராசமாணிக்கம், மா; 1959. தமிழர் நாகரிகமும் பண்பாடும், சென்னை, வள்ளுவர் பண்ணை, ப. 19.

20. குறள் 754.

21. குறள் 1033.

22. குறள் 1036.

23. பரிமேலுரை, குறள் 1040.

24. புறம் 18.

25. புறம் 40.

26. பட் 44.

27. பொரு 248.

28. பட் 283.

29. புறம் 27, 34, 35, 55.

30. பட் 131.

31. பட் 185-193.

32. பட் 216

33. அகம் 123.

34. நெடு 101.

35. மது 81.

36. மதி 50 4.

37. கலைக்களஞ்சியம், தொகுதி 5, ப.513.

38. பட் 206.

39. சில 6; 84-107.

40. குறள் 30.

41. குறள் 972

42. குறள் 39.

43. குறள் 45.

44. குறள் 49.

45. சில, 6; 71-73.

46. புறம் 31.

47. புறம் 55.

48. புறம் 367

49. புறம் 195.

50. சில.பதி.55.

51. புறம் 192.

52. குறள் 380.
53, சில,பதிகம்; 57

54, சில. 30; 187
55. குறள் 377.

56. குறள் 46.

57. தொல் 1138.

58. குறள் 261.

59. குறள் 241.

60. புறம் 192.

## இயல்-6

## தமிழர் கல்வித் தத்துவம்

6-0-0: மனித வாழ்வு தோன்றியது முதல் நிகழ்ச்சிகளில் நன்மை தீமைகளை ஆய்ந்து மனிதன் அநுபவத்தால் அறிவு பெறுகின்றான். அவ்வாறு அநுபவத்தால் , பெறப்பட்ட அறிவு பிறர்க்களிக்கப்படும்போது கல்வியாக மாறுகிறது. இவ்வாறு அறிந்தோர் அறியாதோர்க்குக் கூறுகின்றபோதே வழி காட்டுகின்ற போதே - கல்வி தோன்றி விடுகிறது. ஆகவே வாழ்வே கல்வி எனவும் கல்வியே வாழ்வெனவும் கூறும் நிலை உண்டாகி விடுகிறது.

இவ்வாறு கல்வியால் பெறப்படும் அறிவை அடுத்த தலைமுறைக்கு வழங்குதல் இயல்பு. அடுத்த தலைமுறை பழைய அநுபவங்களுடன் புதிய அறிவு அநுபவத்தையும் சேர்த்து அடுத்த தலைமுறைக்கு வழங்குகிறது. இவ்வாறு வழிவழியாக வருகின்ற மனித வாழ்வின் அநுபவங்களிலிருந்து மனிதன் தன்னைப் பற்றியும் தான் வாழும் உலகு பற்றியும் இவ்வாழ்வுக்குப்பின் ஏதேனும் வாழ்வு உண்டா என்பது பற்றியும் இவற்றிற்கெல்லாம் கருவி யாது என்பது பற்றியும் ஆய்ந்து கண்டு கூறும் கருத்துக்கள் கோட்பாடுகளாகவும் தத்துவக்கருத்துக் களாகவும் மாறுகின்றன. இவ்வாறு வாழ்வுத் தத்துவம் வடிவமெடுக்கின்றது. இவ்வாழ்வுத் தத்துவவின்றே கல்வித் தத்துவம் தோன்றுகிறது.

"வாழ்வின் தத்துவத்தை ஒட்டியே ஒருவரின் கல்வித் தத்துவம் அமைகிறது"[1].

ஆகவே ஒவ்வொரு நாட்டிலும் வாழ்வின் தத்துவத்தை ஒட்டியே கல்வித் தத்துவம் அமையும் என்பது வரலாறு கண்ட உண்மை. சான்றாக நாகரிகம் முதிர்ந்த மிகப்பழமையான சங்க காலத்தை ஒட்டிய நாடுகள் என அறிஞர் களால் குறிப்பிடப்படுகின்ற ஸ்பார்ட்டாவையும் ஏதன்சையும் எடுத்துக் கொள் வோம்.

ஸ்பார்ட்டா: பழைமையும் நாகரிகமும் மிக்க கிரேக்க நாட்டின் ஒரு பகுதி ஸ்பார்ட்டா. மற்றொரு பகுதி ஏதென்ஸ். இரு நாடுகளும் 140 கல் தொலைவில் அமைந்திருப்பினும் இரு வேறு கொள்கை, அமைப்பு, நோக்கம் கொண்டவை.

ஸ்பார்ட்டா வறண்ட பூமி; வளம் குறைந்தது; மலைப்பாங்கானது. ஸ்பார்ட்டர் எவ்வாறோ அடிமைகளை அதிகம் உற்பத்தி செய்து விட்டனர். அடிமைகளைக் கொண்டே பெரும்பாலான பணிகளைச் செய்து முடித்துக் கொண்டனர். அடிமைகள் இல்லையெனில் வாழ்வே இல்லை என்னும் அளவு ஸ்பார்ட்டர் வாழ்வு அமைந்து விட்டது. ஸ்பார்ட்டரும் அடிமைகளும் 1:9 என்ற விகிதத்தில் இருந்தனர் என்பர் வரலாற்றறிஞர்.

ஆகவே எந்த நேரமும் தமக்கு அடிமைகளாலும் அயல் நகர அரசுகளாலும் ஆபத்து நேரிடும் என்று அறிந்தனர். ஸ்பார்ட்டர் மீது அடிமைகள் மிக்க வெறுப்புக் கொண்டிருந்தனர். பச்சையாகவே தின்று விடும் அளவு அடிமைகள் ஸ்பார்ட்டர் மீது வெறுப்புக் கொண்டிருந்ததாக வரலாற்று அறிஞர் கூறுவர். அயல்நாட்டுத் தாக்குதலின்றும் உள்நாட்டு அடிமைகளின்றும் தம்மைக் காத்துக் கொள்ள வேண்டிய சூழ்நிலையில் அமைந்த ஸ்பார்ட்டர்தம் வாழ்வு இருதலைக் கொள்ளியுள் எறும்பொத்து அமைந்த வாழ்வுக்கொப்பாயிற்று.

ஒவ்வொரு குடிமகனையும் போர்வீரனாக ஆக்குதலையே நோக்கமாகக் கொண்டனர். பயிற்சிப்பள்ளிகளும் இராணுவ முகாம்களுமே கல்விக் கூடங்களாயின. பயிற்சி பெற்ற முதிர்ந்த போர் வீரனே ஆசிரியன் ஆகினன். போர்ப்பயிற்சியே வாழ்வுப் பயிற்சி ஆயிற்று. ஏழு வயது முதல் 30 வயது வரை பொது மன்றம், பயிற்சிப் பள்ளி, இராணுவ முகாம் போர்க்களம் என்று இன்னவாறு ஸ்பார்ட்டனின் வாழ்வு கழிந்தது. போர்ப் பயிற்சியின் ஆர்வத்தைத் தூண்டுகின்ற அளவே 'ஓமரின்' பாடல்களும் 'லைகர்கசின்' எழுத்தறிவும் சட்டங்களும் இடம் பெற்றன.

இத்தகைய போர்வீரனை ஆக்குதற்கு அடிப்படையான வலிமைமிக்க குழந்தைகளைப் பெற்றுக் கொடுத்தல் தாயின் கடமை ஆயிற்று. எடை குறைவான வலிமையற்ற குழந்தைகளை இயற்கைச் சூழலில் அமைந்த மலைச் சரிவுகளில் கிடத்திக் கொன்று விடுமளவு போரின் தேவை பெருகி இருந்தது.

"ஸ்பார்ட்டா வீரன் போர் செய்தலும் இறத்தலும் தனக்காக அன்று. தன் நாட்டுக்காகவே"[2].

"ஸ்பார்ட்டாவின் ஒரே நோக்கம் திறமையான நாட்டுப்பற்று மிக்க போர்புரியும் இனத்தைப் பெருக்குதலே"[3].

"ஸ்பார்ட்டாவின் கல்விமுறை தனி மனித வளர்ச்சியைப் புறக்கணித்து நாட்டுச் சேவையையே அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது"[4].

ஆகவே வாழ்வுத் தத்துவத்திலிருந்து போர்வீரனை உருவாக்குதற்கேற்ற கல்வித் தத்துவம் ஸ்பார்ட்டாவில் அமைந்தது என்பது வெளிப்படை.

ஏதன்ஸ்: கிரேக்கத்தின் இரு முக்கிய நகர அரசுகளில் ஏதன்ஸ் ஒன்றும். ஸ்பார்ட்டாவைப் போலவே ஏதன்சிலும் அடிமைகள் மிகுதியாக விளங்கினர். அடிமைகளிலிருந்தும் அயல் நகர அரசுகளிலிருந்தும் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு போர்ப்பயிற்சி, வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தது. எனினும் ஸ்பார்ட்டாவைப் போலன்றி குடியாட்சிப் பண்புகளுக்கும், அறநெறிப் பண்புகளுக்கும் அழகுணர்ச்சிக்கும் மகிழ்ச்சிக்கும் மிக்க மதிப்பளித்துப் போற்றினர். உடலும் உள்ளமும் நன்கு வளர்ச்சி பெறுதல் வேண்டும் என்பது அத்தீனியர் கொள்கைகளாம். இதற்கேற்ற கல்விமுறை ஏதன்சில் அமைந்தது.

கல்வித் துறையில் தனி மனிதனுக்கு உரிமை வேண்டும் என்று ஏதன்ஸ் நம்பியது. ஏழு வயது வரை குழந்தையின் கல்விப் பொறுப்புகளையும் ஒழுங்கினையும் தந்தையும், தாயும் செவிலியரும் கவனித்துக் கொண்டனர். 8 வயது

முதல் 12 வயது வரை தொடக்கப்பள்ளியிலும், 13 வயது முதல் 16 வயது வரை இடைநிலைப்பள்ளிகளிலும் 16 முதல் 18 வயது வரை உடற்பயிற்சிப் பள்ளிகளிலும் அதன்பிறகு உயர் விருப்பக் கல்விக்கூடங்களிலும் கற்றனர். எழுதுதல், படித்தல், கணிதம் ஆகியவற்றை இலக்கண ஆசிரியரிடமும், இசை, கவிதை, இசைக்கருவிகள் முதலியவற்றை இசையாசிரியரிடமும், உடற்பயிற்சியை உடற்பயிற்சி ஆசிரியரிடமும் கற்றுக் கொண்டனர். 18 வயது முதல் 20 வயது வரை நாட்டுச் சேவையில் ஈடு பட்டனர்.

இத்தகைய கல்வி குடியுரிமை உள்ள ஆண்களுக்கென 'சோலன்' என்பவரால் வகுக்கப்பட்டது. 'பெடகாக்' என்ற அடிமைகள் மாணக்கர்களுடன் சென்று உதவினர். மாணக்கரின் இளமை ஒழுக்கத்தில் இவர்க்குப் பங்கிருந்தது.

அழகு, மென்மை, குடியாட்சிப் பண்பு, உரிமை, உடல் உள்ள வளர்ச்சி போன்றவை அத்தீனியரின் வாழ்வு நோக்கங்களாம். அதற்கேற்ப மாணக்கரின் மன எழுச்சிகளைப் பண்படுத்தி சமூக அறநெறிப் பண்புகளின் அடிப்படையில் செயற்படும் மன உறுதியையும் உடலுறுதியையும் வளர்க்கும் நோக்கங்கள் கல்வித் திட்டத்தில் இடம் பெற்றன.

ஆகவே வாழ்க்கைத் தத்துவத்தை ஒட்டியே கல்வித் தத்துவம் ஏதன்சில் அமைந்தது என்பது தெளிவாம்.

ஆயின் தமிழர் வாழ்வியலை ஆய்ந்து பார்ப்பின் தனி மனிதனே நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்புடையவனாக இருந்தான் என்பது

எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே[5]

என்பதால் பெறப்படும். அஃதாவது ஆடவர் எவ்வாறு அமைகிறார்களோ அதைப்பொறுத்தே நாடமையும் என்பது தமிழர் கொள்கையாம். ஈண்டு ஆடவர் என்பது மக்கள் இனத்தைக் குறிக்கும்.

6-1-1: வாழ்வும், தத்துவமும்:

வாழ்வின் அனுபவங்களின் தொகுப்பாகப் பெறப்படும் கொள்கைகளும் கோட்பாடுகளுமே தத்துவங்களாக மாறுகின்றன. தகுதியான வாழ்வமைப் புக்களை முடிவு செய்யும் பணி தத்துவத்தினுடையது. காரண காரியத் தொடர்புடன் அமைவது தத்துவம். அத்தத்துவம் வாழ்க்கைச் சிக்கல்களைத் தீர்க்க உதவும் வழிகாட்டி; வாழ்வுக்காகவும் வாழவும்பயன்படுவது தத்துவம். மனிதன் தன்னைப் பற்றியும், தான் வாழும் உலகு பற்றியும் உலகத்தின் உண்மை மதிப்புகள் பற்றியுந் தொகுத்து எண்ணி மெய்யுணர்வு பெற முயல்கின்ற முறைப்பட்ட அறிவார்வமே தத்துவம். சுருங்கக் கூறின் மனிதன் வாழ்வாங்கு வாழ வழி காட்டவும் கருத்துக்களில் தெளிவு காணவும் தெளிந்தபின் முடிவெடுக்கவும் எதிர்காலம் பற்றி சிந்தித்துச்செயல் படவும் தத்துவமே வழி காட்டியாகும். ஆகவே வாழ்வும் தத்துவமும் ஒருங்கிணைந்தவை; பிரிக்க முடியாதவை; ஒன்றையொன்று சார்ந்து வாழ்பவை என உரைலாம்.

உலக வரலாற்றை ஓர்ந்து பார்ப்பின் தத்துவ அறிஞர்கள் எல்லோரும் கல்வியாளர்களாகவே விளங்கினர் என்பது பெறப்படும். சான்றாக சாக்ரடீஸ், பிளேட்டோ, இயேசுநாதர், திருவள்ளுவர், ஔவையார், சாத்தனார், இளங் கோவடிகள், திருமூலர், விவேகானந்தர், காந்தியடிகள், இராதாகிருஷ்ணன் போன்ற தத்துவ அறிஞர் யாவரும் தலை சிறந்த கல்வியாளராக - சமூகக் கல்வியாளராக - விளங்கினர் என்பது தெளிவு.

"பெரும் தத்துவ அறிஞரெல்லாம் எப்போதும் கல்வி அறிஞராகவே உள்ளனர்"[6] என்ற எம்.எஸ். படேலின் கூற்று ஒப்பு நோக்கத் தக்கதாம்.

6-1-2: தத்துவமும், கல்வியும்: வாழ்வும், தத்துவமும் இணைபிரியாதவை போலவே தத்துவமும், கல்வியும் இணை பிரியாதவை எனலாம்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.[7]

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு[8]

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக[9]

என்ற குறட்பாக்களால் எப்பொருளை யாரிடமிருந்து கேட்பினும் உண்மையை ஆராய்ந்து காண்பதே அறிவு எனவும், எப்பொருள் எத்தன்மையோடு கூடி இருப் பினும் மெய்யறிவைக் காண்பதே அறிவு எனவும், கற்க வேண்டுவனவற்றைக் கசட றக் கற்றலும், கற்றதன் பின் கற்றதற்கேற்ப வாழ்தலும் கல்வியின் பயன் எனவும் உரைலாம்.

மெய்யறிவின் நாட்டமே தத்துவம். மெய்யறிவின் நோக்கம் வாழ்வாங்கு வாழ்தல். வாழ்வாங்கு வாழ வழி காட்டுவது கல்வி. அக்கல்வி பெறும் முறை கசடறக்கற்றல். அக்கற்றலின் பயன் அதற்குத் தக நிற்றல் அல்லது வாழ்வாங்கு வாழுதல். அச்சீரிய வாழ்வு மெய்யறிவின் நாட்டத்தை வலுப்படுத்துகிறது. ஆகவே தத்துவமும் கல்வியும் இணைந்தவை. இதனால் வாழ்வென்ற நாணயத்தின் ஒருபகுதி தத்துவம், மறுபகுதி கல்வி என்றறியலாம். இதையே இன்றைய கல்வி இயலார் பின்வருமாறு கூறுகின்றனர்.

"தகுதியான வாழ்வுக்குத் தேவையான அமைப்பைக் கூறுவது தத்துவம். தரமான வாழ்க்கை அமைய வழி செய்வது கல்வி. ஆகவே இரண்டும் இணைந்தவை."[10]

"தத்துவம் என்பது சிந்தனைப் பகுதி எனக் கொண்டால், கல்வி இத்துடன் தொடர்புடைய செயற்பகுதி எனல் பொருந்தும்."[11]

"கல்வியும் தத்துவமும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். ஒன்று எண்ணப்பகுதி மற்றையது செயற்பகுதி".[12]

ஆகவே ஒவ்வொரு சமுதாயத்திலும் வாழ்வுடன் தத்துவமும் தத்துவத்துடன் கல்வியும் இணைந்து செயல்படுவதால் வாழ்வுத் தத்துவத்திலிருந்து கல்வித் தத்துவம் பிறக்கும் என்பது தெளிவன்றோ?

<u>6-1-3: கல்வித் தத்துவம்:</u> மெய்யறிவின் நாட்டமே தத்துவம் எனக் கண்டோம். அதைப் பெறுதற்குரிய கருவிகளுள் தலையாயது கல்வியே. ஆதலால் கல்வித் தத்துவம் என்பதைப் பின் வருமாறு வரையறுக்கலாம்.

அறிவு-மெய்யறிவு-பெறுதற்குக் கருவியாகிய
கல்வி செய்ய வேண்டிய கல்விப் பணிகளை
வரையறுப்பதே கல்வித் தத்துவம்.

இக்கல்விப் பணியினையே இன்றைய கல்வி இயலார்

"கல்வித் தத்துவம் என்பது கல்வியின் நோக்கம், கல்வித் திட்டம், கற்றல் - கற்பித்தல் முறைகள், ஆசிரியர் - மாணாக்கர் செய்தி, தயாரிப்பு, அளவிடுதல் முதலியவற்றையும் வாழ்வு எண்ணங்களையும் அடிப்படையாகக் கொண்டது"[13] என்பர்.

மேற்கூறியனவற்றை அடியாகக் கொண்டு தமிழர் கல்வித் தத்துவத்திற்கு அடிப்படையான வாழ்வையும் நோக்கங்களையும் அதனால் பெறப்படும் கல்வித் தத்துவங்களையும் அறிவோம்.

<u>6-1-4: தமிழர் வாழ்வும், நோக்கங்களும்:</u>

சங்க காலத் தமிழர் கல்வி, கலை, நாகரிகம், பண்பாடு பெற்று அகம் புற ஒழுக்கம் பேணி, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தனர்; ஆதலின் அவர்தம் காலம் பொற்காலமாயிற்றென்பர் அறிஞர்.

ஏனைய பொற்காலங்களை ஓர்ந்து பார்ப்பின் பெரிக்லியஸ் பொற் காலம் சீசர் பொற்காலம், குப்தர் பொற்காலம், என்று அரசர் பெயரால்

அமைந்திருக்க தமிழர் பொற்காலமே 'சங்க காலம்' எனக் குறிக்கப்பட்டமை உணர்தற்குரியது.

சங்கம் என்பது யாது? கற்றறிந்த கல்விப் புலமை மிக்க புலவர்களும் ஆசிரியர் இரிசின்ற ஆசிரியப் புலவர்களும் ஒருங்கு கூடிக் கலந்து உரையாடி விவாதித்து, உண்மைகளை உணர்ந்து, வேந்தர் ஆதரவால் பற்பல நூல்களைச் சமுதாய நலத்திற்கென வெளியிடக் கருவியாகக் கொண்ட இன்றைய பல்கலைக் கழகங்கட்கு இணையான இடமேயாகும்.

தொடக்கத்தில் 'தமிழ்நிலை', 'கூடல்', 'கழகம்' போன்ற பெயர் பெற்றிருந்த அமைப்பு பிற்காலத்து 'சங்கம்' என்ற பெயரைப் பெற்று இன்றளவும் குறிக்கப்படுகின்றது.

கல்விக் குழுவின் பெயரால் - சங்கப் புலவர் அமைப்பின் பெயரால் - சங்க காலம் எனக்குறிப்பிடப் பட்ட ஒன்றே தமிழர்க்குக் கல்வி மீதிருந்த - கல்வி தந்திருந்த - மதிப்பினையும் உயர்வினையும் பற்றினையும் உள்ளங்கை நெல்லிக்கனியாகக் காட்டுமன்றோ?

இத்தகைய கல்விச் சிறப்பு, வாழ்வு நோக்கத்தால் தெளிவு பட்டிருந்தமை சங்க இலக்கியம் காட்டும் உண்மையாம்.

மனிதன், பிற மனிதனின் முன் தோன்றும்போது புகழொடு தோன்ற வேண்டும் என்பதும் அவ்வாறு புகழ்படத் தோன்றுதவர் பிறப்பால் பயனில்லை எனவும் குறள் முழங்குகிறது.

தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.[14]

என்பது குறள்.

வாழ்வியல் நூலாகிய குறளில் அறத்துப்பாலின் பிரிவில் இல்லற இயலின் நிறைவாக இலங்கும் 'புகழ்' என்ற அதிகாரத்தில் உள்ள பாட்டு இது. இல் வாழ்வில், வாழ்க்கைத் துணை நலம் பெற்று, நன்மக்கட்பேறு கண்டு, அன்பு டைமை பேணி விருந்தோம்பி, இனியவை கூறி, செய்ந்நன்றி போற்றி, நடுவு நிலைமையைக் கடைப் பிடித்து அடக்கம் கொண்டு, ஒழுக்கம் பேணி, பிறனில் விழையாது, பொறை கொண்டு, அழுக்காறற்று, வெஃகாது, புறம் கூறாது, பயனில மொழியாது, தீவினை அஞ்சி, ஒப்புரவறிந்து, ஈகையைக் கடைப்பிடித்து

வசை யொழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர்[15]

என்று குறள் கூறுகிறது.

இத்தகைய இல்வாழ்க்கை வாழ்கின்ற மனிதன் உண்மையான புகழ்பெற்று வாழ இயலும் என்பது தமிழர் வாழ்வியல் கொள்கையும், நோக்கமுமாகும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்[16]

என்பது தமிழர் கொள்கையாம்.

முற்கூறியபடி இல்லற நெறி நிற்போன் - கடைப்பிடிப்போன் - அருளுடைமை பூண்டு மேல்நிலை எய்தலாம் என்பதும் தமிழர் வாழ்வு நோக்க மாம். இவ்வாறு இல்லற நெறி நிற்றல், அருளுடைமை புனுதல் மேல்நிலை எய்தல் இவற்றின் தத்துவங்களைக் கூர்ந்து நோக்குவோம்.

## 6-1-5: இல்லற நெறி நிற்றல்:

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு[17]

என்பது தொல்காப்பியம்.

உலகத்து உயிர்கள் யாவும் இன்பத்தை விரும்புதல் இயல்பு. உயிர்கட்குள் சிறந்த மக்களும் விதி விலக்கின்றி இன்பத்தை விரும்புவர். இன்பம் எனவாகப் பொருளை விரும்புதலும் அவ்விரண்டனை அடைதற்குரிய கருவியாக அறத்தைக் கடைப்பிடித்தலும் தமிழர் நோக்கமாம். அவ்வின்பம் இல்லறத்தாலும் துறவறத்தாலும் தோன்றும். இல்லறம் முதிர்ந்து அருட்செல்வம் கனிந்த போது துறவற இன்பம் - பேரின்பம் - கிட்டும் என்பதும் தமிழர் வாழ்வுக் கொள்கைகளாம்.

மனம் முதலியவை ஒன்றிய கணவனும் மனைவியும் சேர்ந்து வாழ்வதால் பெறப்படும் இன்பமே இல்லற இன்பமாம்.

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது[18]
அறனெனப் பட்டதே இல் வாழ்க்கை[19]
தம்மில் இருந்து தமது பாத்துண்டற்றால்[20]
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே[21]

போன்றவற்றால் அன்புடனும், அறத்துடனும் கூடிய இல்வாழ்க்கையே பண்பினையும் பயனையும் தர வல்லதென்று அறியலாம். தம் இல்லிருந்து தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு அறவழியில் இல்வாழ்க்கை நடத்துதற்கு அடிப்படையானது ஒன்றுகலந்த உள்ளம் ஒத்த கணவனும் மனைவியுமே. அன்புடைமையில் விருந்தோம்பி இனியவை கூறி செய்ந்நன்றி மறவாது நடுவு நிலைமையோடு ஒழுக்கம் உடைமை பூண்டு பொறுமையற்று புறம் கூறாது, தீவினை அஞ்சி, ஒப்புரவறிந்து, ஈகை பேணி நன்மக்கட்பெற்று புகழுடன் வாழின்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்[22]

என்றதற்கேற்ப வானுறையும் தெய்வ நிலை பெறக்கூடும் என்பது தமிழர் கண்ட இல்லற வாழ்வியலாம்.

<u>துறவறம்</u>: துறவு என்பது யாது? காவியுடுத்து, தாழ்சடை வைத்துக் காடுகள் புக்கு வாழ்கின்ற நெறி மட்டுமன்று. அவ்வறத்தின் முதிர்ச்சியால்- காமம் சான்ற பொழுது - அருள் கனிந்த போது - யான் என்னும் அகப் பற்றும் எனது என்னும் புறப்பற்றும் விட்டு உடைமை ஆற்றல் யாவும் சமூகத்திற் கெனவே எஞ்சிப் பாடுபடும் சமூக நோக்குத் துறவும், அதன் முற்றிய நிலையில் சிறப்பெறும் செம்பொருளாகிய வாலறிவன் நற்றாள் பற்றுதலும் ஆகும்:

> காமஞ்சான்ற கடைக்கோட்காலை
> ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே[23]

என்ற தொல்காப்பியப்படி காமஞ்சான்ற போது இல்லறத்தில் பற்று நீங்கி ஈண்டிருந்தவாறே இறைவனைக்காண முயலும் நெறியாம். இதையே இன்றைய காந்தியடிகளும் கடைப்பிடித்து வாழ்ந்து காட்டினர்.

இவ்வில்லறத்திற்கும் ஏனைத்துறவறத்திற்கும் பொருள் அடிப்படையே என்பதை அறிவோம்.

<u>பொருள்</u>: வாழ்வாங்கு வாழ்தலின் அடிப்படைத் தத்துவங்களின் ஒன்றான பொருள் குறித்து

> அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை பொருளில்லார்க்கு
> இவ்வுலக மில்லாகி யாங்கு[24]
>
> செய்க பொருளை[25]

என்ற பாடல்களால் பொருள் இம்மைக்குரிய - இன்றியமையாத - கருவி என்பதை அறியலாம். அப்பொருளை விரைந்து தொகுக்க என்பதும் பொது மறையாம்.

ஆகவே, தமிழர் வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது என்று உணர்ந்து காலிலும் கலத்திலும் சென்று பொருள் ஈட்டினர் ஆயினும்,

அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்[26]

என்றமையான் அறநெறியிலேயே மக்களும் மன்னரும் பொருளை ஈட்டினர். அற நெறிப்படாத பொருள் பல கோடி வரினும் புறக்கணித்தனர். இவை தமிழர் வாழ்வியற் கொள்கைகளாம். பழியுடன் உலகே வரினும் ஏற்றுக் கொள்ள மாட்டார் என்று புறம் பாடிற்று.

<u>அறம்:</u>

இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் பொருள் பெறுதற்கும் அடிப்படையாக அமைந்த அறம் என்பதன் தத்துவம் யாது?

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்[27]

மனத்தில் குற்றம் அற்று வாழ்தலே அறம் ஆகும். மாசு என்பது யாது?

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்[28]

என்ற குறட்பாவால் பொறாமை, பேராசை, கூடாவெகுளி, கடுஞ்சொல் ஆகிய குற்றங்களை நீக்கி வாழும் வாழ்வே - முறையே - அறமாம். அறம் பொருள் இன்பம் என்ற மூன்றனுள் அறமே தலையாயது. ஏனைய இரண்டுக்கும் வழியாயது என்பது தமிழர் கொள்கையாம். புகழினையும், செல்வத்தினையும் தருகின்ற அறத்தை விட உயிர்கட்கு - மக்களுக்கு சிறிய ஊதியம் ஒன்றும் இல்லை என்பதும் தமிழர் தத்துவமாம். அவ்வறத்தாலேதான் உண்மையான இன்பம் கிட்டும் என்பதும் அவ்வறத்தை இயலுமிடங்களிலெல்லாம் இடையறாது செய்தலே பிறவிப்பிணி யறுத்தற்குக் கருவி என்பதும் தமிழர் கண்ட வாழ்வியல் தத்துவங்களாம். அவ்வறம் திறம்பின் அவ்வறமே கூற்றுகி வந்து மனிதனை அழித்து விடும் என்பதும் அவர்தம் கோட்பாடாம்.

அரசு அறம்:

தனி மனிதன் இல்லறம் அமைத்து சுற்றம் பேணி ஊர் அமைத்து நாடாக்கினன். நாட்டைக் காக்க இறைவன் போன்ற அரசன் தேவைப்பட்டான். தமிழகத்தைப் பொறுத்த அளவு தொல்காப்பியர்க்கு முன்பிருந்தே - சங்க கால இறுதி வரை

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில் [29]

முடியுடை மூவேந்தர் ஆட்சி செய்தனர்.

தனி மனித அறமே இல்லறமாய், சமுதாய அறமாய், துறவறமாய், வளர்ச்சி பெற்றது. ஆயின் அரசுக்கு விதிக்கப்பட்ட அறம் வேறுபட்டதாம்.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம் [30]

என்ற புறப்பாட்டால் மக்களுக்கு அரசனே உயிர் என்பதுதமிழர் கொள்கை. அவ்வாறே அரசனும் மக்களை உயிரெனவும், குழந்தைகளெனவும் கருதிக் காப்பாற்றினன். மக்களின் நலனே அரசனுடைய நலமாயிற்று. மக்கட்குத் தீங்கு நேரின் அவ்வரசனுக்கே தீங்கு நேரிட்டது போல எண்ணி செங்கோலாட்சி செலுத்தியமை தெளிவாம். ஆகவே இல்லற வழி நின்ற குடி மக்களின் உள்ளங்களில் ஆட்சி செலுத்திய முடியுடை மூவேந்தராட்சி உண்மையில் குடியாட்சியாக விளங்கியது.

ஸ்பார்ட்டாவில் மன்னர்கள் குடி மக்களை நாட்டுக்காக உழைக்க வேண்டிய வீரர் கூட்டம் என்றே எண்ணினர். நாட்டு நலனே குடி மக்கள் நலன் என்ற நிலைமை அடிப்படையாக அமைந்தது. குடி மக்களை உயிர்போல் கருதிய வேந்தர் ஸ்பார்ட்டாவில் இல்லை. மக்களுள் வலிமை உடைய வீரர்களே நாட்டுக்குத் தேவை என்ற நிலை நிலவியது. ஆயின் தமிழகத்தில் தகுதியுடையார் தகுதியற்றோர் என்ற வேற்றுமை பாராட்டாது எல்லா மக்களையும் ஒன்றெனக் கருதிய ஆட்சி நடைபெற்றது என்பதற்கு சங்க இலக்கியங்களே சான்றாகும்.

ஆகவே, தமிழர் தத்துவம், வாழ்க்கைத் தத்துவமாக அமைந்தது. ஆயின் ஸ்பார்ட்டரின் தத்துவம் போர்த் தத்துவமாக அமைந்தது.

படையினையும், தகுந்த அமைச்சரையும் தேவையான அறனையும் அமைத்துக் கோடல் அரசனுடைய அறமாயிற்று. "அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், குறைவு படாது, மடியின்றி, நாட்டுக்குத் தேவையான அறக்கல்வி பெற்று துணிவுடன் ஆட்சி செய்ய வேண்டியது அறம் ஆயிற்று. மக்கட்கு வேண்டிய பொருள் பெறும் வழி வகைகளை அமைத்துக் கொடுத்தலோடு அரசுக்கு வேண்டிய பொருள் பெற வழிகளை இயற்றலும், பொருள் ஈட்டலும், அதைக் காத்தலும் நாட்டு நன்மைக்கென வகுத்தலும் அரசனின் அறத் தத்துவமாயிற்று. காட்சிக்கு எளியனுகி கட்டபோது கடுஞ்சொல் அற்று இன்சொல்லால் அளி கொண்டு முறை செய்யும் மன்னவன் இறைவனோடு ஒப்பாகக் கருதப்பட்டான். கொடையும், அருளும், குடி காத்தலும், செங்கோலும், உடையானே சிறிய அரசன்"[31] என்று குறளில் இறை மாட்சி கூறிற்று.

முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டுப வேண்டுபவர்க்க ருளும் அரசரே தமிழகத்தை ஆண்டனர். நீதிக்காகக் கை குறைத்த பாண்டியனும், கண்ணகி வழக்குணர்ந்து உடனடியாக உயிர் துறந்த நெடுஞ்செழியனும், புள்ளின் புன்கண் தீர்த்த சிபியும், மகனைத் தேர்க்காலில் முறை செய்த சோழனும் சான்றும்.

கூடாரை அழித்தல், குடி மக்களைக் குழந்தை போல் பேணுதல் அரச கடமையாயிற்று.

இவ்வாறு அரசர் நாடு காவாத போது - கொடுங்கோலாட்சி செய்த போது - அறக்கடவுளே அழித்து விடும் என நம்பினர் என்பதை

அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றுவது உம் [32]

என்ற சிலப்பதிகாரத்தால் அறியலாம்.

இத்தகைய அறவாழ்வு நடத்துதற்கு அடிப்படையானது அறிவாம். அறிவை வளப்படுத்துவது கல்வியாம். கல்விக்குக் கருவி நூலாம். இதையே தமிழ்மறை

மதிநுட்பம் நூலொடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை[33]

எனக் கூறுகிறது. "மதி என்பது மனிதனின் தோற்றத்திலேயே இயல்பாக அமைந்திருக்கும் இயற்கை அறிவாம். இயற்கையாகிய நுண்ணறிவே மதி எனப்பட்டது. அது தெய்வம் தர வேண்டுதலின் முற்கூறப்பட்டது"[34] என்பர் பரிமேலழகர்.

இந்நுண்ணறிவினையே இன்றைய கல்வி உளவியலார் மரபு வழி நுண்ணறிவு (Heriditary Factor ) என்று கூறுவர்.

இவ்வறிவன்றி செயற்கையாகிய கல்வி கேள்வியுடன் நூலறிவால் ஏற்படுத்திக் கொள்ளும் அறிவே நூலறிவாம்.

நூலின் அரசுக்கடிப்படையான அறத்தின் தத்துவத்திற்குக் கல்வியே உறைவிடமாம்.

கல்வி என்பது முறைசார் கல்வியுடன் முடிவடைவதன்று; வாழ்நாள் முழுதும் தொடர்வது. இத்தொடர் கல்வியினைப் பெறுகின்ற வாயிலே கேள்வியாம். எனவே கேள்வியால் பெறப்படும் கல்வி அன்றைய முறை சாராக் கல்வியாம். தமிழர்தம் கேள்வியாகிய இக்கல்விக்கே முறைசார் கல்வியினும் மிக்க மதிப்பளித்திருந்தனர் என்பதை

கற்றில ராயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை.[35]

என்ற குறளால் அறியலாம்.

இயற்கையாகிய மதியை நூலறிவால் வெளிக் கொணர்ந்து செயற்படுத்தலே கல்வியாகும்' என்ற விவேகானந்தர் கூறிய கூற்று ஒப்புநோக்கி உணரற்பாலது.

"மனிதருடைய உள்ளத்தில் நிறைந்திருக்கும் இயற்கை ஆற்றலை வெளிக் கொணர்தலே கல்வி யாகும்" – விவேகானந்தர்.

ஈண்டு அறிவு, கல்வி என்பதெல்லாம் இந்நூலறிவையே குறிக்கும் என்பது சிந்தனைக்குரியது. செயல்களைச் செய்கின்ற காலத்து சிலபோது அச்செயல்கள் முடிதற்கு இடையூறுகளாகி முன்னே நிற்கும் சூழ்ச்சிகள் காணப்பட்டால் அவ்விடையூறுகளை நீக்கிக் கொள்ள வழிகாட்டுவது நூலறிவேயாம். இவை அல்லாத அறிவு மெய்யறிவு எனப்படும். அவன் அருளாலே அவன்தாள் வணங்குதற்கேற்ற அறிவே மெய்யறிவு எனப்படும்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி[36]

என்பதால் மெய்ப்பொருளாகிய செம்பொருளறிவு பெறுதற்கும் கற்றல் கருவி என்பது கருத்தாம். அம்மெய்ப்பொருளறிவு வீடு பேற்றுக்கு – பிறவாமைக்கு வழி காட்டும் என்பது தமிழர் கொள்கையாம். இவ்வழியைக் காணுதல் மட்டுமன்றிக் கடைப்பிடித்தல் கடம். இக்கடைப்பிடித்தலின் ஒழுக்கம் இன்றியமையாதது. ஆதலின் கல்விக்குப் பயன் ஒழுக்கமே.

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்[37]

என்ற பாட்டால் ஒருவன் தான் கற்ற நூல் முதலியவற்றை ஒருகால் மறப்பானேயினும் மீண்டும் ஓதி உணர்ந்து கொள்ள இயலும். ஆயின் ஒழுக்கத்தை மறந்து வழுவுவானேயாயின் அவனுடைய பிறப்பின் பயன் குன்றி இழிநிலை உண்டாகும். இக்கல்வியை ஒருவன் பெறுவினும் அவனுக்கு ஒழுக்கமே உறுதி காட்டும். இழிநிலை வாராதும் தாராதும் காக்கும்.

இவற்றால் நூல் உண்மையும், நூலறிவு உண்மையும் அவை அறிவு தரல் கருவி என்பதும், அறிவு தரும் நூல்களே நூல்களாக மதிக்கப்பட்டன எனவும்

உரைலாம். பலரொடு பல கால் ஆய்ந்த சமூக நன்மைக்கென ஆக்கப்பட்ட அன்றைய கருத்துக்களின் வரி வடிவமாகிய நூல்களுடன் இன்றைய நூல்களையும் அவற்றின் நோக்கமாகிய பொருட்பற்றினையும் நோக்கும்போது வியப்பே விளையும். அந்நூலோடு தொடர்புடைய கல்வி பற்றிக் காண்போம்.

6-1-6: கல்வி:

கல்வி என்பது யாது?

கல்வி என்ற சொல்லின் ஆங்கில, இலத்தீன் மொழி மூலங்களை ஆய்ந்து பார்ப்பின், 'கொண்டு வருதல்', 'முன்னேறுதல்', 'வளர்த்தல்', 'உயிர்த்தல்', 'வெளிக்கொணர்தல்', 'தோண்டுதல்' என்றெல்லாம் பொருள் தரும்.

கற்க வேண்டியவைகளை எல்லோரும் குற்றம் நீங்குமாறு கற்று, கற்றதன் பின் அதற்கேற்ப வாழ்க்கை நடத்துதற்கு உதவியாகும் கருவியே கல்வியாம் - திருவள்ளுவர்.

வாலறிவனுடைய நற்றாள் பற்றுதற்கும் சிறப்பு என்னும் செம்பொருள் காணுதற்கும் மீண்டும் பிறவா நிலை அடைதற்கும் உரிய கருவி கல்வியே - திருவள்ளுவர்.

குழந்தையின் உடல் உள்ள ஆன்மப் பண்புகளை வெளிக் கொணர்தலே கல்வி எனக் கருதுகிறேன் - காந்தியடிகள்.

மனிதனிடம் உள்ள இயற்கை நிறைவினை வெளிக் கொணரும் கருவியே கல்வி - விவேகானந்தர்.

பரந்த உலக மனப்பான்மை பெறுதல் உரிமை, நடைமுறைப்பயன், முதலியவை தருவதே கல்வி - தாகூர்.

சமூகமே பள்ளியாகும்; தனி மனிதனுக்கு நற்கல்வியளிக்கப்பட்டால் சமூகத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை - எம்.எஸ். படேல்.

ஒழுக்கத்தை வளர்ப்பதே கல்வி – ஹெர்பர்ட்

உடலுக்கு உணவு தேவை. அதேபோல் சமூகத்திற்குக் கல்வி தேவை. குழந்தையின் இயல்பில் வாழ்வுடன் இயைந்து ஆற்றலை வெளிப்படுத்துவதே கல்வி– செய்து கற்றல், வாழ்ந்து கற்றல், செயல் முறைகளே கல்வி நோக்கமாகும்– ஜான்டூயி.

இவற்றால் மனிதனை சமூகத்தோடு இயைந்து வாழச் செய்ய உதவுவதே– மனிதனாக வாழச் செய்வதே – வாழ்வாங்கு வாழ வழி செய்வதே கல்வி என்று உரைலாம்.

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.[38]

என்ற குறளால் கசடறக் கற்றலும் கற்றதன் பின் அதற்கேற்ப வாழ்தலும் தமிழர் கல்வி நோக்கம் என்று உரைலாம்.

<u>ஆசிரியத்தத்துவம்:</u> முன் கூறியபடி மதி நுட்பத்தோடு கூடிய நூலறிவு பெறும் போதும் கசடு நீங்கக் கற்கும் போதும், கற்றல் தன்னாலே மட்டும் இயலுமா? தான் அறியாதபோது – விளங்காத போது – ஐயங்கள் ஏற்படும்போது – கசடு நீக்கி வழி காட்டுதற்கு வழி காட்டி வேண்டாவா? நூல் உண்டு என்றமையின் கற்போருக்கு கற்றல் குறை நீக்கிக் கற்க வழி காட்டி உதவுவோன் வேண்டும் என உரைலாமன்றே? அவ்வாறு வழிகாட்டும் முறை யாது? குற்றம் நீக்கி – அஃதாவது ஆசு நீக்கி – ஆசினை இரிகின்ற – குற்றத்தை நீக்குகின்ற ஆசிரியன் வேண்டுமன்றே? இதனால் இவ்வடிப்படையான குற்றங்கள் இரிகின்ற ஆசிரியன் உண்டு என உரைலாம். தனி மனிதனிடமோ சமூகத்திடமோ அரச னிடமோ மாணக்கனிடமோ காணப்படும் ஆசுகளை இரிகின்றவன்–நீக்குகின்றவன்– ஆசிரியன் எனப்பட்டான். அன்றைய ஆசிரியர் சமூகக் கல்வியாளர் என்ற பரந்த கருத்துடன் மிக்க பொறுப்புடன் சமூகத்தை நெறிப்படுத்தும் நிலையில் விளங்கினர்.

இன்றைய நிலையில் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம் முதலியவற்றில் சென்று உரையாடுகின்ற நிலையே ஆசிரியர்களுக்குப் பெரிதும் உண்டு.

தனி மனிதன் முதல் அரசன் வரை அமைந்த சமூகத்தினையே நெறிப் படுத்தும் பெரும் பொறுப்பினை ஆசிரியப் பெருமக்களிடமும், புலவரிடமும், அன்றைய தமிழர் ஒப்படைத்திருந்தனர். ஆகவே புலவரைச் 'சமூகக் கல்வி யாளர்' என்றழைத்தல் பொருந்துவதன்றோ?

கடிநிலை இன்றே ஆசிரியர்க்க [39]
வரைநிலை இன்றே ஆசிரியர்க்க [40],

என்ற தொல்காப்பியப் பாடல்களால் அவர் காலத்துக்கு முன்பே 'ஆசிரியர்' என்ற சொல் உண்மை பெறப்படும்.

நூலை ஆக்குகின்றவன் நூலாசிரியன், உரை தருவோன் உரையாசிரியன் என்றிவ்வாறு பின்னர் பெயர் தோன்றின.

ஆகவே மதிக்குத் துணையாகும் நூல்களிலும் வாழ்விலும் ஐயம் நிகழும் போதும் அறியாமையால் கடைாகப்படும் போதும் தெளிவு படுத்தி உற்றுழி உதவி வழிகாட்டும் தொழிலை உடைய இனத்திற்கு ஆசிரியர் என்ற நிலையும் பெயரும் ஏற்பட்டிருந்தது என்பது தெளிவு.

சுருங்கக்கூறின், சங்க காலத்தில் பல நூல்கள் இருந்தன என்பதும், அவற்றைக் கற்பிக்கும் ஆசிரியர் உண்டெனவும் அவ்வாசிரியர் கற்பிக்கும் முறை உண்டெனவும், ஆதலின் கற்கும் முறை உண்டெனவும், இம்முறையால் விளையும் 'அதற்குத் தக நிற்கும் பயன் உண்டெனவும், பயனின் முன்னோடியான ஒழுங்கு உண்டெனவும், கற்பிக்கும் கற்கும் இடங்கள் அமைந்திருக்க வேண்டும் எனவும், பெற்றோர் பங்கும் ஆதரவும் அமைந்திருக்க வேண்டும் எனவும் இவற்றின் தொகுப்பான கல்வித் தத்துவம் உண்டெனவும் தெளிவடையலாம். இத்தகைய கல்வித் தத்துவத்திற்

கேற்ற நோக்கம் அமைந்திருக்க வேண்டும். இந்நோக்கம் யாது?

வாழ்வின் நோக்கமே கல்வியின் நோக்கமாக மாறுதல் இயல்பாம். இத்தகைய தமிழர் வாழ்வு நோக்கங்களை அறியின் அதனோடு இயைந்த கல்வித் தத்துவத்தின் முதற்படியான நோக்கங்களைப் பெற்றுவிட முடியும். ஆகவே தமிழர்தம் வாழ்வு நோக்கங்களைக் காண்போம்.

6-1-7: தமிழர் நோக்கும், குறிக்கோளும்:

நோக்கின்றிச் செயலில்லை; குறிக்கோள் இன்றி நிறைவு இல்லை. ஆகவே நோக்கும், குறிக்கோளும் செயல் நிறைவேற்றத் தேவையான மூலக் கூறுகளாம். உடனடியான பயனை நோக்கம் எனவும், இறுதிப் பயனைக் குறிக்கோள் எனவும் கூறலாம்.

வாழ்வின் நோக்கமும் கல்வியின் நோக்கமும் இணைந்தவை. உயரிய நல்வாழ்வுக்கு அறிவும் அவ்வறிவிற்குக் கல்வி கேள்வியுமே அடிப்படையாம். பிறப்பொடு பெற்ற மதியுடன் கல்வி கேள்வி அனுபவங்களால் வளர்ந்த அறிவும் சேர்ந்து இறைவன் அருளால் மெய்யறிவாக மாறும் என்பது தமிழர் கொள்கை.

தமிழர் இம்மையில் அறவழிப்பட்ட செம்மையான வாழ்வினை நோக்கமாகக் கொண்டனர். இச்செம்மையான வாழ்வில் மெய்யறிவு பெற்று, பற்றறுத்து தன்னலம் துறந்து தம் உடைமையையும், ஆற்றலையும் சமூகத்திற்கெனவே பயன் படுத்தி அதன்வழி வாலறிவன் நற்றாள் பற்றுதலையே கற்றலின் உயரிய இறுதிக் குறிக்கோள் எனக் கொண்டனர். இதற்கு அடிப்படையான கல்வியைக் கண் எனப் போற்றினர்.

தற்காலக் கல்வி முறை இம்மையிலேயே பேரார்வம் செலுத்தத் தமிழர் கல்வி நோக்கம் இம்மையைச் செம்மைப்படுத்தி மறுமைக்கும் வீட்டுக்கும் வழி காட்டுவதாய் அமைந்திருந்தது.

இம்மை நோக்கம்:

மனத்துக்கண் மாசிலனுதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற.[41]

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.[42]

மனத்தின் கண் உண்டாகும் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் இந் நான்கினையும் நீக்கி அறவழியிலே தொடர்ந்து செல்லும் நிலையே ஒழுக்கம் எனக் கூறப்பட்டது. ஒழுகலாறு, தனி மனித வாழ்விலிருந்து முகிழ்த்தல் வேண்டும் என்பது தமிழர் கொள்கை. குற்றம் நீங்குதற்கும் நீக்குதற்கும் உதவுகின்ற நூல்களைக் கற்று மனக்கோட்டம் தீர்த்தல் வேண்டும். கற்ற பின் அக்கற்றலுக்கு ஏற்றபடி வாழ்வு நடத்துதல் வேண்டும். ஆகவே, வாழ்வுடன் இணைந்த வாழ் வியல்கல்வி தனி மனிதனிடமிருந்து தொடக்கம் பெற்றதெனலாம். இவ்வாழ்வியல் கல்வியானது ஒருவன்தான் கல்வியால் பெற்ற இன்பத்தைத் தன்னளவோடு நிறுத்துதலின்றி பிறர்க்கும் அளித்தல் வேண்டும் என்ற ஆர்வத்தினை ஊட்டும். ஆதலின்

தாம் இன்புறுவது உலகு இன்புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.[43]

எனப் பொதுமறை புகன்றது.

உலகம் இன்புறுதலைக் காண்போன் உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலை மேற்கொள்கிறான். இவ்வாறு ஒழுகுதலைத் தராத கல்வியால் பயனில்லை என்பதை

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும்
கல்லார் அறிவிலா தார்.[44]

என்ற குறள் தெளிவு படுத்தும். ஆகவே கல்வி நோக்கம் தனி மனிதனைக் கற்கச் செய்து கற்றபடி நிற்கச்செய்து சமுகத்திற்கு உதவி இயைந்து வாழச்

செய்தலே என உரைக்கும்.

<u>சமூக நோக்கம்:</u>

உலகத்தோடு ஒட்ட ஒழுகுதல் எவ்வாறு இயலும்?

மாசு நீக்கிய தனி மனிதன் மனைத்தக்க மாண்புடையாள் ஒருத்தியை வாழ்க்கைத் துணையாகக் கொண்டு அன்பினையும் அறத்தினையும் அடிப்படையாகக் கொண்டு வாழுகின்ற போது அது இல்வாழ்க்கையாகவும், பண்பினையும், பயனையும் தரவல்லதாகவும் அமைகிறது. இல்வாழ்வின் பயனாகிய நன்மக்களைப் பெற்று அவரைக் கல்வி, கேள்வி, அறிவு மிக்க சான்றோராகச் சமூகத்திற்கு அளித்தலாம்.

கல்வியின் பயனாகிய மக்கட்பண்புடைமையை

அரம் போலும் கூர்மைய ரேனும் மரம் போல்வர்
மக்கட் பண்பில் லாதவர்.[45]

என்பதால் தமிழ்மறை உணர்த்துகின்றது. கூர்மையான அறிவுடையவராயினும் மக்கட் பண்பு – நாகரிகம் – பெறவிட்டால் மனிதராயினும் மரம் எனவே மதிக்கப்படுவர். நாகரிக வாழ்வு நோக்கம் நிறைவேற அறிவும் அச்சீரிய அறிவுக்கேற்ற கல்வியும் தமிழர் கல்வி நோக்கமாக அமைந்தது.

இவற்றால் கல்வியே மனிதரை மக்கட்பண்புடையவராக மாற்றும் நோக்கம் கூறப்படுகிறது.

மனைவியொடும், மக்களொடும் வாழுகின்ற மனிதன் அன்பு முதிர்ந்து அருள் பிறந்து உற்றாருடனும், சுற்றத்தாருடனும், உலகத்தாருடனும் இயைந்து வாழுகின்ற மனவளர்ச்சியினையும், செயல் முயற்சியினையும் அளிக்கிறது. இதனால் குடும்பத்தினருக, சமூக உறுப்பினருக வாழும் நோக்கம் நிறைவேறுகிறது.

இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்றி எய்துவர்
செறுநரும் விழையும் செயிர் தீர்காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்.[46]

என அகம் கூறுகிறது. குற்றமற்ற மக்களை இல்லறத்தின் மூலம் உருவாக்கும் பெற்றோர் இம்மையில் புகழும் மறுமை உலகும் பெறுவர் என்பதால் புகழும், பொருளும் பெறும் நோக்கமும் மறுமை நோக்கமும் கூறப்படுகின்றன.

வினையே ஆடவர்க்குயிரே
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்.[47]
இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்[48]

என்பதால் செய்கின்ற தொழிலையே தமிழர் உயிர்போல மதித்துப் போற்றினர். அத்தொழிலால் – அறவழியில் – பொருளும் இன்பமும் பெற்று வாழ்ந்தனர் எனலாம். இதனால் தொழிலும் பொருளும் இன்பமும் வாழ்வின் நோக்காக – கல்வி நோக்காக–அமைந்ததென உரைலாம்.

தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே.[49]
கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்.[50]

அன்பிலார் எல்லாம் தமக்கே உரியர்; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு என வாழ வேண்டிய இல்லறத்தின் தத்துவம் அறிந்தும், கணவனுடைய தன்மையறிந்தும் இல்லறத்தின் நிறைவு பெற்ற மனைவி விருந்தினரையும், சுற்றத்

தாரையும் பாதுகாக்கின்ற பொது நல உள்ளம் பெற்றுச்சிறப்படைகிறாள். இச்சிறப்பினை இல்லாள் மனையிலேயே இயல்பாக நடைபெறும் மனையியல் கல்வியால் பெறுகிறாள். இக்கல்வியாலான அறிவால் உலகத்தோடு இயைந்து வாழ்தல் முதிர்ந்த நிலையில் பிறர்க்கென வாழும் சமூக நோக்கம் ஈடேறுகிறது.

<u>மறுமை நோக்கம்:</u>

இம்மையில் செம்மையான வாழ்வு - சமூக நல வாழ்வு-நடத்தியோரே மறுமையும் வீடு பேறும் பெற இயலும். பற்றறுத்தல் மறுமைக்கு வழி என்பர். பற்றறுத்தல் என்பதுதான் என்ன? பற்றறுத்துத் துறவியாகச் சென்று காடு மலைகளில் காய்கனி துய்த்துக் காவியுடுத்து வாழ்கின்ற வாழ்வு மட்டும் அன்று. யான் என்னும் உள்ளச் செருக்கும் எனது என்னும் உடைமைச் செருக்கும் நீக்கி யாவும் சமூக நலத்துக்கே எனப்பயன்படுத்தி அந்தத் துறவு வாழ்வு மூலமே இறைவனை அடைய முடியும் என்ற சமூக நல நோக்கே மறுமைக்கும் வீட்டுக்கும் கருவியாம். இவற்றையே தமிழ் முனிவர் யாவரும் - நால்வரும் - இந்நூற் றூண்டுக் காந்தியடிகளும் கடைப்பிடித்தமை வரலாறும்.

கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.[51]

எனக் குறளும்,

காமஞ்சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.[52]

எனத் தொல்காப்பியமும்,

சேவடி படரும் செம்மல் உள்ளமொடு[53]

எனத் திருமுருகாற்றுப்படையும்,

தெய்வம் தெளியின் தெளிந்தோர்ப்பேணுமின் ............

செல்லும் தேஎத்து உறுதுணை தேடுமின் [54]

எனச் சிலப்பதிகாரமும் கூறுகின்றன.

இவற்றால் கற்றதன் பயன் மெய்யுணர்வினை உடையாரது நல்ல தாள்களைத் தொழுதல்; இவ்வுலகில் இல்லறத்தில் அறவழியில் பொருளும் இன்பமும் நுகர்ந்த பிறகு நன் மக்களிடத்தே பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டு அறத்தை விரும்புகின்ற சுற்றத்தாரொடு காலத்தாலும் சிலத்தாலும் மூத்த கணவனும் மனைவியும் சிறந்தது எனக் கருதப்படுகின்ற செம்பொருளைக் காணும் முயற்சியில் பிறர் நன்மைக்கென் அமையும் அருளோடு கூடிய ஆன்மீக வாழ்க்கை நடத்துதல்; இறைவனுடைய செம்மையான திருவடிகளை நினைத்து வாழ்தல்; கடவுள் உண்டென உணர்ந்து உணர்ந்தோரை விரும்பி இறந்த பின் செல்லும் மறுமை உலகிற்கு உற்ற துணையாகிய அறத்தினைத் தேடுதல்; எனக் கூறும் இப்பகுதிகள் ஆன்ம வளர்ச்சி நோக்கத்தினைக் கூறுகின்றன.

ஆம்மீகத்தை நோக்கி வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொண்டமையால்தான் தமிழர் வாழ்வில் அமைதி ஆட்சி செய்தது.

ஆகவே, தமிழர்தம் கல்வி நோக்கங்கள் மனமாசற்று வாழ்தலும் கற்றதற்கேற்ப வாழ்தலும் இல்லறத்தைப் பேணுதலும் நன்மக்களைப் பெற்றுச் சான்றோராக்குதலும் உலகத்தோடு ஒத்து வாழ்தலும் மக்கட் பண்பு பெறுதலும் தொழில் செய்தலும் தன்னலம் கருதாது பொது நலம் பேணுதலும் இம்மைக் குரியனவாக அமைந்தன. இல்லற முதிர்ச்சியின் விளைவாக அகப்புறப்பற்று நீங்கப்பெற்று பொதுநலம் பேணிச் செல்லுதல் வழியுமறவு வழியிலாயினும் செம்பொருள் காணும் ஆன்மீக வளர்ச்சி பெறல் மறுமை நோக்கமாகவும் அமைந்தது. இவ்வாறு ஒழுக்க நெறி நின்ற தமிழர்தம் வாழ்வு முறை பற்றியும் கல்வி முறை பற்றியும் தமிழ் அறிஞர் கூறியன அறிதற்குரியன.

"தமிழ்நாட்டில் அமைதியாய் வாழ்ந்த தமிழ் மக்கள் எப்பொருளையும் தடையின்றி எண்ணி அறியவும் உள்ளக் கருத்துகளை உரிமையுடன் வெளியிட்டு உரைக்கவும், எத்தொழில்களையும் தடையின்றிச் செய்து முடிக்கவும் வேண்டிய உரிமை உணர்வுடன் புகழ் பெற்று விளங்கினர்"[55] என்பர் வெள்ளைவாரணர்.

"கல்வியின் பயனாக அறிவும், அவ்வறிவின் பயனாகத் தொழில்களும் வளர்ச்சியடைதலே வாழ்வின் வளர்ச்சியாம்"[56] என்றும் கூறுவர்.

"நல்லொழுக்கமுடைய சான்றோராக வாழ்வதற்கே அன்று கற்றனர். கசடறக்கற்று, கற்றவாறு ஒழுகுதலே கல்வியின் பயன் எனக் கருதப்பட்டது"[57] என்பர் இலக்குவனார்.

இவ்வறிஞர் கூற்றுக்களால் அறிவு பெறுதல், ஆராய்தல், பகுத்துணர்தல், நன்மை காண்டல், தொழில் புரிதல், இல்லற வாழ்வு, ஒழுக்கம் பேணுதல் உலகத்தோடு ஒட்டி வாழுதல், மக்கட்பண்பு பெற்று வாழ்தல் இவற்றின் பயனாக அமைதியோடு கூடிய வாழ்வு ஆகியவை சங்க காலத் தமிழர் சமுதாயத்திற்கு வாய்த்திருந்தன என்பதை அறியலாம்.

இந்நோக்கங்களையே இன்றைய 'ஜான்டூயி' போன்ற கல்வித் தத்துவ அறிஞரின் கூற்றுப்படி நடைமுறைப்பயன் கொள்கை ( Pragmatism ) என்று கூறலாம்.

## 6-1-7: இன்றைய கல்வி நோக்கங்கள்:

கல்வியின் நோக்கங்களாகத் தற்போது கருதப்படுவன யாவை? "அறிதல், தொகுத்தல், பொருத்திப் பார்த்தல், வகுத்தல், இணைத்தல், முடிவு கட்டல், என்று கூறுவர். கருத்துக்களை அறிதலும் அவற்றைத் தொகுத்தலும் வழக்கொடு பொருத்திப் பார்த்தலும் நன்மை தீமை தருவன வற்றை ஆராய்ந்து பகுத்தலும் நன்மை தருவனவற்றை இணைத்தலும் முடிவுக்கு

வருதலும் என அவற்றை விரித்துரைப்பர். இவற்றையே 1) உடல் நலம் பேணுதல் 2) வாழ்க்கையின் அடிப்படைச் செயல்களில் போதிய பயிற்சி 3) குடும்பத்தில் சிறந்த உறுப்பினராகச் செயல் படுதல் 4) தொழில்திறன் 5) நற்குடி மகனாக வாழப் பயிற்சி 6) ஓய்வு நேரத்தைப் பயனுள்ள வகையில் செலவிடப் பயிற்சி 7) நல்லொழுக்க நடத்தை"[58] எனச் சந்தானம் கூறுவர்.

கல்வி நோக்குகளாக "1) அறிதல் 2) தொழில் 3) ஒழுக்கம் 4) நாகரிகமடைதல் 5) நிறைவாழ்வு வாழுதல் 6) ஆன்மீக வளர்ச்சி"[59] எனப் பாட்டியா குறிப்பிடுவர்.

ஆகவே, முன் கண்டறிந்த உண்மைகளாலும் தமிழ் அறிஞர்களுடைய கூற்றுக் களாலும், மேற்கூறிய இன்றைய கல்வி அறிஞர் கூற்றுக்களாலும் கல்வி நோக்கு களை அறிதலும் தொழில் செய்தலும், ஒழுக்கம் பேணலும், நாகரிக வாழ்வும் நிறைந்த வாழ்வும் உடல் உள்ள வளர்ச்சியும், ஆன்மீக வளர்ச்சியும் அடிப்படை யாகக் கொண்ட செம்மையான வாழ்வு அன்றே தமிழரிடம் அமைந்திருந்தது என்பது தெளிவு.

வாழ்வுத் தத்துவமே கல்வித் தத்துவமாக அமைந்ததால் கல்வியின் ஆட்சி வாழ்வின் ஒவ்வொரு பகுதியிலும் இடம் பெற்றிருந்தது. தமிழர்தம் வாழ்வு நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு வாழ்வுடன் இயைந்த கல்வி உள்ளீட்டினை அடுத்துக் காண்போம்.

## 6-2-0: உள்ளீடு:

கல்வித் திட்டத்தில் உள்ளீடு என்பது கூற வேண்டிய கருத்துக்களை முதலில் உள்ளத்தே இட்டு வைத்துச் சீர்தூக்கிக் கூறுதற்கேற்ற பொருள் அடக்கமாம்.

வாழ்வாங்கு வாழ வேண்டிய நோக்கங்களைச் செயற்படுத்தும் வழி காட்டியே உள்ளீடாம். இவ்வுள்ளீட்டை இன்றைய கல்வி இயலார் குறிப்பதுபோல்

தனியாக வரிவடிவத்தில் எழுதித் தமிழர் குறிக்கவில்லை. அன்றைய கல்வி வாழ்வியற்கல்வியாதலால் அவர்தம் வாழ்வில் எவ்வெவற்றைக் கற்றிருந்தனரோ அவையே உள்ளீடு என்ற தலைப்பில் தொகுத்து ஈண்டு தரப்படுகிறது.

வாழ்க்கைக்கு இன்றியமையாதது மொழியாம். உள்ளக் கருத்துக்களை மற்றவர்க்கு உரைப்பதற்கும், பிறர் உரைத்ததை விளங்கிக் கொள்வதற்கும் கருவி மொழியே. மனிதனின் கண்டு பிடிப்புக்களில் தலையாயது மொழியே. ஆகவே மொழிக்கல்வி உள்ளீட்டில் முதலிடம் பெறும்.

மனித வாழ்வின் மிக இன்றியமையாத பகுதி உணவாம். உணவின்றேல் உயிரில்லை. ஆகவே அவ்வுணவை ஆக்கும்-விளைக்கும்-உழவியல் உள்ளீட்டில் இடம் பெறும். தனியாகப் பள்ளிகளிலோ, கல்லூரிகளிலோ இன்றி நேரடிப் பயிற்சி மூலம் உழவுக்குரிய விளை நிலங்களிலேயே – இப்பயிற்சியும் அறிவும் தரப் பட்டது. இன்றைய நோக்கில் முறை சாராக்கல்வி எனும் முறைசார்கல்வி யும் மேம்பட்ட திட்டமிடப்பட்ட உழவின் செயல்முறை தமிழரிடம் உண்டு.

அடுத்தபடி மனிதன் மானத்தோடு வாழவும், வாழ வைக்கவும் உடையும் நெசவும் தேவைப்பட்டன. வாழ்வில் பிறர்க்குதவும் வாழ்வியல் தத்துவமே கல்வித் தத்துவமாகப் பெற்றிருந்த தமிழர் கல்வி உள்ளீட்டில் நெசவும், உழவினைப் போலவே நேரடிப் பயிற்சி மூலம் நடைபெற்றது.

உணவும், உடையும் அமையினும் அவற்றைப் பாதுகாக்கவும் தன்னை இயற்கைத் துன்பங்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளவும் இருப்பிடமாகிய மனை தேவைப்பட்டது. புல் குரம்பை முதல் நெடு நிலா முற்றம் வரை பற்பல நிலைகளில் தமிழர் இருப்பிடங்கள் அமைத்துக் கொண்டனர். இதற்கேற்ற கட்டடக் கலையறிவு நேரடிப் பயிற்சி மூலம் உரிய களத்தில் அளிக்கப்பட்டது. அதுவும் உள்ளீட்டில் இடம் பெற்றது.

இம்மூன்றன் பயனாக வணிகம் உள்ளீட்டில் இடம் பெற்றது. நலவாழ்வையும் மன அமைதியையும் தமிழர் எதிர்நோக்கினர். அதன் மூலமே மன அமைதி கிட்டும் என நம்பினர். ஆகவே உடல் உள்ள நலத்திற்கென மருத்துவக் கல்வி உள்ளீட்டில் இடம் பெறலாயிற்று. நோய் வாராது காத்தலே இயற்கையோடு இயைந்த வாழ்வு என்பது தமிழர் கொள்கை. ஆயினும் அறியாமையாலோ விதியாலோ உணவுப் பொருத்தமின்மையாலோ நோய் வரின் நீக்கிக் கொள்ள மருத்துவக் கல்வியைக் கடைப்பிடித்தனர். மேலும் புறச்சூழலை – பூமிக்கும் அப்பாற்பட்ட அமைப்பால் சமூகத்திற்கு விளையும் நன்மை தீமைகளை – ஆராய்ந்து அறிய வானியல் கல்வி வேண்டியதாயிற்று.

மனிதனுடைய மன அமைதிக்கும் மகிழ்ச்சிக்கும் ஏற்ற இசையும், ஓவியமும், சிற்பமும் இடம் பெற்றன.

இவற்றிற்கெல்லாம் அடிப்படையான மனை இயல் கல்வி – குடும்பக் கல்வி – மனைகளிலேயே நேரடிப் பயிற்சி மூலம் நடைபெற்றது.

அடுத்து கடவுள், உலகம், உயிர் பற்றி ஆயும் சமயக் கல்வி முறை தேவைப்பட்டது.

தனி மனிதன் என்பவன் நாட்டினுடைய அங்கம். நாட்டை இயக்குதற்கு அரசன் அமைந்தான். அவ்வரசன் நாட்டை இயக்குதற்கேதுவான ஆட்சியியல் கல்வியில் இடம் பெற்றது.

தமிழர் கல்வி வாழ்வியல் கல்வியாதலால் மேற்கண்ட அனைத்தும் நேரடிப் பயிற்சி மூலம் அக்கல்விக்குரிய களங்களிலே சிறப்பான முறையில் நடைபெற்றன எனலாம். இன்றைய நோக்கில் அவை முறைசாராக்கல்வி என்றும் முறைசார்க்கல்வியினும் மேம்பட்ட – திட்டமிடப்பட்ட வாழ்வியல் கல்வியாக விளங்கியது.

ஏனைய எண்ணும் எழுத்தும் பள்ளிகளிலும் மனைகளிலும் தெற்றிப்பள்ளிகளிலும் சங்கங்களிலும் நடைபெற்றன எனலாம்.

## 6-2-1: மொழிக்கல்வி:

மனித வாழ்வுடன் இரண்டறக் கலந்திருந்த மொழிக் கல்வி தலையாயதாம்.

மொழிக்கல்விக்கு ஏதுவான எழுத்தும், எழுத்தால் அமையும் சொல்லும் சொல் தரும் பொருளும், பொருளமைக்கும் யாப்பும், யாப்புப் பெறும் அணியும், மொழிக் கல்வியில் அடங்குமென்பர் தமிழ் இலக்கண இயலார்.

மொழிக் கல்வியில் இயல், இசை, நாடகம் முதலிடம் பெற்றன. இலக்கணத்தின் பகுதிகளான எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியுடன் கூடிஇயங்கும் எல்லா நூல்களும் இயற்றமிழ் நூல்களெனப்பட்டன.

பாலை, நெய்தல், மருதம், செவ்வழி, என நாற்பெரும் பண்களும் 21 திறங்களும் அவற்றின் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் வேறுபாட்டில் 103 பண்கள் இசைத்தமிழில்இடம் பெற்றன. இதன் அடியே தோன்றிய பெருநாரை, பெருங்குருகு, பஞ்ச பாரதீயம் முதலிய இசைத் தமிழ் நூல்கள் பல தமிழர் கல்வியில் பயன்பட்டன.

இயலும் இசையும் கூடி வரும் தமிழ் 'நாடகத்தமிழ்' எனப்படும். வேத்தியல், பொதுவியல் என 2 பகுதிகளாயும் பொருள், சாதி, யோனி, விருத்தி என 4 ஆகவும், சுவை, குறிப்பு, சத்துவம், அவிநயம் என 4 ஆகவும் சொல், சொல்வகை, வண்ணம், வரி என 4 ஆகவும், சந்தி, சேதம் 2ம் ஒரு பிரிவாகவும் விளங்கின. பரதம், அகத்தியம், முறுவல் சயந்தம், குணநூல் செயிற்றியம், இசை நுணுக்கம், இந்திர காளியம், பஞ்ச மரபு, பரத-சேனபதியம், மதிவாணனார் நாடகத் தமிழ் நூல் முதலியன நாடகத் தமிழின் உள்ளீடாகவும் அமைந்தன.

எனவே, முத்தமிழும் மொழிக் கல்வியில் பேரிடம் பெற்றன என்பது தெளிவு.

தற்போதைய மொழிக் கல்வி ஊள்ளீட்டில் செய்யுள், உரைநடை இலக்கணம், மொழி பெயர்ப்பு, கட்டுரை முதலியன இடம் பெறுகின்றன. அன்றும் தமிழர் கல்வித் திட்டத்தில் இவை இடம் பெற்றிருந்தன என்பதற்குச் சான்றுகள் உண்டு.

<u>செய்யுள்:</u>

இனிமையும், சொற் சுருக்கமும், பொருட்செறிவும் நெஞ்சில் நிறுத்துதற்கு ஏதுவான தன்மையும் கொண்டு ஆன்றோரால் செய்யப்படுவது செய்யுள் ஆம். இன்று கிடைத்துள்ள தமிழ் நூல்களுட் பெரும்பாலான செய்யுள் யாப்பின ஆதலால் மொழிக் கல்வியில் செய்யுள் பேரிடம் பெற்றமை தெளிவு.

<u>உரைநடை:</u>

தற்போது உரை நடையே பெரிதும் போற்றப்படுகிறது. தொல் காப்பியத்தில்,

பாட்டிடை வைத்த குறிப்பினானும்
பாவின்றெழுந்த கிளவியானும்
பொருளொடு புணராப் பொய்ம் மொழியானும்
பொருளொடு புணர்ந்த நகை மொழியானும்
உரைவகை நடையே நான்கென மொழிப [60]

எனக் குறிக்கப்படுகிறது. தற்போது காணப்படுகின்ற வரலாற்று உரைநடை, புதின அமைப்பு, பயண இலக்கியம், இல்லது புனைதல் முதலிய உரைநடை வகைகளையெல்லாம் இந்நூற்பாவுள் அடக்கிக் கூற இயலும். ஆகவே, தமிழர் உரைநடையைத் தம் கல்வித் திட்டத்தில் கொண்டிருந்தனர் என்பது போதரும்.

இலக்கணம்:

மொழிக்கல்வியின் இன்றியமையாப் பகுதியாக இலக்கணம் அமைந்த மைக்குத் தொல்காப்பியம் முதலிய நூல்களே சான்றும். அகரம் முதல் னகர இறுவாய் விளங்கிய 30ம், சார்புடன் சேர்ந்த 33ஆம் அவை பற்றிய எண், பெயர், முறை, பிறப்பு, உருவம், மாத்திரை, மயக்கம், முதலியனவும் பெயர், வினை, இடை, உரி எனச் சொல் 4ம், அகம், புறம் எனப் பொருள் 2ம் இவற்றின் அடிப்படையான யாப்பும், அன்றோர் புனர்ந்த அணியும் இலக்கண உள்ளீட்டில் இடம் பெற்றன.

மொழி பெயர்ப்பு:

மொழி பல பெருகிய பழிதீர்தேளத்துப்
புலம் பெயர் மாக்கள் கலந்திரு இனிது உறையும்
முட்டாச் சிறப்பின் பட்டினம் [61]

என்பதால் தமிழ்நாட்டுத் தலைநகரங்களுள் ஒன்றான காவிரிப்பூம்பட்டினத்தில் பன்மொழி பேசும் பல இனத்தைச் சேர்ந்த மக்களும் ஒரே இனத்தைச் சார்ந்த பல மொழி பேசும் மக்களும் கலந்து பேசி இனிது உறைந்தனர் எனலாம். இத்தகைய வாழ்வுக்கு மொழி பெயர்ப்பு இன்றியமையாததன்றோ?

தொகுத்தல் விரித்தல் தொகை விரி மொழிபெயர்த்த
அதர்ப்பட யாத்தலொடு அனைமரபினவே [62]

தொல்காப்பியமும் நூல் வகைகளுள் மொழி பெயர்ப்பினைக்குறிப்பிடுகிறது.

ஆகவே, அன்றே உள்ளீட்டில் மொழி பெயர்ப்பின் இன்றியமையாமையும் மொழி பெயர்ப்பும் தெளிவு பட்டிருந்தன என்பது தெளிவாம்.

கட்டுரை:

கட்டுரைக் காதை; கட்டுரை யாட்டியேன் [63]

உரை பெறு கட்டுரை – உரைத்துப் போதுகின்ற கட்டுரை என்ற சொல்லுக்குச் 'சொல்' என்றே பொருள் கூறப்படுகிறது. சொல்லை அடியாகக் கொண்டு செய்திகளைக் கட்டி உரைப்பதற்கேற்ற கருவியே கட்டுரையாம். கட்டுரையும், உரைபெறு கட்டுரையும் சிலம்பில் இடம் பெறுகின்றன. ஆதலின் மொழிக்கல்வி உள்ளீட்டில் கட்டுரை இடம் பெற்றிருத்தல் வேண்டும்.

ஆகவே இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழும் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்றும் இலக்கணமும் உரை நடை வகைகளும், கட்டுரையும் மொழி பெயர்ப்பு, முதலியன மொழிக்கல்வியில் இடம் பெற்றன எனலாம்.

## 6-2-2: உழவியல்:

"தொழிலைத் துணைக்கருவியாகக் கொள்ளாது முதற்கருவியாகவே கொண்டு அறிவை வளர்க்கும் கல்வியில் நாட்டம் செலுத்த வேண்டும்" [64] என்றார் காந்தியடிகள். இத்தத்துவமே தமிழர் வாழ்விலும் ஆட்சி செய்தது.

உழவு முதலிய தொழில்கள் அறிவை வளர்க்கும் கல்விப் பகுதியாக தமிழர் வாழ்வியல் கல்வியில் இடம் பெற்றன.

உழவு என்ற சொல் துன்புறுதல் எனப் பொருள்தரும். துன்புறுதல் மூலம் பிறரை இன்புறுத்துதற்கு ஏதுவான தொழில் உழவாம். அவ்வுழவினை உயர்வாகக் கொண்டு தமிழர் போற்றி வளர்த்தனர்.

உழுவார் உலகத்தார்க் காணி அஃதாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து [65]

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர் [66]

நீரின்றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே[67]
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் [68]

என்ற பாடல்களால் உழவுத் தொழில் செய்வோர் உலகத்தார்க்கு ஆணி போன்றோர் என்றும் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்க்கு ஒப்பானவர் எனவும் இரப்போரையும் புரப்போரையும் காப்போர் உழவரே எனவும் உணரலாம்.

வேளாண்மை செய்ய உதவியானது உழவியலே. பிறர்க்கு உதவி செய்யும் பொதுநலப் பண்பே வேளாண்மை என்பது. அதற்குக் கருவியே உழவியல் என்பதாம். உழவியலின் கூறுபாடுகள் இன்றைய நிலையில் பரந்து பட்டுச் செல்கின்றன. அவை தொகுப்பு நிலையில் விளங்கியதெனலாம்.

தமிழர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்று பகுத்தமைத்து அந்நிலத்திற்கேற்ப உழுதொழில் செய்தனர். இந்நிலக்கூறுபாடுகளைத் தொகுத்து 'வன்பால்' எனவும் 'மென்பால்' எனவும் கூறினர்.

இவ்வகை நிலம் சங்க இலக்கியத்தில் வயல், கழனி எனவும், காடு எனவும் படப்பை எனவும் பெயர் பெற்றன என்பதை,

கழனி நல்லூர் [69]
தடந்தாழ் வயலொடு [70]
எழுகாடு ஓங்கிய தொழுவுடை வரைப்பில்
கழி சூழ் படப்பை [71]

என்பவை உணர்த்தும்.

உழவியல் செயல் முறைகளைத் தமிழர் 5 வகையாகப் பகுத்தனர்.

ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு [72]

உழுதல், எரு இடுதல், களை கட்டல், நீர்பாய்ச்சுதல், பயிர்ப்பாதுகாப்பு எனக் கொண்டனர். இவற்றினின்றும் தமிழர் உழவியலில் சீரிய வரைமுறைப் படுத்தப்பட்ட அறிவினைப் பெற்றிருந்தமை புலப்படும். ஆதலின் வாழ்வியலில் பேரிடம் வகிக்கும் உழவியல் அறிவினை-கல்வியினை-கற்க வேண்டியவற்றுள் இன்றியமையாத அடை பொருளாய் - உள்ளீடாய் - கொண்டனர்.

## 6-2-3: நெசவு:

உணவுக்கு அடுத்த தேவை உடையாம். மானம் காத்தலில் உயிரினும் உடை உயர்ந்ததாம். பருத்தி, பட்டு, எலிமயிர் போன்றவற்றின் மூலம் உடை தயாரித்த செய்திகள் தமிழர் வரலாற்றில் உண்டு. வியத்தகு மெல்லிய ஆடைகளை வெளிநாட்டுக்கனுப்பிப் பெரும் பொருள் சேர்த்தனர் தமிழர்.

ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம் [73]
புகை முகந்தன்ன மாசில் தூ உடை [74]
பூங்கரை நீலம் தழீஇத் தளர்பொலிசி [75]
பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன [76]
பாம்புரியன்ன வடிவினம் காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண்பூங்கலிங்கம் உடீஇ [77]
நோக்கு நுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுரியன்ன அறுவை நல்கி [78]
கொட்டைக் கரைய பட்டுடை நல்கி [79]
பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும் [80]

கஞ்சுழை கல்லா நுண்ணியல் கைவினை
வல்ல நுழைவையர் வளம்திகழ் மறுகும்[81]

என்பன போன்ற இப்பகுதிகளால் ஆவி போன்றதும் பாம்பின் சட்டை போன்றதும் புகை போன்றதும் ஆன மெல்லிய நலி ஆடைகள் பூ வேலைப்பாடுகளுடனும், முடிச்சுகளுடனும் இழை சென்ற வழி அறிய முடியாத நுட்பம் அமைந்தும் பருத்தியானும், பட்டானும், எலி மயிரானும் நெய்யும் நெசவுத் தொழில் சிறப்புற்றிருந்தது எனலாம். வன்னத் தொழில் புரியும் செய்தியும் குறிக்கப் படுகின்றது.

இன்றுபோல் நெசவுக்குரிய தனியிடங்களான தொழில் நுட்பப்பயிற்சி சாலைகளில் நெசவு நடைபெற்றதென்பதற்குச் சான்று கிடைக்கவில்லை; ஆயினும் நுட்பம் பொருந்திய ஆடைகள் ஏற்றுமதி செய்யப்பட்டதாக வரலாறு கூறுதலால் இவ்வாடை வகைகள் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டிருத்தல் வேண்டும். அதற்கேற்ற தொழிற்பயிற்சி அளிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அத்தொழிற் பயிற்சி தமிழர்தம் வாழ்வியற் கல்வியின் உள்ளீடாமன்றோ?

<u>6-2-4:</u> <u>வாணிகம்:</u>

<u>வணிகர்:</u> நெடு நுகத்துப் பகல் போல்
நடுவு நின்ற நன்னெஞ்சினோர்
வடு அஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடி
கொள்வதூஉம் மிகை கொள்ளாது கொடுப்பதூஉம் குறை கொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல் கொண்டித்துவன்றிருக்கை [82]

என்ற பட்டினப்பாலைப்பகுதி வணிகரின் இயல்பு பற்றிப் பேசுகிறது.

தராசுக்கோல் போல் நடுவு நிலைமை பொருந்திய மனத்துடன்,

தம்முடைய பொருளையும் பிறருடைய பொருளையும் ஒப்ப நாடி, கொள்ளும் போது மிகை கொள்ளாதும் கொடுக்கும்போது குறையாகக் கொடாதும் ஓரிடத்தே கிடைக்கும் பொருளை ஏனைய இடத்திற்குக் கொண்டு சென்று உதவும் எண்ணம் படைத்த வணிகர் பல பண்டங்களையும் விலை கூறி விற்கும் இருக்கைகள் பேசப்படுகின்றன.

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின் 83

இப்பாடல் வணிகர்க்கிருக்கவேண்டிய நடுநிலைமை பற்றிக் கூறுகிறது.

தமிழர் உள்நாட்டு வணிகம் பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றது. ஐந்திணை மக்களும் பண்டங்களை ஒருவரோடொருவர் மாற்றிக்கொண்டனர். எல்லாரும் எல்லாப் பொருளும் பெற்று இனிது வாழ வேண்டும் என்பது தமிழர் வாணிக நோக்கமாம்.

நாளங்காடிகளும், அல்லங்காடிகளும் நகர்தொறும் விளங்கின.

<u>வெளிநாட்டு வணிகம்:</u>

மொழி பல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம் பெயர் மாக்கள் கலந்தினிது உறையும்
முட்டாச்சிறப்பின் பட்டினம் பெறினும் 84

யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும் 85

போன்றவற்றால் வெளிநாட்டு வாணிகம் தமிழரிடம் பரவலாக உயர்நிலையிலிருந்தது என்பது புலனும்.

மிளகு முதலிய மணப் பொருள்களையும் ஏனைய பொருள்களையும் ஏற்றுமதி செய்தனர். அதற்கு ஈடாகப் பொன்னையும் பொன் கலங்களையும்

மதுவகைகளையும் தமிழர் இறக்குமதி செய்தனர்.

ஆகவே, உள்நாட்டு வணிகம், வெளிநாட்டு வணிகம், வணிகப் பொருள்கள், ஏற்றுமதி முறைகள், போக்குவரத்து, பண்டமாற்று முறைகள் ஆகியவற்றில் தமிழ் வணிகர்க்குச் சீரிய அறிவிருந்தமை தெரிவாம். ஆதலின் இதற்கேற்ப அவர்தம் கல்வி அமைந்திருத்தல் வேண்டும்.

6-2-5: கட்டிடக் கல்வி:

கலைக்காகவே கட்டப்படும் கட்டிடங்கள் எனவும் பயனுக்காகக் கட்டப்படும் கட்டிடங்கள் எனவும் இருபாற்படும்.

கலைக்காகவும் பயனுக்காகவும் அமையும் இவை தனி மனிதனுக்கெனவும் சமுகத்திற்கெனவும் இருபாற்படும்.

நூலறி புலவர் நுண்ணிதின் கயிறிட்டு
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும்பெயர் மன்னர்க்கொப்ப மனைவகுத்து [86]
மாண்கடி காவலர் மாளிகை இடங்களும் [87]
மணி மண்டபங்களும் [88]
நிலவுப் பயன் கொள்ளும் நெடுநிலா முற்றங்களும் [89]

போன்ற பகுதிகள் அரசர்க்கும், செல்வர்க்கும் அமைக்கப்பட்ட அரண்மனைகளையும், மாளிகைகளையும் மணி மண்டபங்களையும் சுட்டுகின்றன. இவ் வமைப்புகளை ஆக்கும் பொறி இயல் அறிஞர் இருந்திருக்க வேண்டுமன்றோ? இவை கலைக்கெனத் தனி மனிதர்க்கமைக்கப்பட்டவையாம்.

மன்பெருங் கோயிலும் [90]
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும் [91]

போன்றவற்றால் சமுகத்திற்குப் பயன்படும் கலைத்தன்மை பொருந்திய கோயில் களும் கோபுரங்களும் குறிக்கப்பட்டன.

பயனுக்காக அமையும் தனி மனித வீடுகள் உண்டென்பதை,

விளைபுனை நல்இல்[92]

அன்னமொடு உகளும் முன்கடை[93]

என்பவை குறிக்கும்.

பட்டி மண்டபம் பாங்கறிந்தேறுமின்[94]

வருவிசைப்புனலை ஒருவன் தாங்கிய

கற்சிறை போன்ற[95]

நீர்மிசைச் சிறையயிலலை[96]

அமைவரன் என்றுரைக்கும் நூல்[97]

போன்றவற்றால் சமுதாய நலத்துக்குப் பயன்படும் பட்டி மண்டபங்களும், அவைகளும் அரங்களும் உண்டென உரைலாம்.

"எளி எய்தாத உயர்வும் புறத்தார்க்கு அகழலாகாத அடிய கலமும், அகத்தார்க்கு நின்ற வினை செய்யலாம் தலைகலமும், கல் இட்டிகைகளால் குத்தப்படாமையாகிய திண்மையும் பொறிகளான் அணுகுதற்கருமையும்"[98] உடைய மதில் அமைப்புகள் கூறப்பட்டுள.

இவற்றை உற்று நோக்கக் கட்டிடக்கலைக்கெனப் பல 'கட்டிட நூல்கள்' தமிழரிடம் இருந்தன எனலாம். இருப்பிடத் தத்துவத்தைக் காட்டும் படம் கீழ் அமைகிறது.

<u>இருப்பிடத் தத்துவப் படம்.</u>

கட்டிடம்

கலை | பயன்

கலை: தனிமனிதன் — அரண்மனை, மாளிகை, மண்டபம்; சமூகம் — கோயில்

பயன்: தனிமனிதன் — வீடு; சமூகம் — அவை, அரண், பட்டிமண்டபம்

## 6-2-6: மருத்துவம்:

மருத்துவன் என்ற சொல் புறத்தில் உண்டு. 'பசிப்பிணி மருத்துவன் இல்லம்' எனப்படுகிறது.

> உற்றவன் தீர்ப்பான் மருந்(து) உழைச் செல்வானென்(று)
> அப்பால் நாற்கூற்றே மருந்து.[99]

நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், நோய் தீர்க்கும் மருந்து உழையிருந்து பணியாற்றும் உதவியாளர் என்ற நான்கு பகுதிகள் மருத்துவக் கல்வியில் இடம் பெறுவதாகக் குறளால் அறியலாம்.

> நோய்நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்.[100]

என்ற பாடலால் நோயின் அமைப்பு அறியப்படும். நோய்ப்பகுதி, நோயின் காரணப் பகுதி, அது தீர்க்கும் முறைப்பகுதி, வாய்ப்பச் செய்யும் பகுதி என நான்காக அமையும்.

<u>நோய்ப்பகுதி:</u>

வாராமல் காத்தல், வந்தபின் தீர்த்தல் என இரு அமைப்புடையதாம்.

தமிழர் நோய் வாராது காத்தலையே முதன்மையாகக் கருதினர். அதற்கேற்ப உணவே மருந்தும் ஆயிற்று என்றபடி மருந்துப் பொருளாயும் உணவுப் பொருளாயும் உள்ளவைகளையே கண்டுணர்ந்து பயன்படுத்தினர். அதற்கேற்ற உணவும், உடையும், பழக்கவழக்கமும் ஒழுக்கமும் இயற்கையோடியைந்த வாழ்வும் நோய்க்கு இடம் கொடாத தன்மைக்கு அடிப்படை ஆயின. அவ்வாறு நோயின்றும் உடலை ஓம்பினர்.

ஒரு கால் தவறி உணவுச் செயல்கள், முறை பொருந்தாமையின் வரும் நோயைத் தீர்க்கும் முறையும் கண்டனர். முறையால் முயன்றும் வெற்றி கிட்டாத போது அதற்கேது பழியேயே என உணர்ந்து தொழிலைத் தொடர்ந்து செய்யும் மருத்துவரும் மருத்துவரை மதிக்கும் நோயாளியும் அமைந்திருந்தனர்.

<u>மருத்துவர் பகுதி:</u>

"நோயைக் குறிகளான் இன்னதென்று அறிந்து, அந்நோய் வருதற்குக் காரணமாகிய உணவு, செயல் முதலியவற்றை ஆராய்ந்து தெளிந்து அது தீர்க்கும் உதிரம், களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய உபாயங்களை அறிந்து, பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறைமையில் தப்பாதும் பிழையாதும் செய்யும் திறமும் நோயின் பகுதி, பருவம், வேதனை, வலிகளின் அளவு, தீர்க்கத்தக்க நிலை, பருவ வேறுபாடு முதலியவற்றை நூல் நெறியாலும், உணர்வு மிகுதியாலும் ஆராய்ந்து பிழையாமற் செய்யும் திறமும் மருத்துவர்க்குத் தேவை"[101]

<u>நோய் தீர்க்கும் மருந்துப்பகுதி:</u>

"பல பிணிகட்கும் ஏற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதின் எய்தப்படுதல், பகுதியொடு பொருந்துதல்"[102] என மருந்தின் வகை நான்கென்பர் பரிமேலழகர்.

உட்கொள்ளும் முறையில் வாய்வழியாகவும், குருதி வழியாகவும், நரம்பு வழியாகவும், கதிர் வழியாகவும் செல்லும் மருந்துகள் இன்று உள. தமிழர் வாய்வழியாகவும் கதிர் வழியாகவும் மருந்தினை ஏற்றுக் கொண்டனர். சூரிய ஒளியில் மூழ்கல் – கதிர் ஒளிப்பயன் மருந்து பெற்றமைக்குச் சான்றும்.

பெரிதும் மூலிகைகளேதமிழர் முறையில் மருந்தாகப்பயன்பட்டிருக்க வேண்டும் என்பதற்குச் சித்த முறையே பரம்பரைச் சான்றும்.

மூலிகைகளிலிருந்து செய்யப்பட்ட மருந்துப் பொருள்கள் வாய்வழியாகப் பயன்படுத்தப்பட்டன. நெய்மிது பூசும் களிம்பு, தைலம், குழம்பு பயன் படுத்தப்பட்டன.

அறுத்தல், குருதி களைதல் முதலிய அறுவைப் பகுதிகளும் பயன்பட்டன. சுடுதல் முறையில் ஞாயிற்றுக்கதிர் போன்றவற்றை உடலில் பாய்ச்சிக் கொள்ளும் முறையை மேற்கொண்டனர்.

இயற்கையாகவே இயற்கைப் பொருள்களான காய்கனி முதலியன மிகுதியாக உண்டு, இயற்கையோடு இயைந்த வாழ்வால் நோய் வாராது காத்துக் கொண்டனர். ஒரு கால் வரின் இயற்கை மூலிகைகளான் – இயற்கைப் பொருள்களான் நோய் தீர்க்கும் முறைகளை மேற்கொண்டனர்.

இவ்வாறு வாழ்வெல்லாம் இயற்கைக் கோட்பாட்டினராக ( Naturalists ) தமிழர் வாழ்ந்தமைக்குச் சங்க இலக்கியங்களே சான்றும். வாழ்வின் தத்துவமே கல்வியில் அமைந்து இயற்கைக் கோட்பாட்டுத் தத்துவமாக ( Natuaralism ) அமைந்திருத்தல் வேண்டும்.

இவற்றின்று உடல் நலம் பற்றிய தமிழரின் மருத்துவப் பகுதியில் நோயறிவு, மருத்துவன் தகுதி, நோய் தீர்க்கும் மருந்துப் பகுதி, தீர்ப் போனுக்கு உதவும் உழைச்செல்வோன் பகுதி எனத் தெளிவு பட்ட பகுதிகள்

இருந்தமை புலனும். ஆதலின் தமிழர் மருத்துவக் கல்வி பற்றிய சிறந்த தத்துவத்தையும் அவற்றின் பகுதிகளையும் மருத்துவக் கல்வியில் அமைத்திருத்தல் வேண்டும்.

## 6-2-7: வானியல்:

மனிதனின் உடல் நலக் குறைபாட்டிற்கு அவனுடைய உணவு முதற் காரணம். இதைக் கட்டுப்பாட்டுள் வைக்க இயலும்; அடுத்து புறச் சூழலின் தாக்குதலால் உடல் நலக்குறைவு ஏற்படலாம். புறச்சூழலின் தாக்குதலென்பது இவ்வாறு கட்டுப்பாட்டுக்குட்படாத-அப்பாற்பட்ட - கோள்களினின்றும் மீன்களினின்றும் வெளியாகும் கதிரியக்கத்தால் அமையலாம். இதனை ஒருவாறு உணர்ந்த தமிழ் வானியல் அறிஞர் கோள்களும் நிலைகளும் இயக்கங்களும் சேர்க்கைகளும் புவி இயலில் ஏற்படும் கால பருவ மாறுபாடு களுடனும் தனி மனிதனின் வாழ்வில் ஏற்படும் மாறுதல்களை ஒரு சேர இணைத்தும் பகுத்தும் ஆராய்ந்தனர். இதனை

வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கே கினும் [103]
நாள் மீன் விராய கோள்மீன் போல [104]
மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும் [105]
- சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து [106]
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும் [107]
ஆயுள் வேதரும் காலக் கணிதரும் [108]
ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து
அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று

வெள்ளி வாரத்தில் ஒள்ளெரி உமிழ
உரைசால் மதுரையொடு அரைசு கேடுறும் 109
ஆடியில் அழல் குட்டத்து
ஆரிருள் அரைஇரவின்
முடப் பனையத்து வேர் முதலா
கடைக்குளத்து கயங்காயம்
பங்குனி உயர் அழுவத்து
தலைநாள் மீன் நிலை திரிய
நிலைநாள் மீன் அதன் நேர் தர
தொன்னுண்மீன் துறை படிய
பாசிச் செல்லா, ஊசித் துன்னுத
அளக்கர்த் திணை விளக்காக
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒரு மீன் வீழ்ந்தன்றால் விசும்பினானே. 110

அஃதாவது வெள்ளியாகிய வெண்மீன் தெற்கு ஏகின் மழை வளம் குறையும். வறுமை மிகும்; கரந்துறைய வேண்டிய தூமகேது தோன்றினும் மழை குறையும். ஆடித்திங்கள் தேய்பிறை எட்டில் கார்த்திகைக் குறை சேரும்போது வெள்ளிக்கிழமை-மதுரை கேடுறும்; பங்குனித் திங்கள் விண் மீன் வீழின் அரசழிவு உண்டாகும் என்றெல்லாம் கோள், அமைப்புகளின் இயக்கங்களின் தன்மை நோக்கி, சமுதாயக் கண்ணோட்டத்தோடு ஆய்ந்தனர். உரோகிணியுடன் கூடிய மதி நிலையின் ஆதலின் அந்நேரம் தீங்கு நேராது நலமே விளையும் எனக் கண்டு மணவினை போன்றன நிகழ்த்தினர்.

இதிலிருந்து சமூக நோக்கத்தோடு வானியலை ஆய்வதற்கெனவே ஆக் கல்வி கற்ற கணியன் பூங்குன்றனார், கூடலூர்க்கிழார் போன்ற அறிஞர்கள் இருந்தனர் என்பது இலக்கியம் காட்டும் செய்திகளாம். ஆகவே தமிழர்தம்

வாழ்வுக்கல்வியில் வாணிபமும், அதன் தத்துவமும் இடம் பெற்றிருந்தமை தெளிவு.

6-2-8: இசை நாடகம்:

தமிழர் கண்புலம் இன்பம் பெற நாடகத்தையும் செவிப்புலன் இன்பம் பெற இசையையும் வகுத்தனர்.

முத்தமிழுள் இசைத்தமிழ் இரண்டாம் இடத்தைப் பெறுதலும், நாடகம் அதற்கடுத்த இடத்தைப்பெறுதலுமே தமிழர் இசை மீதும் நாடகத்தின் மீதும் கொண்டிருந்த பற்றினைப் புலப்படுத்துவதாகும்.

பழந்தமிழ் நாட்டில் பல இசைத்தமிழ் நூல்களும் நாடகத்தமிழ் நூல்களும் நிறைந்து விளங்கின என்பதற்கு உரைச்சான்றுகள் உண்டு. எனினும் கிடைப்பவை சிலவே.

இசையும் பண்ணும், திறமும், இசை நூல்களும் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படுகின்றன. இசைத்தமிழால் இறைவனைப் பாடவும் இவ்விசைத் தமிழால் இன்பம் பெறுதலையும் தமிழர்நோக்காகக் கொண்டிருந்தனர் என்பதைப் பரிபாடல் உணர்த்தும்.

"நாடக வழக்கினும்உலகியல் வழக்கினும்" [111]

என்ற தொல்காப்பியப் பாடலால் நாடகம் தமிழகத்தில் உயர்நிலை பெற்றிருந்தது என்பது தெளிவாம்.

இயலும் இசையும் சேர்ந்த நாடகம் தமிழர் கல்வியில் பேரிடம் பெற்றது என்பதை அறியலாம்.

6-2-9: சிற்பம், ஓவியம்:

ஓவியமும் சிற்பமும் பயனுக்கெனவும் கலைக்கெனவும் இருபாற்பட்டுத் தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் பயன் பட்டன. ஓவியம், சிற்பம் கூறும் பாடல் பல சங்க இலக்கியத்தில் உண்டு.

சான்றாக,

ஓவிய எழினி சூழ உடன் போக்கி
விதானித்துப்படுத்த வெண்கால் அமளிமிசை 112

என்பதால் ஓவியம் வரையப்பட்ட விதானங்களை உடைய யானையின் தந்தத் தால் ஆன வெண்கால் கட்டில் பேசப்படுகிறது.

ஓவத்தன்ன வினைபுனை நல்இல் 113
வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
கண்கவர் ஓவியம் கண்டு நிற்குநரும் 114
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
ஓவியச் செந்நூல் உரை நூற் கிடக்கையும் 115
அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து
இனி நட்டனரே கல்லும் 116
பாவையன்ன நல்லோள் கணவன் 117

போன்றவற்றால் ஓவியம் வரையப்பட்ட வினைமாட்சியுடைய வீடுகளும், சித்திரப் பாவைகளும் கற்சிற்பங்களும் உண்டென உரைலாம்.

'ஓவியச் செந்நூல்'கள் இடம் பெற்றாற்போலச் சிற்ப நூல்களும் இடம் பெற்றிருத்தல் வேண்டும்.

6-2-10: குடும்பக்கல்வி:

'நல்ல குடும்பம் பல்கலைக்கழகம்' என்பது புதுமொழி. அறன்

எனப்பட்டதே இல்வாழ்க்கை. 'இல்லற மல்லது நல்லறமின்று' என்பவை பழமொழிகள்.

இல்லறத்தின் அறன் வலியுறுத்தப்பட்டது. மனத்துக்கண் மாசு நீக்கும் தனி மனிதத்தூய்மை உயரிடம் பெற்றது. அறத்தொடு கூடிய மனை இயலே இன்பம் தரும் என்று கருதப்பட்டது. தென்புலத்தார், தெய்வம், விருந்து ஒக்கல், தான் என்ற ஐந்தினையும் ஓம்புதல் தலையாயிற்று. மனைத்தக்க வளத்தக்காள் உருவாயினள். வாழ்வின் நன்கலமாக நன்மக்கட்பேறு கருதப் பட்டது.

இல்லறமாகிய வாழ்வில் குடும்பம் நடத்துகின்ற பொறுப்பு மனைவி யுடையது. அயிழ்தடுதலும், ஆருயிர்க்கணவனைப் பேணலும் மனையறம் காத் தலும் இல்லத்தின் ஆட்சியும் மனைவியுடையதே.

கணவன், தம் மக்கள், சுற்றம், உற்றார், விருந்து, அயலார் என்ற மனைவியின் அன்பு படிப்படியாக வளர்ந்து அருளாக மாறுகிறது. இன்றைய மனையியல் கல்வியின் உள்ளீடுகளான உணவு சமைத்தலும், கணவனைப் பேணு தலும், குழந்தை வளர்ப்பும், உடை முதலியன தயாரித்தளித்தலும், மனை நிர்வாகமாகிய ஆட்சியும் அன்றைய குடும்பக் கல்வியில் இயல்பாகவே இடம் பெற்றன.

மனையியல் கல்வி மனையிலேயே நடைபெற்றது. மேற்கூறிய குடும்பக் கல்விப் பகுப்புக்கள் யாவும் தாய்வழியாயும், செவிலி வழியாயும், தோழி வழியாயும் செய் முறையிலும் உடனமை முறையிலும் பரம்பரை பரம் பரையாக நடைபெற்று வந்தன.

தற்போதைய மனை இயலில் குறிப்பிடப்படும் உணவு, உடை, குழந்தை வளர்ப்பு, மனை நிர்வாகம், நிறுவன நிர்வாகம் யாவும் தனிப்பள்ளிகளிலும்

கல்லூரிகளிலும் நடை பெறுகின்றன. மனைத் தொடர்பற்ற புறப்பகுதிகளிலே இன்றைய மனை இயல் கல்வி நடை பெறுதல் போலன்றி அன்றைய தமிழகத்திய வாழ்வுடன் இயைந்தே குடும்பக்கல்வி நடைபெற்றது.

குடும்பக்கல்வியில் உளவியல்:

தலைவி தலைவனைத் தேர்ந்தெடுத்தல், தேர்ந்து மணந்த பின் - தேறுதலும் மணந்த பின் - கணவன் உளமறியும் அறிவு, இல்லறத்தின் பயன்களாம். மக்களுடன் மனம் பயிலுதல், உற்றார் சுற்றம் விருந்தென்ற நிலைகளில் குறிப்பறிதல் முதலிய யாவும் உளவியலறிவென்றே கருதப்படும். குறளின் குறிப்பறிதலும் தொல்காப்பிய அகத்திணை இயலும், களவியலும் தமிழர்தம் உளநூல் உணர்வை உணர்த்தப் போதுமானவை.

குடும்பக்கல்வியும், விளையாட்டும்:

நடை வண்டி, சிறுதேர், சிறுபறை, பந்தாட்டம் முதலிய சிறுவர்க்கேற்ற விளையாடல்களைத் தாய் கற்பித்தாள். சிற்றில் அமைத்தல், உணவிடுதல், பந்தாட்டம், ஊசல் முதலியன சிறுமியர்க்கெனவும் கற்பிக்கப்பட்டன. பெண்டிர்க்குரிய அம்மானை, கழங்கு, ஊசல், கும்மி, முதலியனவும் விளையாட்டில் இடம் பெற்றன.

உடல் வளர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியுமே விளையாட்டின் நோக்காக அமைந்தது.

ஆகவே தமிழர் குடும்பக் கலையில் - மனை இயலில் - உணவு சமைத்தல், உடை தயாரித்தல், மக்கள் வளர்ப்பு, வளத்தக்க வரவு செலவு, குடும்ப நிர்வாகம், குறிப்பறிதல், விளையாட்டளித்தல் முதலிய யாவும் மறைமுகமாக நடைபெற்ற மனைஇயல் கல்வியின் உள்ளீடுகளாக அமைந்தன.

6-2-11: சமயம்:

அறிவு ஒழுக்கங்களால் சான்றோராக வாழும் இயல்பும் வாழ வைக்கும் இயல்பும் வாழ்வியல் கல்வியால் நுகர்ந்த மனிதன் இம்மைக்குப் பின் என்ன என்ற நினைவைத் திரும்பவும் அழுத்தமாக எண்ணுகின்றான்.

இவ்வீட்டின்மூலம் அவ்வீட்டின்ப இன்பம் நுகர எண்ணுகிறான். இவ்வாறு தான் மறுமை, வீட்டு எண்ணம் அரும்புகிறது.

மனிதன் தன்னை அறிதலும் தான் வாழும் உலகினை அறிதலும் இவற்றின் ஏதுவாகிய இறைவனை அறிதலும் அதன் ஏதுவாகத் தன்னலம் அறுத்தலும் மன்னுயிரையெல்லாம் தன்னுயிர்போல் எண்ணும் உயர் எண்ணமும் தன்னையும் உடைமையும் மக்களுக்கே அளித்தல் உணர்வும் வாலறிவன் நற்றாள் பற்றலும் ஆன்மக் கல்வியின் அடிப்படைச் செய்திகளாம்.

இதுவரை செய்த வினைகளையும் அவற்றின் நல்வினை, தீவினைப் பாகுபாட்டையும் ஆயத் தொடங்குகிறான். இவ்வாய்வுதான் மனிதனுக்குச் சிறப்புத்தருவது; அழிவு வராமல் காத்து நன்னெறிக்கண் செலுத்தும் ஆற்றல் மிக்கது.

இயற்கையாகிய மதியுடன் கல்வி கேள்விகளான் ஆன செயற்கையறிவும் சேர்ந்து அவன் அருளால் மெய்யறிவாகத் தொடங்குகிறது.

"மதி என்பது முன்னர்ச் செய்த நல்வினைகளால் பெற்ற மனத்தெளிவு; கல்வி கேள்விகளான் பெறும் செயற்கை அறிவினும் மேலாயது இயற்கை அறிவு"[118]

வினைகள்:

வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங்காலைப் புணை பிறிதில்லை.[119]

நல்லறம் செய்வோர் நல்லுலகடைதலும்
அல்லறம் செய்வோர் அரு நரகடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர் 120
இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான் பெருஞ்செல்வமும் நில்லா
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணையாவது 121
நன்னும் இருவினையும் நன்னுயிர்கள் நல்லறமே 122

என்பவைகளை உணர்ந்த நல்வினைச் சிறப்பினையும், தீவினை இழிவையும்' தரும் என்பதுணர்ந்த முன் செய்த நல்வினைகளினும் மிகுதியான நல்வினைகளைச் செய்யத் தொடங்குகிறான்.

சிறந்த வாழ்வு:

இதனால் இல்லற வாழ்வின் தோய்ந்த மனிதன்,

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு 123
பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு 124

என்பவற்றால் உண்மைப் பொருளை -- செம்பொருளை -- இறைவனை -- உணர முற்படுகிறான்.

காமஞ்சான்ற கடைக்கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே 125

அறிவினுள் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய் போல் போற்றாக் கடை
இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்றி யெய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சி
சிறவர்ப் பயந்த செம்மலோர் எனப்
பல்லோர் கூறிய பழமொழி 126

மெய்ப்பொருள் கண்டு, பிற உயிரையும் தன்னுயிர்போல் போற்றி காமஞ் சான்ற பின் சிறந்ததாகிய செம்பொருளைக் காணும் முயற்சியிலும் தனித்துச் செல்லாது அத்தகையோருடன் சேர்ந்து பற்றறுத்து, தன்னைச் சமூகத்துக்களித்துப் பயன் பெறும் சிறந்த பற்றற்ற வாழ்வு தொடங்குகிறான்.

நடைமுறைப்பயன் கொள்கையை ( Pragmatism ) வாழ்வு முழுதும் நுகர்ந்ததன் விளைவாக தமிழன் கருத்துக்கொள்கைக்குச் ( Idealism ) சென்றான்.

<u>மறுமை:</u>

இம்மையிற் செம்மையுடன் வாழ்ந்து பற்றறும் மனிதன் இதனிலும் மேம்பட்ட செம்மைவாழ்வுண்டோ என எண்ணி மறுமையை உணரத் தொடங்குகிறான் என்பதை மேலே அறிந்தோம்.

யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். 127
மறு பிறப் பறுக்கும் மாசில் சேவடி 128
இவன் இசை யுடையோர்க் கல்லது அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக்கேட்ட மாறு கொல் 129

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பில் புத்தேள் நாடும் [130]

இவற்றுள் இம்மையிறும் மேம்பட்ட மறுமை வாழ்வு நாட்டம் ஏற்படுகிறது. அதற்கேற்ப வினையாற்றத் தொடங்குகிறான்.

வீடு :

மனிதனின் உயர்ந்த இறுதிக் குறிக்கோள் வீடு பேறே. இல்லற மாகிய வீட்டில் அன்புடன் தொடங்கி, அருள்கனிந்தது பொது நலம் உயர்ந்து பற்றறுத்து மறுமை உணர்வும் முதிர்ந்த நிலையில் தோன்றும் எண்ணமே வீடு பேற்றெண்ணமாம். மனித வாழ்வு வீட்டில் தொடங்கி 'வீட்டில்' முடிய வேண்டும் என்பது தமிழர் வாழ்வியற் கல்வியின் நோக்கம். இவ்வாழ்வுக் கோட்பாடாகிய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளக்கல்வியே கருவியும் உற்ற துணையுமாம் என்பதைக்

கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின் [131]

என்பதால் அறியலாம். ஆகையால் கற்றல் மெய்யுணர்வு பெறுதற்கேயாம் என உணரலாம். இதையே இன்றைய கல்வி இயலார் 'அறநோக்கு' என்பர். இதுவே தமிழர் கையாண்ட கருத்துக் கொள்கையாம். ( Idealism )

## 6-2-12: ஆட்சியியல்:

வாழ்க்கைத் தத்துவமே கல்வித் தத்துவத்தின் அடிப்படை. தனி மனித வாழ்வு சமுதாயத்தையும் சமுதாய வாழ்வு தனி மனிதனையும் பாதிக்கும். ஒன்றோடொன்று இணைந்தவை; சார்ந்தவை; உறுதுணையானவை. இவற்றை முறைப்படுத்தும் பொறுப்பு அரசுடையது. அச்சமுதாயத்தின் வாழ்வியல் தத்துவம் அரசனின் ஆட்சி இயல் தத்துவத்தை ஒட்டியே அமைகிறது.

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான் 132

என்ற குறளால் ஒவ்வொரு குடிமகனும் சீரிய வாழ்வு பெறுதற்காக தன்னுடைய ஆட்சியியலை அமைத்துக் கொள்ள வேண்டியது அரச கடமையும், உறுதியான நோக்கமும் ஆகின்றன. ஆதலின் ஆட்சியியல் தத்துவம் வாழ்வியல் தத்துவத்தை ஒட்டியே அமையும் என்பது தெளிவு. இத்தகைய ஆட்சியியல் தத்துவத்தையும் அதன் பின்னணியான கல்வித் தத்துவத்தையும் காண்போம்.

அரசர் புலவர்களை நன்கு மதித்தனர். கற்றறிந்த சான்றோராகிய புலவரே கல்வியால் நாட்டை நன்முறையில் செலுத்த இயலும் என்பதைத் தமிழரசர் உணர்ந்தனர். அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும் என்ற நிலை நிலவிய காலமாதலின் புலவர்களை நன்கு பயன்படுத்திக் கொண்டனர்.

அப்புலவர்களைச் சமூகக் கல்வியாளராக அமையும் அமைப்புக்கு அடிகோலினர். தமிழகமெங்கும் அலைந்து வந்து நாட்டில் தனிப்பட்ட மனிதரிடமும் அரசரிடமும் ஏற்படும் அழுக்குகளை நீக்கிச் சமுதாயத்தை நல்வழிப்படுத்தும் சமூகக் கல்வியாளராகிய புலவர்க்கு வாழ்வியல் தேவைகளான உணவு, உடை முதலியவற்றின் குறையிருத்தல் கூடாது என்றுணர்ந்து பொருளை வாரி வழங்கினர். தமிழரசர் யாவரும் புலவர்க்கும் பொருளை வாரி வழங்கியதன் நோக்கம் நாட்டில் சமூகக் கல்வி பரவ வேண்டும் என்பதுதான். ஐம்பெருங்குழுவும் எண் பேராயமும் துணையாக அமையினும் புலவர் பொருளுரைக்கு அரசர் செவி சாய்த்து ஏற்றுக் கொண்டனர் என்பதற்குச் சான்றுகள் சங்க இலக்கியத்தில் பல உண்டு.

இச்சமூகக் கல்வியாளராம் புலவர்கள் அரசனையும் சமூகத்தையும் இணைக்கும் பாலமாக விளங்கினர். சமூகத்தின் குறையை அரசன் மூலம்

உடனடியாகப் போக்கினர். மன்னர் உயிர்த்தே மலர் தலையுலகம் என்பதை மக்கட்கு உணர்த்தினர். கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்ப தற்கேற்ப தனி மனிதனிடமோ, சமூகத்திடமோ, அரசனிடமோ காணப்படும் குற்றம் குறைகளை நீக்கி நல்வழிப்படுத்தும் புலவர்தம் கல்வியைக் கருவியாகக் கொண்டனர். ஆகவே அரசனது ஆட்சியியலும் புலவரது கல்வியும் ஒன்றோ டொன்று தொடர்பு கொண்டு தமிழகத்தின் நிலையை மேம்படுத்தியதாம்.

"குடும்பப் பூசல்களிலும் நாட்டுக் குழப்பங்களிலும் தயங்காமல் தலையிட்டு நன்மை புரியுமளவிற்குப் புலவர்கள் அரசரிடையே செல்வாக்கும் மதிப்பும் பெற்றிருந்தனர். அரசர் புலவரைத் தம் இன்னுயிர் நண்பராகக் கண் போல் நம்பிக் கேளிராகப் போற்றி வந்தனர்"[133] என்ற மு. வரத ராசன் கூற்று அரணுதல் காண்க.

ஆகவே சங்க காலப் புலவர்களைச் சமூகக் கல்வியாளர் எனல் தகுவதன்றோ?

இத்தகைய நல்லாட்சி புரிந்த தமிழரசர் முடியுடை மூவேந்தரின் நல்லாட்சிக்குத் தேவையான குண நலன்களும் மக்கள் தொடர்பும் உறு துணையான அமைச்சரையும் தூதுவரையும், ஒற்றரையும் கொண்டு முறை வழங்கி நாட்டைக் காத்தனர்.

அரசர்க்கு அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், இவற்றில் குறைவு படாமை வேண்டும். மடியின்மை, கல்வி, துணிவுடைமை அவசியம். அறத்தின் வழுவாத நன்மை, அல்லவை நீக்கும் நேர்மை மக்களை உயிரென மதிக்கும் பான்மை, குடிப்பழி அஞ்சும் தன்மை முதலிய குண நலன்கள் வேண்டும்.

அரசன் காட்சிக்கு எளியனாகவும், காணுங்கால் கடுஞ்சொல் அற்ற வனாயும் விளங்க வேண்டும். இன்சொல் கூறலையும், குறையறிந்தவுடன் முறை

செய்யும் தொடர்பினையும் அவ்வரசர் பெற்றிருந்தனர். கை குறைத்த பாண்டியனும், கன்னி வழக்கறிந்து உயிர் நீத்த நெடுஞ்செழியனும் மக்களின் நேரடித் தொடர்புடையோரே.

அமைச்சு:

அரசன் நீதி தவறாது ஆட்சி செலுத்துவதற்கு இடையறாத கல்வியைப் புலவர் வாயிலாகவும் இடித்துரைக்கும் அமைச்சர் வாயிலாகவும் செயல் முறையில் பெற்றிருந்தான். ஆகவே அமைச்சருடைய நிலையாவது

நன்றும் தீதும் கண்டாய்ந்தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழிஒரீஇ உயர்ந்து பாயுகள் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மக்கள் [134]
நூலறி புலவர் [135]
அருந்திறலமைச்சர் [136]

ஆதலாம். மேலும்,

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்ட தமைச்சு [137]

என்பதாலும்

மதிநுட்பம் நூலொடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை [138]

என்பதாலும் அமைச்சர் பணி செய்தற்கேதுவான அமைச்சுத் தத்துவத்தை விளக்குதற்கேதுவான மதியுடன் நூலறிவு பெறுதற்கேதுவான பல நூல்களைக் கற்றறிதல் இன்றியமையாதது. அதற்கேற்ற நூல்கள் அமைந்திருத்தல் வேண்டும். இவ்வமைச்சுத் தத்துவம் வாழ்வுத் தத்துவத்தை ஒட்டியதாகவே அமைந்திருத்தல் வேண்டும்.

மக்கட்கும், அரசர்க்கும் ஆகின்ற நன்மை தீமைகளைக் காண்டாராய்ந்த நலத்தையே செய்து தீமை கடிந்து, அரசனிடம் நாட்டுப் பற்றில் ஏதுவாக எழுந்த மாறு அன்பும் குடி மக்களிடம் அறமும் தவறாது காத்தப் பழிக்கஞ்சி உயர்ந்த புகழைப் பெற்று வாழும் அமைச்சர் தன்மை கூறப்படுகிறது.

நூல் பல கற்று உணர்ந்த அருமை பொருந்திய செயல் திறமை உடையாரே அமைச்சர் என்று சிலம்பு பேசுகிறது.

செயல்களையும் அதற்கேற்ற காலத்தையும் கருவியாம் தானை முதலியவற்றையும் அறிவோன் அமைச்சன்; பகைவர்க்குத் துணை ஆயினரைப் பிரித்தலும், தம்பாலாரைப் பேணிக் கொள்ளவும் வல்லானே அமைச்சன்; இயற்கையாகிய மதியுடன் செயற்கையறிவாகிய நூலறிவுடையானே சூழ்ச்சிகளை அறிந்தறிக்க முடியும். நூநெறியால் உலக இயற்கையறிந்தபொருந்தச் செய்வோனே அமைச்சன். சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைச்செயல் ஆற்றல், இடித்துரைக்கும் இயல்பு அமைச்சர் பெறும் கல்வியின் அடைபொருளாக அமைந்தன.

<u>தூதுவர்:</u>

போருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த அரசனிடம் வாடிய கொடி போன்ற அந்தணன் வந்து சில சொன்ன அளவிலே போர் நிறுத்தப்பட்டதென்ற செய்தி புறத்தில் உண்டு.[139]

தொண்டைமானிடம் ஔவையார் என்ற பெண்பாற்புலவர் தூது சென்ற செய்தி புறத்தில் உண்டு.[140] அப்புலவரின் 'அங்கத' அறிவுரை மகிழ்ச்சிக்குரியதாம்.

அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று [141]

நாட்டுப்பற்றுள்ள அன்பும் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையும் அரசனுக்கு ஆவனவே அறியும் அறிவும் தூதுவர் கல்வியில் உண்டு.

ஒற்றர்:

அரசனுடைய இரு கண்களுள் ஒன்று ஒற்றெனக் குறள் கூறுகிறது. ஆட்சி இயலில் சிறந்த அமைப்பாயும், படையமைப்பின் சீரிய உறுப்பாயும் ஒற்று கருதப்படும். அதனால் அரசர் ஒற்றுத் துறையைப் பேணி வளர்த்தனர்.

மாற்றார் உள்ளத்து உள்ளதை 'ஒற்றி' எடுக்கும் ஆற்றல் உடையாரே ஒற்றராவர். ஒற்றர் அங்கிங்கெனாது எங்கும் பரந்து காணப்படும் கூட்டமாம். அரசுக்குச் செய்தி சேர்ப்பதே ஒற்றின் கடமையாம்.

பகை, நட்பு, இடைத் தரத்தார் என்ற யாவரையும் ஆய்வதே ஒற்றும். உருவப் பொலிவும், அஞ்சாமையும், மறையடக்கமும் பெற்றோரே ஒற்றர். ஒற்றப்பட்ட பொருளையும் வேறொரு ஒற்றால் ஒப்புமை கொண்டு ஏற்க; ஓர் ஒற்றன் வேறொற்றனை அறியாமல் ஆள்க; மூன்று பேர் கொள்கைகளை ஒப்பிட்டு உண்மை ஓர்க; ஒற்றனுக்குச் செய்யும் சிறப்பினைப் பிறர் அறியச் செய்யற்க; என்ற குறள்கள் ஒற்றின் தன்மையைப் புலப்படுத்தும்.

ஒற்றின் தத்துவமும் ஒற்றின் கல்வி அறிவும் தெளிவாம்.

குறையும், முறையும், காவலும்: (சட்டம், ஒழுங்கு, காவல்):

பழங்காலச் சட்டங்கள் சமயத்தையும் நீதியையும் அடிப்படையாகக் கொண்டவை. செம்மையான ஒழுக்கமான வாழ்வே சட்டத்தின் நோக்காம். மக்கள் ஒரோருகால் தவறுகின்ற போது தவற்றினை நீக்கல் முறையாம். குறை நீக்கி முறை காட்டும் கருவியே காவலாம். அரசனைப் பொருந்த அளவு அறமே தண்டனையும் முறையும் ஆம். காவலைச் செய்கின்றவனே காவலன்.

சமுதாய நன்மைக்குரிய தொகுப்புக்களைக்கூறும் நூல் அற நூல் எனப்பட்டது. அதனை இன்றைய சட்டத்தோடு ஒப்பிடலாம்.

அல்லது கடிந்த அறம்புரி செங்கோல் [142]
அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர் [143]
அறநெறி முதற்றே அரசின் கொற்றம் [144]
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கையல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம் [145]
மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனில் இன்றும் [146]

அல்லவை நீக்கி, குடி மக்கட்குத் துன்பம் நேராது காத்தல் அரசனது கடமை. தவறின், உலகம் பழிக்கும் என்ற அச்ச உணர்வு தமிழரசர் யாவரிடமும் குடி கொண்டிருந்தது. செங்கோலாட்சியே குறிக்கோள்.

மன்னர்க்கு வெற்றியைத் தருவது வேலன்று; செங்கோலே. அதுவும் கோடாதிருப்பின் தான் என்பது மறைமொழி.[147] அரசன் கொடியாரைக் கொன்று நாட்டு மக்களைக் காத்தல் என்பது களை நீக்கிப் பைங்கூழைக் காத்தலோடு ஒக்கும்.[148]

<u>நீதி மன்றம்:</u>

மக்கள் ஒழுக்கத்தினின்று வழுவிய போதும் உடலுக்கும் உடைமைக்கும் உயிருக்கும் ஊறு நேரும்போதும் தம்மைக் காத்துக் கொள்ள நீதியை – முறையை – வேண்டினர். நீதி முறையை வழங்குதற்கென ஏற்பட்ட அமைப்புக்களே நீதி மன்றங்களாம்.

சங்க காலத்து நீதிக்கும் முறைக்கும் உரியோன் – தலைவன் – அரசனே.

இறை காக்கும் வையகமெல்லாம் அவனை
முறை காக்கும் முட்டாச் செயின் 149

என்பதால் அரசனைக் காப்பது அரசமுறையாகிய செங்கோலே என்பது தமிழர் கொள்கை என்றறியலாம்.

நடுவு நிலைமையே நீதி மன்றங்களின் அச்சாணியாம் என்பதைப் பின் கண்ட சான்றுகளால் உணரலாம்.

........................முதியோர்
அவைபுகு பொழுதில் தம்பகை முரண்செலவும் 150
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி 151
அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன் கோலன்ன செம்மைத் தாகி
சிறந்த கொள்கை அறங்கூறவையமும் 152
நெடு நகத்துப் பகல் போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர் 153
மறம்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம்நின்று நிலையிற்று ஆகலின் அதனால்
முறைமை நின்புகழும் அன்றே 154

சங்க காலத்து ஊர் தோறும் ஊர் அவைகளும் மன்றங்களும் அமைந்து ஊரில் நிகழும் உடைமை, உடல், உயிர் பற்றிய அனைத்து வழக்குகளையும் விசாரித்து நீதி வழங்கின.

<u>தண்டனை:</u>

வழக்குகட்கேற்ற தண்டனை மென்மையும், வன்மையும் பெற்றிருந்தது. உயிர்கோடல், சிறையடைத்தல், யானைக்காலால் இடறுதல், விலங்கிடுதல்

உப்புக் குறைத்தல் முதலியன தண்டனைகளாக விளங்கின.

இவற்றுள் சிறையிடல், உயிர்கோடல் இன்றும் தண்டனைகளாக உள்ளன.

<u>சிறை விளக்கம்:</u>

வருவிசைப் புனலை கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமையானும் [155]
நீர் மிகிற் சிறையுமில்லை [156]

உணர்ச்சி பெருகித் தவறிழைத்து வரும் குற்றவாளியை அடைத்து வைக்கும் இடத்திற்கும் சிறை என்றே பெயர் வழங்கினர். ஈண்டு நீர்ச் சிறையின் நோக்கத்தை ஒத்த நோக்கில் ஒறுக்கப்பட்டார் சிறையின் நோக்கமானது அவரின் குற்றம் களைந்து குணம் ஊட்டி இயல்புக்கும் இடத்திற்கும் ஏற்றபடி சமுகத்திற்குப் பயன்படும் வழியில் மடை மாற்றலேயாம் என்பது தெளிவு. சிறையும் அணையும் பொருள் ஒற்றுமை உடையன. நீர்ச்சிறை போலவே மக்கட்சிறையும் சமுக நல நோக்குடையதாம். அந்நீர் மிகின் தாங்க இயலாது. அதேபோல் குற்றவாளிகளின் உணர்ச்சிகளை மனமாற்றம் செய்யாவிடில் சமுகத்திற்குப் பெருங்கேடாம் என்ற உளவியல் கருத்து ஒப்பு நோக்கற்பாலது. குற்றவாளிகளை மதித்து நெறிப்படுத்தி நல்லவராக மாற்ற வேண்டும் என்பது அன்றைய அரசின் உயர்நோக்கமாகும் என்பது தெளிவன்றோ? அந்நோக்கமே இன்றைய சிறையமைப்பின் நோக்கமாகும்.

மணிமேகலை என்ற காவியத் தலைவி குற்றவாளி எனக் கருதப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டபோது சிறைக் கோட்டத்தை அறக்கோட்டமாக்கிய செய்தி வெளிப்படையாம். குற்றவாளியே அறக்கோட்டம் ஆக்க முயன்ற உயரிய செய்தி சங்க இலக்கியத்தில் இடம் பெறாதது.

ஆகவே 'கற்சிறை', 'சிறை' என்ற சொற்களிலிருந்து தற்காலத்து

வழங்கும் சிறை என்ற சொல் தோன்றி இருத்தல் வேண்டும். இன்றும் பெரும்பாலான சிறைகள் கற்சிறைகளாக இருத்தல் கண்கூடு.

ஆதலின் அரசன் பெற வேண்டிய கல்வியில் முறை செய்யும் வகையும் காவல் செய்யும் வகையும் நீதி மன்ற அறிவும், ஒறுக்கும் ஆறும் சிறை பற்றிய தத்துவமும் செயற்பாடும் விளக்கமாக இடம் பெற்றிருத்தல் வேண்டும்.

## 6-3-0: கற்பிக்கும் கற்கும் முறை:

ஆய்வு முறையில் - இயல் 3ல் - முன்னர்க்கூறியபடியே கற்பித்தல் கற்றல் முறைபற்றிச் சங்க இலக்கியம் முழுதும் குறிப்பாயும் மறைமுகமாயும் ஒரு புடையொத்து வரும் செய்திகள் யாவும் தொகுக்கப்பட்டு இத்தலைப்புக் கேற்றபடி வகுக்கப்பட்டுக் கூறப்படும் முறை மேற்கொள்ளப்படுகிறது.

கற்பித்தல் கற்றல் முறைபற்றித் தொல்காப்பியப் பாயிர உரை மேற்கோள் பாடல்கள் பல செய்திகளைக் கூறுகின்றன. அம்மேற்கோள் பாடல்கள் பெரும்பழமை உடையன. உரையாசிரியர் காலத்துக்கும் முற் பட்டன. அவற்றுள் கற்பித்தல் பற்றிய பாடலாவது:

ஈதல் இயல்பே இயல்புறக் கிளப்பின்
பொழிப்பே அகலம் நுட்பம் எச்சம் என
பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்
புகழ்ந்த மதியின் பொருந்தும் ஓரையின்
திகழ்ந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்
கொள்வோன் உணர்வகை அறிந்தவன் கொள்வரக்
கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர்.[157]

இதில் வரும் 'கொடுத்தல் மரபு' என்ற சொற்றொடர் கல்வியைக் கற்றுக் கொடுத்தல் எனப் பொருள் படும். 'மரபு' என்பது தொன்று

தொட்டு ஆன்றோரால் கூறப்பட்ட முறை உடையதெனப் பொருள்படும். ஆகவே, கல்வியைக் கற்றுக் கொடுத்தலென்பது தொன்று தொட்டு வரும் மரபை உடையதெனலாம். ஆகவே இப்பாடல்கள் சங்க காலத்துக்கும் மிக முற்பட்டு நிலவிய கற்பித்தல் கற்றல் முறையைக் கூறும் தன்மையன என்ற றிவு பிறக்கின்றது.

இப்பாடலில் வரும் 'ஈதல் இயல்பு' என்ற தொடர் கல்வியைப் பயன் நோக்காது வாரி வழங்கிக் கற்பிக்கின்ற முறையைச்சுட்டும். இதனால் சங்க காலத்து ஆசிரியர் யாவரும் மறுபயன் – குறியெதிர்ப்பை – நோக்காது கற்பித்திருக்க வேண்டும் என்பது போதரும்.

இதனின்று, அன்று மாணக்கர் மையக் கல்வியே (child centered ) விளங்கியிருத்தல் வேண்டும் என்பது தெளிவு.

மேலும் 'ஈதல்' என்ற சொல்லாலே பொருள் மிக உடையாரே ஈதலைச் செய்ய முடியுமாறு போல அறிவுப் பொருளாம் கல்விப் பொருள் நிரம்பிய ஆசிரியரே கற்பித்தலைச் செய்ய இயலும் என்பதும், அவ்வாசிரியர் பல்லாற்றானும் முயன்று கல்விச் செல்வத்தைச் சேர்த்துத் தொகுத்தவரே என்பதும் குறிப்பாம்.

'உணர்வகை' என்ற சொல் ஆழமான பொருளையுடையது. மாணக்கர் உணரும் வகையறிந்து கற்பிக்க என்பதால் அம்மாணக்கரது மன நிலையறிந்து கற்பிக்க என்பது பெறப்படும். அம்மனநிலையோடு மட்டுமின்றி சூழ்நிலையையும் ஆராய்ந்து பார்த்து மாணக்கர் மனம் கற்கப் படு பொருளின்கண் சென்று பதியுமாறு ஆள உளவியல் சூழலறிந்து, கால மறிந்து, கொள்ளும் அளவறிந்து, கற்பித்தல் நடைபெற வேண்டும் என்பது குறிப்பு.

மாணுக்கர் 'கொள்வர' க்கற்பித்தல் வேண்டும் என்றமையானே உள்ளப்பாங்கு ஏற்கக் கொள்ளும் இயல்பும் அறிந்து கற்பித்தல் நடைபெற வேண்டும் என்பது பெறப்படும்.

இதையே இன்றைய உளவியலாரும் மரபியலும் சமூகவியலும் கற்பித்தலில் பேரிடம் பெறுதலைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

பொழிப்பு, அகலம், நுட்பம் என்ற சொற்களால் கற்பிக்கின்ற செய்திகளை மாணுக்கர் இயல்புக்கேற்பப்பொழிப்புரை மூலமும் எளிதின் விளங்கிக் கொள்ள இயலாதோர்க்கு அகல உரை மூலமும், நுண்ணறிவு மிக்குடைய மாணுக்கர்க்கு நுட்ப உரை மூலமும் கற்பித்தல் முறை நன்று என்று உரைலாம்.

'எச்சம்' என்ற சொல் உணர்த்தும் பொருள் யாது? கற்பித்தல் முறைகளை வரையறை செய்ய இயலாது. அக்கற்பித்தல் சூழலையும், இடத்தையும் கல்வி நோக்கத்தையும், வாழ்வு நோக்கத்தையும் ஒட்டி நாடுதொறும் காலந்தொறும் மாறுபடும் தன்மை உடையது. ஆகவே பொழிப்பு, அகலம், நுட்பம் என்ற முறை தவிர காலத்திற்கும், இடத்திற்கும், சூழலுக்கும் ஏற்ப ஆசிரியர் தாமே அவ்வப்போது வகுத்துக் கற்பிக்கும் முறைகளை 'எச்சம்' என்ற சொல் குறிக்கும்.

இவ்வாறு மாணுக்கர் இயல்புகளைத் தனிப்பட்ட முறையில் ஆய்ந்து கற்பிக்கும் முறை மிகப் பழைய மரபினை உடையதென்பது தெளிவாம். இவ்வாறு கற்பிக்கும் வினையாற்றும் ஆசிரியர்

அறிவுரு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு [158]

என்பதற்கேற்ப அறிவும் அதற்கேற்ற தோற்றப் பொலிவும் ஆராய்ந்த

தொகுக்கப்பட்ட கல்வியறிவுடையவராகச் செல்லுதல் வேண்டும் என்பது பெறப்படும்.

'அறிவு' என்ற சொல் ஆசிரியருக்கு அமையும் காலத்துப் பரந்த பொருளைத் தரும். கற்பிக்கும் வினைக்குச் செல்லும் ஆசிரியன் முதலாவதாக நிரம்பிய நூலறிவு உடையனாதல் வேண்டும்; கற்போர் தகுதியும் அத்தகுதிக் கேற்பக் கற்பிக்கும் முறையறிவு வேண்டும். எதைக் கற்பிக்க வேண்டும் எப்போது கற்பிக்க வேண்டும் எந்த அளவு கற்பிக்க வேண்டும் என்ற அறிவு பெறுதல் வேண்டும். இவற்றையெல்லாம் ஆய்வின்றி ஆசிரியர் அடைதல் இயலுமோ? ஆகவே வெறும் அறிவு மட்டும் போதாது. இத்தனை செய்திகளையும் ஆராய்ந்த கல்வி – முறையறிவு – கற்பிப்போனாகிய ஆசிரியர்க்கு அமைதல் வேண்டும். ஆதலால் அறிவு ஆய்கின்ற போதே பயன்தரும் என்பதும் அவ்வறிவுடன் கூடிய பயனை அன்றைய ஆசிரியர் பெற்றிருந்தனர் என்பதும் குறிப்பாம்.

நீரின்றி உலகு அமையாதவாறு போல ஆய்வின்றிக் கல்வியும் அதன் பயனும் அமையா; ஆய்வின் நோக்கம் சமுதாயப் பயனே.

ஆகவே அறிவும் ஆய்வும் மிக்க ஆசிரியரே சீரிய கற்பித்தலைச் செய்ய இயலும் என்பதாம்.

"எரிகின்ற விளக்கே மற்ற விளக்கினை எரியச் செய்ய இயலும்; அதே போன்று கற்றுக் கொண்டே இருக்கும் ஆசிரியனே சீரிய கற்பித்தலைச் செய்ய இயலும்"[159] என்ற தாகூரின் வாக்கு ஒப்பு நோக்கத்தக்கதாம்.

இக்கற்றோனது கடமையை

இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்.[160]

என்ற குறள் புலப்படுத்தும். கொத்தில் மலர்ந்த வைத்தும் மணம் இல்லாத மலர் பயன்படாதவாறு போல விரித்துரைக்கும் ஆற்றல் – கற்பிக்கும் ஆற்றல் – இல்லாதார் சமுகத்துக்குப் பயன்பட மாட்டார் எனக் குறள் கூறும்.

விரித்துரைக்கும் ஆசிரியர் ஈண்டு மலரொடுஒப்பிடப்பட்டமை சிறப்பு. மலருக்குண்டாம் மணம், மென்மை, கவர்ச்சி, தேனுடைமை, இனப்பெருக்கம் முதலிய யாவும் ஆசிரியர்க்குடைய வேண்டும் என்பது குறிப்பாம். மென்மைத் தன்மையுடைய ஆசிரியர் உள்ளமே மாணக்கர்க்கு நலம் விளைவிக்க இயலும். மணமாகிய கல்விப்புகழே வண்டுகளாம் மாணக்கரை ஈர்க்கும். மலருக்குத் தனிப்பட்ட முறையில் அமையும் கவர்ச்சி போல ஆசிரியர் உடைய தோற்றப் பொலிவும் முகமும் இனிமையும் மாணக்கரைத் தன்னிடம் நிலைபெறச் செய்யும்; உண்டுத் தெவிட்டாத தேனின் சுவையை வண்டுகள் தாமே உண்ணும்படித் தேனைத் தருதல் மலரின் சிறப்பாம். அதுபோலக் கல்விப் பொருளை–அதன் சுவையை– மாணக்கரே உணரும் படிச் சுரக்கும் இயல்பும் 'ஈதல் இயல்பும்' அமைதல் ஆசிரியர்க்குச் சிறப்பாம். இனப்பெருக்கம் மலரின் இயல்பாதல் போல மாணக்கர்களைத் தன்னிடம் கற்றறியும் சான்றோராக்க வேண்டியது ஆசிரியர் இயல்பாம்.

இவ்வாறு அன்பும், அறிவும், ஈயும் தன்மையும், ஆய்வும், சமுக நல நோக்கும் உடைய ஆசிரியர்தான் கற்றதைக் கேட்போர் உள்ளம் உணர்ந்து ஏற்றுக் கொண்டும் வகையும் நிலையும் முறையும் அறிந்து கற்பிக்க வல்லவராதல் முடியும். அவ்வாறு கற்பிக்க இயலாதோர் நாறு மலர் போல நாடா மாந்தராகிச் சமுகத்திற்குப் பயன்படார் என்பது தெளிவாம்.

இவ்வாறு விரித்துரைக்கும் ஆற்றலுடைய ஆசிரியர் செயலால் விளையும் பயனுவது,

உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.[161]

என்பதாம்.

கற்பிக்கப்படு பொருளை ஏற்றுக் கொள்ளும் உணர்வினை இயல்பாக உடையாரிடம் ஆசிரியர் கற்பித்தலைச் செய்தல், தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற் போலுமாம்.

"தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளரும்" [162]

என்ற உரையால் கல்வி தானே வளரும் இயல்புடையதென்பதும், பாத்தியுள் நீர் சொரிதல் என்பது கற்பித்தலைக் குறிக்கும் என்பதும் சொரிகின்றவர் ஆசிரியர் என்பதும் உருவகத்தால் பெறப்படும் உண்மைகளாம். நீர் சொரிதற்குப் பயிரின் தேவைக்கேற்ற நீரின் அளவும் அதற்கேற்ற காலமும் அறிதல் இன்றியமையாதது. இவ்வாறே மாணக்கன் மன நிலையும் கொள் ளளவும் அறிந்து கற்றலைச் செய்க என்ற கருத்து, ஆசிரியர் எப்போதும் தயாரான நிலையில் இருத்தல் வேண்டும் என்பதைக் குறிக்கும். ஈண்டு கற்கும் ஆற்றல் இயல்பாக மாந்தர்க்கு உண்டு என்ற உளநூல் கருத்து தமிழரிடம் ஊன்றி இருந்தமை தெளிவு. அக்கற்கும் ஆற்றல்களை வெளிக் கொணர வேண்டியதும் பயன்படச் செய்ய வேண்டுவதும் ஆசிரியப்பணி என்பது பெறப்படும். இவ்வாறு கற்பிக்கும் - உணர்த்தும் தன்மை - யாது? கற்பித்தலுக்குச் சொல்லே முதல் கருவி. அச்சொல்லை ஆசிரியர்

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.[163]

என்ற பாங்கில் பயன்படுத்த வேண்டும். அஃதாவது தான் உரைச் சொல்ல எடுத்துக் கொண்ட பொருளானது மாணக்கவர் உள்ளத்தே சென்று பதியும்

தன்மை உடையதாக அமைதல் வேண்டும். மேலும் கற்றலில் பங்கு பெறுவோர் கற்பிக்கப் பட்டார் வாயிலாகக் கேள்விப்படும்போது கேளாது தவற விட்டு விட்டோமே என்று உன்னி எதிர்காலத்துத் தவறாது வந்து கேட்டுப் பயன்பெறச் செய்யும் அளவு பிணித்தலே சீரிய கற்பித்தல் முறையாம். இவ்வாறு உவக்கும் படியும் கேட்டார்ப் பிணிக்கும் படியும் சொல்லும் முறையாவது

> எண்பொருள வாகச் செலச் சொல்லித் தான்பிறர்வாய்
> நுண்பொருள் காண்ப தறிவு.[164]

என்பதாம். அஃதாவது ஆசிரியர் அறிவாளராயும், ஆய்வாளராயும், உளவியல் அறிஞராயும், மாணாக்கரை மதித்திடும் தகுதி உடையராயும் அமைதல் வேண்டும் என்பதாம். எண்பொருளவாக என்பதால் கேட்கின்ற மாணாக்கர் கேட்கின்ற பொருளையும் அதனோடு ஒத்த பொருளையும் எண்ணத் தொடங்கு மளவு கற்பித்தல் வேண்டும். எண்ணத் தொடங்குகின்ற அளவு விட்டு விட்டால் மாணாக்கர் தாமே எண்ணி எண்ணிப் பல செய்திகளை அறியத் தொடங்கி விடுவர். மாணாக்கர் உள்ள இயல்பினை சூழலையும் ஏற்றுக் கொள்ளும் பான்மையையும் அறிந்து-உணர்ந்து-உள்ளத்தே சென்று பதியுமாறு கற்பித்தல் வேண்டும் என்பது 'செலச்சொல்லி' என்பதால் பெறப்படும். அவ்வாறு ஆசிரியர் உரைத்தது மாணாக்கரால் உணரப்பட்டதா என்பதை ஏற்ற முறையில் - வினாவிடை போன்ற முறையில் - அறிந்து கொண்டு மேலும் கற்பித்தல் வேண்டும். தான் கற்பித்த அளவு பயன்பட்டுள்ளதா என்றும் செலச் சொன்னோமா என்பதையும் அறிந்து அவ்வாறு செலச் சொல்லி இராவிட்டால் வேறு முறையைப் பயன் படுத்திக் கற்பித்தல் வேண்டும். உடனடியாக மாணாக்கர்வாயிலின்று ஆசிரியர் தான் கற்பித்ததை அளவிட்டும், தன் தகுதியையும் கற்பித்தல் முறையையும் தெளிவு படுத்திக் கொள்ளுதல் வேண்டும். கற்பித்தல் என்பது ஒருவழிப் பாதை அன்று; ஆசிரியரும், மாணாக்கரும் இணைந்து அமையும்போதே கற்பித்தல் பயன்தரத் தக்கதாக அமையும். ஆசிரியர் தன்னை மதிப்பிடுதற்கு இம்முறையே

ஏற்ற முறையாம். இதையே இன்றைய கல்வி இயலார் 'வகுப்புமுறைத் தேர்வு' என்பர். இவ்வாறு ஊர்த்தங்கால்

தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி [165]

என்பதால் தொகுத்துக் கூறிக் கற்பித்தல் முறை அமைந்திருக்கலாம் என்பது பெறப்படும். அவ்வாறு கற்பிக்கும் காலத்து வெய்ய சொற்களை - சுடு சொற்களை - நீக்கிக் கற்பித்தல் வேண்டும்.

இன்றைய கற்பித்தல் முறையில் ஆசிரியர் பயன்படுத்தும் வெய்ய சொற்கள் - சுடு சொற்களே - மாணக்கரின் பல போராட்டங்களுக்கு ஏதுவாக அமைதல் உணரத் தக்கதாம்.

நகச்சொல்லி என்பதால் இடைஇடையே மாணக்கர் மனம் சலிப்பும் வெறுப்பும் அடையாதவாறு நகைச்சுவையை உணவுக்கு உப்பாகாய் அமைந்தாற் போல் பயன்படுத்திக் கற்பித்தல் நலம் தரும் என்பது பெறலாம்.

'இருவென இருந்து சொல்லெனச் சொல்லி' [166]

என்ற வரியால்தொடக்க காலத்தில் - மாணக்கர் கல்வி தொடங்கும் காலத்தில் கற்பிக்கும் முறை மாணக்கர் அறியாப் பருவத்தினராதலின் இவ்வாறு நடைபெற்றது. தொடக்க நிலையில் அமைந்த கற்பித்தல் முறை இதுவாம். இக்கற்பித்தலை 'இளைஞர்களுக்குக் கற்பிக்கும்' இளம்பாலாசிரியர்கள்' மேற்கொண்டிருக்கலாம்.

பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலா னாகி அன்பொடு கெழீஇ [167]

என்ற பாடப்பகுதியால் இரவிலும், பகலிலும் மாணக்கன் அகலானாகி ஆசிரியருடன் உண்டு உறைந்து வாழும் முறையும் கற்பித்தலும் கற்றலும் நடை

பெற்றிருத்தல் வேண்டும். இதன் விளைவாக இருவரும் சேர்ந்து உறைகின்ற பிணிப்பும், கல்வியும் உண்டாயிற்று. 'குருகுலம் நடத்திய குலபதி' நிலையி லிருந்த ஆசிரியர்கள் இக்கற்பித்தல் முறையில் பேரிடம் பெற்றிருத்தல் வேண்டும்.

குணத்தொடு பழகிக் குறிப்பின் வழிநின்று [168]

என்பதால் மாணக்கர் ஆசிரியர் குறிப்பறிந்து கற்பித்தலை ஏற்றுக் கொண்டனர் எனலாம். இவையே இன்றைய முறையில் பின்வருமாறு அமைந் திருக்கக் காணலாம். தற்காலக் கல்வியின் உளவியலின் முக்கியப் பணிகளாக

1. கற்பித்தலைப் பயன் உள்ளதாக்கல்
2. கற்றன நிலைத்து மாணக்கர்க்குப் பயனளிப்பன ஆக்கல்
3. ஆசிரியர் மாணக்கர் உடல் உள்ள நலம் பெறுதல் எனவும்

கற்பித்தலின் நோக்கு 1) பொருளைத் தெளிவு படுத்தல் 2) மாணக்கரை உணர்ந்து கற்பித்தல் எனவும் கல்வியின் இறுதி நோக்கம் நல்வாழ்க்கை நடத்தலே எனவும் குறிக்கப்படுகின்றன.

ஆசிரியர்க்குக் கற்பிக்கும் தகுதிகள் யாவும் நிரம்பியிருந்தன. அரிய கல்விப் பொருள் உடைமை நிலம் போன்ற பொறை, விளைத்தல் வன்மை, மேன்மேல் கற்கும் ஆர்வம், பிறர்க்கு உறுதி கூறும் தன்மை, கசடறக் கற்ற புலமை, எல்லாவற்றிலும் மேம்பட்ட ஒழுக்கமுடைமை பூண்டிருந்தனர். மாணக்கரின் உள்ளமறிந்த உளநூல் புலமையால் மாணக்க ரிடம் கொள்திறனறிந்து எப்போது எந்த அளவு எவ்வளவு காலம் கற்பித்தல் வேண்டும் என்றறிந்து கற்பிக்கும் உரிமையுடையராயிருந்தனர்.

இன்றைய நிலையில் மாணக்கரைத் தேர்ந்தெடுத்தல், வகுப்பமைத்தல் பாடத்திட்டம் வகுத்தல், நிறைவேற்றுகின்ற இடம், காலம், பாங்கு

முதலியன ஆசிரியர் கட்டுப்பாட்டில் இல்லை. தற்போது கற்பிக்கப்படும் முறை குழுக்கல்வி முறை கொண்டது. மாணாக்கரை அதிக அளவு ஒரு சேர அமர்த்திக் கற்பிக்கும் முறை நிகழ்கிறது. வரையறை செய்யப்பட்ட காலம் வகுப்பறை, மாணாக்கர் மிகுதி, அதிக எண்ணிக்கை தனிக்கவனம் செலுத்த இயலாமை, மனம் பாடத்தின் மீது பொருந்தினும் பொருந்தா விடினும் கற்பித்தலைச் செய்து முடித்தல், மாணாக்கரை நோக்கி ஆசிரியர் செல்லல் அவர் விருப்பம்போல் சொல்லல் முதலிய முறையினில் கற்பித்தல் நடைபெற்றது.

கற்கும் முறை கோடல் மரபு எனப்பட்டது.

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே.[169]

ஆசிரியர்க்கு வேண்டிய போது வேண்டிய பொருளை இயன்றளவு கொடுத்தும் சினம் கொள்ளாதும் கற்றல் முறை குறிக்கப்பட்டது.

கோடல் மரபே கூறுங் காலை
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
முன்னும் பின்னும் இரவினும் பகலினும்
அகலானாகி அன்பொடு கெழீஇக்
குணத்தொடு பழகிக் குறிப்பின் வழி நின்று
ஆசற உணர்ந்தோன் வாவென வந்தாங்கு
இரு என இருந்து எடு அவிழ் என அவிழ்த்துச்
சொல்லெனச் சொல்லிச் செல்லெனச் சென்று
பருகுவன் அன்ன ஆர்வத்தனாகிச்
சித்திரப்பாவையின் அத்தகவு அடங்கிச்
செவி வாயாக நெஞ்சு களனாகக்
கேட்டவை கேட்டவை வல்லனாகிப்
போற்றிக் கோடல் அதனது பண்பே [170]

என்ற பாடல் பகுதியால் குறிப்பிட்ட காலத்தில் செல்லல், ஆசிரியரை வழி படுதல், எப்போதும் ஆசிரியரைப் பிரியாது உடனுறைதல், ஆசிரியர் உள்ளக்கருத்தை உணரும் குறிப்புணர்தல், ஆசிரியர் சொல்லுக்கு மதிப்பளித்துப் பணிந்து கற்றல், பாடங்களை ஒரு சேரப் பருகும் ஆர்வமுடைமை, கற்கும் காலத்து சித்திரப்பாவை போன்ற அடக்கம் உடைமை, செவியை வாயாகவும், நெஞ்சினைக் களனாகவும் கொண்டு கற்கும் இயல்பு பெறுதல் - முதலிய மாணக்கர்க்கு அமைய வேண்டிய கற்றல் முறைகள் என உரைலாம்.

'பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி' என்பதால் ஆசிரியர் உரைக்கின்றவைகளை எல்லாம் சிலபோது கடினமாக இருப்பினும் அவற்றை எளிப் பருகும் அளவுக்கு எளியதாக அமைத்துக் கொண்டு ஒரு சேரக் கற்கும் திறமையும் ஆர்வமும் உடைமையே சிறிய கற்றல் முறை எனக் குறிக்கப் பட்டதாம்.

வழக்கின் இலக்கணம் இழுக்கின்றி அறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசான் சார்ந்து அவை அமைவரக் கேட்டல்
அம்மாண்பு உடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினவுவை விடுத்தல் என்று இன்னவை
கடனாக்கொளினே மடம் நனி இகக்கும். 171

என்பதால் ஆசிரியர் கற்றுத்தரும் பாடங்களின் மீது விருப்புக்கொண்டு உள்ளத்தே ஏற்றலும், கசடற அறிதலும், அவ்வாறு கேட்டவைகளை மீண்டும் நினைத்துப் பார்த்தலும், ஐயம் எழுந்தால் ஆசிரியரிடம் சார்ந்து நிறைவுடன் வினுதலும், தன்னொத்த மாணக்கருடன் பலகால் பயின்றும் வினவியும் வினவுக்கு விடையளித்தும், பயிற்சி செய்தும், கற்கப் புகுந்தால் அறியாமை நீங்கி அறிவொளி கிட்டும் என்பது கருத்தாம். இது மரபாகத் தொன்று தொட்டு நடைபெற்று வந்ததெனப் பாடலால் உரை இயலும்.

இதையே தற்காலக் கல்வி உளவியலார் ஆக்க நிலை உறுத்தல், ஆக்க நிலையுற்ற ஆண்டல் பன்முறைப் பயிற்சி எனவும் ஆயத்த விதி, பயிற்சி விதி, விளைவு விதி எனவும் திறம்படக் கற்றலுக்கு ஊக்குவித்தல், முதிர்ச்சி, கவனம், வழி காட்டல், தனி முறை, ஆசிரியர் மீதுள்ள மனப்போக்கு என்றெல்லாம் குறிப்பர்.

இவை யாவும் குறிப்பிட்ட காலத்தில் இடத்தில், சூழலில் கற்கும் முறைகளாக அமைந்தன. இன்றைய நோக்கில் முறைசார் கல்வி முறையை ஒத்த கற்பித்தல் கற்றல் முறையில் நடைபெற்றதெனலாம். இவ்வாறு கற்க இயலாதோர் இருப்பரன்றோ? அவர் கற்பதற்கெனச் சில முறைகளும் அமைப்புக்களும் அமைந்திருந்தன. தமிழர் கல்வி வாழ்வியற்கல்வியாதலால் கற்பித்தல் கற்றல் எங்கு எப்போதும் எப்படியும் நிகழும் நிலை இருந்தமையால்தான்

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு [172]

என மொழிவதாயிற்று. இவ்வாறு கற்க இயலாதோர் குறிப்பிட்ட காலத்து ஆசிரியர்களிடம் சென்று கற்க இயலா விடினும், கேள்விச் செல்வத்தால் கற்றுக் கொள்க என்பதை,

கற்றில னாயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை. [173]

எனப் பாடிற்று.

கற்க இயலாதார் – காலமில்லாதோர் – வாய்ப்பற்றோர் – அன்னோர் அவ்வப்போது கூடி விவாதிக்கும் 'அவை'கட்குச் சென்றும், 'பட்டி மண்டப'ங்களுள் நுழைந்தும், 'மன்றங்'களில் சேர்ந்தும், 'பள்ளி'களில் நின்றும், 'சங்கங்'களைச் சார்ந்தும், ஆங்குள்ள கற்றோர் கூறும் –

விவாதிக்கும் - செய்திகளைக் கேட்டுக் கல்வியறிவைக் கேள்வியறிவு மூலம் பெற்றுக் கொள்க என வழி காட்டப்பட்டது.

அவை, பட்டி மண்டபம், மன்றம், பள்ளி, சங்கம் என்பவை அன்று கற்றோர் பலர் கூடி விவாதிக்கும் - வழக்குத் தீர்க்கும் - இடங்களாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதால் ஆங்கு சென்று அறியாமை களைந்து கல்வி பெறுக என்பது குறிப்பாம். இம்முறையான கற்றலை இன்றைய கல்வி நோக்கில் முறை சாராக்கல்வியோடு ஒருபுடையொத்த கல்வி முறை எனக் கூறலாம்.

இவ்வாறு கற்கும் கலந்து கல்வியில் சிறந்த ஆன்றோர் முன்பு கல்வி சிறியளவில் பெற்றுள்ள இவர் கற்றலை விரும்பிக்கேட்டு நிற்கின்ற நிலை சிலபோது பிறரால் - அறியாதோரால் - இகழ்ச்சியோடு நோக்கப் படலாம். அவ்வாறு நோக்கப்பட்டாலும் அந்நோக்கினைப் பொருட் படுத்தாது தம்முடைய கற்றல் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளும் நோக்கு உடையாரே கற்றற்குரியர் என்பதை

> உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
> கடையரே கல்லா தவர்[174]

எனக் குறள் பாடிற்று. செல்வர் முன் நல்கூர்ந்தார் நிற்குமாறு போலக் கல்விச் செல்வமுடையார் மாட்டும் அறியாதார் மன்றும் ஏக்கற்றுக் கற்கும் நிலை எப்படியும் அது நோக்காது கற்றுக் கொள்க எனக் கற்றல் கூறப் பட்டது.

## 6-4-0: ஆசிரியரும், மாணக்கரும்:

ஆசிரியர் என்ற சொல் வழக்கு 2000 ஆண்டுகட்கு முற்பட்ட தொல் காப்பியத்திலேயே இடம் பெற்றதை முன்னர்க் கண்டோம்.

கடிநிலை இன்றே ஆசிரியர்க்க [175]

வரை நிலையின்றே ஆசிரியர்க்க [176]

அறங்கோட்(டு) ஆசாற்கு [177]

போன்ற சொற்றொடர்களால் ஆசிரியன், ஆசான் என்ற சொற்கள் மிகப் பழைமை உடையன என்பது தெளிவு.

ஆசிரியர் என்ற சொல் ஆசு இரியர் என்ற இரு சொல்லின் கூட்டுச் சொல்லாம். இன்றைய நிலையில் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் கற்பிக்கும் – வழி காட்டும் – தொழில் உடையார்க்கே இச்சொல் அமையினும் சங்க காலத்தில் இச்சொல் பரந்துபட்ட பொருளில் வழங்கியதாம்.

ஆசு எனப்படும் குற்றங்களை இரிகின்ற – நீக்குகின்ற – சமூக நலம் விளைக்கும் பொருட்டு ஆசுகளை இரிகின்றவர்க்கு இப்பெயர் வழங்கியது.

முடியுடை மூவேந்தரே நாட்டின் உயர்வும், உயிரும் என்ற நிலை சங்க காலத்தில் நிலவியது. அவரே முறை செய்வோர் என்பதும் முறை செய்தார் என்பதும் வரலாறு. அவ்வாறு முறை செய்யாது அறியாமையால் குறை செய்கின்ற காலத்து அவர்க்கு எடுத்துரைத்தும் – இடித்துரைத்தும் – அறிவு கூறும் தகுதி அமைச்சரை விடப் புலவர்க்கே மிக்கிருந்தது என்பது சங்கப் பாடல்கள் புலப்படுத்தும் உண்மையாம்.

ஆகவே மாணாக்கரிடமோ, சமூகத்திடமோ, அரசரிடமோ காணப் படும் ஆசுகளை இரிகின்ற ஆசிரியர் நிலை புலவர்க்கும் வாய்த்திருந்ததாம்.

திண்ணைப் பள்ளிகளிலும், சங்கங்களிலும், பட்டி மண்டபங்களிலும், கற்பிக்கும் ஆசிரியரை ஒரு வகையாகவும், அரசர்க்கும் மக்கட்கும் எழுகின்ற மாசுகளை நீக்கும் புலவரை இன்னொரு வகையிலும் குறிப்பிடலாம்.

எனவே சமூகக் கல்வியாளர் என்று புலவரை அழைத்தல் பொருந்து வதாம்.

சங்க காலத்தினராக 476 புலவர்கள் சுட்டப்படுகின்றனர். அவருள் ஆசிரியத் தொழிலையே செய்தோராகச் சிலர் குறிக்கப்படுகின்றனர். புலவர்களை எல்லாம் 'நல்லாசிரியன்மார்' என்ற மரபாகக் குறிப்பர். தமக்கென வாழாது, தனக்கெனப் பொருள் சேர்க்காது, ஆசிரியர்க்கு எனக் கூறப்பட்ட குண நலன்கள் பல பெற்று அத்துடன் அரசரையும் இடித் துரைக்கும் அஞ்சாமை பெற்ற புலவர் கூட்டத்தை 'சமூகக் கல்வியாளர்' என்ற ழைத்தல் பொருந்துவதன்றோ? கல்வியின் நோக்கம் சமூக நலன், குல நலன், அறிவுறுத்தல், நாகரீக வாழ்வு எனக் குறிக்கப்படும்போது சமூக நலனுக் கெனத் தம்மையும், ஒழுக்கத் துறந்து அறிவு கொளுத்தி அறியாமை நீக்கி நாட்டை நல்வழிப்படுத்தி சங்க காலத்தைப் பொற்காலமாக்கிய நல்லிசைப் புலவரை 'சமூகக் கல்வியாளர்' என்றே அழைக்க இயலும்.

'புலவர்-கல்வியாளர்' என்ற தலைப்பில் கட்டுரை யாத்த தனி நாயக அடிகளாரும் இக்கருத்து உடையார் என்பது இவ்வாய்வில் தொடர்புடை இலக்கியத்தில் கூறப்பட்டது.

இனி ஆசிரியத் தொழில் செய்தோராகக் குறிக்கப்படும் புலவர் சிலர் ஆசிரியத் தொழில் செய்தமையைத் தமிழறிஞரும் ஒப்புக் கொள்கின்றனர்.

<u>புலவரும், ஆசிரியரும்:</u>

புலவர் ஆசிரியத் தொழில் செய்தனர் என்றும் தமிழறிஞர் கூற்றுக்களுள் சான்றாக உ.வே. சாமிநாதய்யர் 'குலபதிநக்கண்ணனார்' பற்றிக் கூறும்போது

"கடங்கில் குலபதி நக்கண்ணனார் – கடங்கில் என்பது ஓர் ஊர்; இவ்வூரிற் புலவர் பலர் சங்க காலத்தே இருந்தனர்; ஆயிரம் மாணவர்களை

ஆதரித்துக் கல்வி புகட்டுவோர் குலபதியாவர்; இப்பட்டத்தை உடையராதல் பற்றி இவர் சிறந்த ஆசிரியர் என்று தெரிகிறது"[178] என்ற கூற்றால்,

குலபதி நக்கீரனார் ஓர் ஆசிரியரே

குலபதி என்பது ஆயிரம் மாணாக்கர்க்குக் கற்பிக்கும் ஆசிரியரின் பட்டப் பெயராம் என்பது விளங்கும். மேலும் அவரே

"கணக்காயன் தத்தனும் ஆசிரியன் பெருங்கண்ணனும் ஆசிரியத் தொழிலுடையார்"[179] என்று குறிப்பிடுவதால் கணக்காயன் என்ற பெயரும், ஆசிரியத் தொழிலுடையாரைச் சுட்டும் என உரைலாம்.

தெ. பொ. மீனாட்சிசுந்தரம்,

" நெடுங் கணக்கினைக் ( Alphabet ) கற்பிக்கும் கணக்காயர்கள், இளைஞர்கட்குக் கற்பிக்கும் இளம்பாலாசிரியர்கள், குருகுலம் நடத்திய குலபதிகள், காளையர்களுக்குக் கற்பிக்கும் ஆசிரியர்கள் என்ற படிப்படியாக அமைந்த ஆசிரியர் அமைப்புக்களையும் அங்கு காண்கிறோம்"[180] என்று கூறுவதால் கணக்காயர்களும் இளம்பாலாசிரியர்களும் குரு குலத்தை நடத்திய குலபதிகளும் இதுபோன்ற நிலை அமைந்த ஆசிரியர்களும், சங்க காலத்தில் விளங்கினரென உரைலாம்.

ஔவை துரைசாமி பிள்ளை என்பார், வேளாசான் குறித்து

"மதுரையில் பார்ப்பனரிடையே வேள்வித் தொழிற்கு ஆசானாக இருந்ததனால் மதுரை வேளாசான் எனப்படுவாராயினர்"[181] என்பதால் வேளாசான் எனப்படுவார் வேள்வி ஆசிரியரே என்பது போதரும்.

மேலும் துரை அரங்கசாமி என்பார்

"பாலாசிரியர், இளம்பாலாசிரியர், ஆசிரியர், பேராசிரியர்,

குலபதி என்ற பல படிநிலைகளில் ஆசிரியர் பலர் சங்கத்தே விளங்கினர்"[182] என்பதாலும், அவரே

"கணக்காயனார் என்பது கணிதப் பேராசிரியரைக் குறித்திருக்கலாம்"[183] என்பதாலும் பல படிநிலைகளில் ஆசிரியர் விளங்கினர்என்றும் கணக்காயனார் கணிதப் பேராசிரியராக விளங்கி இருக்கலாம் என்றும் உரைலாம்.

<u>படிநிலைகளும், துறைகளும்:</u>

ஆசிரியர்களில் பல படிநிலைகள் இருந்தன என்பதைச் சங்கப் பாடல்களால் நன்கு அறியலாம். இளம்பாலாசிரியர், ஆசிரியர், கணக்காயர் ஆசான் போன்ற பல படிநிலைகளில் ஆசிரியர் அமைந்திருந்தனர்.

ஆசிரியன் பெருங்கண்ணன்

மதுரை ஆசிரியர் கோடங்கொற்றனார்

மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங் கொற்றனார்

மதுரைப் பாலாசிரியன் நப்பாலனார்

மதுரைப் பாலாசிரியன் நற்குமனார்

மதுரைக் கணக்காயனார்

மதுரை வேளாசான்

கிடங்கில் குலபதி நக்கண்ணனார்

முக்கல் ஆசான் நல் வெள்ளையார்

மேற்கண்ட படிநிலையிலிருந்த பல புலவர்கள் ஆசிரியர்களாக அமர்ந்து மக்கள் சமுதாயத்திற்குப் பெருந்தொண்டாற்றினர் என உரைலாம்.

சிலப்பதிகாரத்தில் இசையாசிரியருடைய தன்மைகள் குழலாசிரியன் தன்மைகள், யாழ் ஆசிரியன் தன்மைகள், தண்ணுமை ஆசிரியன் தன்மைகள் கவிஞன் தன்மைகள், அறிவிக்கப்படுகின்றன. மணிமேகலையில் அறவண அடிகள் நல்லாசிரியராக அமர்ந்து சமய ஆசிரியராக விளங்கினமை தெளிவாகும்.

பல்கேள்வித்துறை போகிய
தொல்லாணை நல்லாசிரியர் [184]

பல்விதமான கேள்வியறிவுடன் இயற்கையறிவும் வாய்க்கப் பெற்ற, கற்றதுல் துறையில் பெரும்புகழ் பெற்ற தொல்லாணை நல்லாசிரியர் பலர் சங்கத்து வீற்றிருந்தனர் என்பது பாடலின் கருத்தாம். மொழிக் கருவியைப் பயன்படுத்தி புலவர்தாம் கண்டும் கேட்டும் ஆய்ந்தும் அறிந்தும் உணர்ந்தும் ஓதிய துறைகள் பல சங்கத்திருந்தன எனலாம்.

சான்றாக நெடும்பல்லியத்தனார் தான் பாடிய பாட்டில் நல் யாழ், ஆகுளி பதலையொடு சுருக்கி எனப்பாடுதலால் இசைக்கருவிகளின் இயல்பறிந்தவர் என்பது புலனும். நல்யாழ் என்றமையால் இசைக் கருவிகளின் குணம் குற்ற மெல்லாம் நன்கறிந்தவரென்பதும் அக்கருவிகளான் அமைக்கப்படும் இசையறிவும் மிக்குத்துறை போகியவர் என்பதும் விளங்கும். ஆகவே, நெடும்பல்லியத்தனார் இசைப் புலவராக வீற்றிருந்து இசையறிவு வழங்கினார் என்பது தெளிவு.

இதே போன்று மருத்துவன் தாமோதரனார் மருத்துவத்தையும் மதுரைக் கணக்காயனார் கணிதத்தையும் கணியன் பூங்குன்றனார் சோதிடக் கலையையும், மதுரைக் கூத்தனார் கூத்துத் துறையையும் வளர்த்தனர் என்றல் அடைமொழிகளான் புலனும். இத்தகைய புலவர் இயற்றிய பல்கல்வித்துறைப் பாடங்கள் கால வெள்ளத்தால் மறைந்தன போலும்.

சங்க காலத்தில் ஆசிரியர், ஆசான், குலபதி போன்ற அடைமொழி களோடு வழங்கப்பட்ட புலவர்கள் யாவரும் 'நல்லாசிரியர்களே' என்பதும் ஏனைய புலவர்களில் பலர் 'சமூகக்கல்வியாளர்' என்பதும் தெளிவாம். சமூகக் கல்வியாளர்களாகிய புலவர்கள் ஆசிரியர்க்குக் குறிக்கப்படும் நண்பர் தத்துவ ஞானி வழிகாட்டி ( Friend, Philosopher, and Guide )

என்ற நிலையில் அரசர்க்கும் மக்களுக்கும் நண்பராயும் புலம் மிக்கமையால் தத்துவ ஞானிகளாயும் நாட்டு நலனுக்கு வழி காட்டிகளாயும் அமைந்தனர் என்பதைச் சங்கச்செய்யுட்களால் நன்கு அறியலாம். இனி இத்தகைய ஆசிரியர்க்கு அமைய வேண்டிய தகுதிகள் பற்றி அறிவோம்.

<u>தகுதி:</u>

மலைநிலம் பூவே துலாக்கோல் என்று இன்னர்
உலகில் உணர்வுடையார் [185]

மலை போன்றும், நிலம் போன்றும், பூப்போன்றும் துலாக்கோல் போன்றும் ஆசிரியர் விளங்குதல் வேண்டும் என்பது பொருள்.

மலையே,

அளக்கலாகாப் பெருமையும் அருமையும்
அருங்கலம் உடைமையும் ஏறற்கருமையும் [186]

என்ற பகுதியால் ஆசிரியராவார் பிறரால் அளந்தறிய முடியாத பெருமையுடைய ராதல் வேண்டும் என்பது பெறப்படும். இப்பெருமை கல்வியால் விளைந்ததாக இருத்தல் வேண்டும் என்பது குறிப்பாம். 'அருமையும்' என்ற சொற்றொடரால் எந்தப் பொருள் எவ்வளவு உள்ளதென அறிதற்கு இயலாத அருமையுடையது மலையெனவும், அதேபோல ஆசிரியர் நிறையக் கற்று பொருட்செறிவு உடைய ராதல் வேண்டும் என்பது குறிப்பு. 'அருங்கலமுடைமையும்' என்பதால் அறிவு, ஒழுக்கம் சான்றாண்மை முதலிய சிறந்த குணங்களை அணிகலன்கள் போலப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது குறிப்பு. ஆகவே மலை போன்ற தோற்றப் பொலிவும் பொருள் உடைமையும் அருமையும் ஆசிரியர்க்கு அமைய வேண்டிய தகுதிகளாம் என உணரலாம்.

ஆசிரியர் நிலம் போலத் தன்மைகளை உடையராதல் வேண்டும் என்பதை

நிலத்தின் இயல்பே நிலைக்குங்காலை
பொறை உடைமையொடு செய்பாங் கமைந்தபின்
விளைதல் வன்மையும் போய்ச்சார்ந் தோரை
இடுதலும் எடுத்தலும் இன்னன மாக
இயையக் கூறுப இயல்புணர்ந் தோரே [187]

என்பதால் அறியலாம்.

நிலம்போன்ற பொறையுடைமை ஆசிரியர்க்கு இன்றியமையாத குணமாம்.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை [188]

என்பதற்கேற்பத் தம்மை இகழ்கின்றவர்களையும் ஏனையோர்களையும் பொறுத்துக் கொள்ளும் நிலத்தினைப் போல - தாங்கிக் கொள்ளும் நிலம் போல - இகழ்வுரைகளைப் பொறுமையாக ஏற்றுத் திருத்த வேண்டிய முறையில் திருத்துதற்கு ஏதுவாக அமைதல் ஆசிரியர் தகுதியாம். 'விளைதல் வன்மையும்' என்பதால் ஆசிரியருடைய ஆசிரியர் கூறிச்சென்ற கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு மேலும் பல கருத்துக்களை விளைக்கும் - உண்டாக்கும் - வன்மை உடையவராக விளங்குதல் வேண்டும் என்பது குறிப்பு.

'இடுதலும் எடுத்தலும்' என்றமையானே மாணக்கரை உரிய நிலைக்குக் கொண்டு சென்று மேலும் அவர் ஆயும்படி இட்டு வைத்தலும், அவர் உள்ளத்துள்ள ஆற்றலை வெளிக்கொணர்ந்து கல்வியைப் பெருக்குதலும் ஆசிரியர் தகு நிலைகள் என உரைலாம்.

புவின தியல்பே பொருந்தக் கூறின்
மங்கல மாதலும் நாற்ற முடைமையும்

காலத்தின் மலர்தலும் வண்டிற்கு ஞெகிழ்தலும்
கண்டோருவத்தலும் விழையப் படுதலும்
உவமத்தியல்பின் உரைக் காட்டுப[189]

என்ற பாடலாலும்,

இரும்த்தம் நாறு மலரனைய ரற்றோ
உரை விரித்துரையா தார்[190]

என்ற பாடலாலும் அறியலாம்.

'மங்கலமாதல்' என்பதால் ஆசிரியர் மலர்ந்த முகமும், அகமும் உடையவராக விளங்குதல் வேண்டும் என்பது பெறப்படும். 'நாற்றமுடைமையும்' என்பதால் கல்வியால் புகழ் ஒளி பரப்புகின்றவராக அமைதல் வேண்டும் என்பது பெறப்படும். 'காலத்தின் மலர்தல்' என்பதால் உரிய காலத்தில் மலர்ச்சியான தோற்றமளித்தல் வேண்டும் என்பது பெறப்படும். 'வண்டிற்கு ஞெகிழ்தல்' என்பதால் மாணக்கர்கட்கு நெகிழ்ந்து கொடுத்து கற்பித்தல் வேண்டும் என்பது பெறப்படும். 'கண்டோர் உவத்தல்' என்பதால் ஆசிரியரைக் கண்டோரெல்லாம் காணப் பெற்றேமே என்று மனம் உவக்கும்படி வாழ்தல் வேண்டும் என்பது பெறப்படும். 'விழையப்படுதல்' என்பதால் பகைமை அற்று யாவரும் விரும்பும்படி பொறுமைப் பண்புகளுடன் ஆசிரியர் விளங்குதல் வேண்டும் என்பது பெறப்படும்.

துலக்கோ லியல்பே தூக்குங் காலை
மிகினும் குறையினும் நில்லா தகலமும்
ஐயம் தீர்த்தலும் நடுவு நிலைமை யோடு
எய்தக் கூறப இயல் புணர்ந் தோரே[191]

என்பதால் துலாக்கோல் போன்ற நடுநிலைமை உள்ளமும்நடத்தையும் உடையராக ஆசிரியர் விளங்குதல் வேண்டும் என்பதாம்.

ஆகவே மலை போன்ற பொருளறிவும் தோற்றமும், நிலம் போலப் பொறையும் விளக்கும் வன்மையும், பூவினைப் போல மலர்தலும் கற்றதை மாணாக்கர்க்குக் கற்பித்தலும் நடு நிலைமையும் ஆசிரியர்க்கு அமைய வேண்டிய தகுதிகள் என அறியலாம்.

அட்டவணை-5 : ஆசிரியர் தகுதிகள் :

| சங்க காலம் | 1938 கல்விக்குழு அறிக்கை |
|---|---|
| 1. அறிவுரு ஆராய்ந்த கல்வி | 1. தனி மனிதனை மதிக்கும் தன்மை |
| 2. மெய்ப்பொருள் காணல் | 2. குழு மனப்பான்மை |
| 3. மேல்மேல் கற்கும் ஆர்வம் | 3. பகுத்தறிவு பெறுதல் |
| 4. பயன் விளக்கும் தன்மை | 4. ஒற்றுமைத்திறன் |
| 5. மலர்ந்த முகமும் அகமும் | 5. ஆசிரியரிடத்தில் ஆர்வம் |
| 6. நெகிழ்தல் தன்மை | 6. குழந்தையைப் பேணல் |
| 7. நிலம் போன்ற பொறையும் நலனும் | 7. சமூகப் பழக்கம் |
| 8. நடு நிலைமை | 8. குடி மகனுதல் |
| 9. யாவராலும் விரும்பப்படும் தன்மை | 9. மதிப்பிடல் திறன் |
| 10. தெய்வ நம்பிக்கை | 10. உணர்தல் வன்மை |

<u>மாணாக்கர்:</u>

வாழ்வுக்கு வேண்டிய கல்வி, அறிவு, ஒழுக்கம், அன்பு, அருள், பண்பாடு முதலியவற்றை வளர்த்துக் கொள்ளும் முயற்சியில் ஈடுபடுவோரே மாணாக்கராவர். சங்க காலத்திய மாணாக்கர் தந்தையிடமிருந்தும், தாயிடமிருந்தும் சுற்றத்தாரிடமிருந்தும், சமூகத்திடமிருந்தும் இத்தகு பண்புகளைப் பெற்றனர். இளமை முதல் இறக்கும் வரை கல்வி கற்கக் கூடிய வாய்ப்பு அன்றிருந்தது. ஆசிரியப் படிநிலைகளை வைத்துக் கொண்டு ஆராய்ந்து பார்த்தால் இளஞ்சிறுர் முதல் நல்ல பருவம் எய்தும் வரை மாணாக்கர் கற்றனரென அறியலாம். மாணாக்கர்க்கு இரு துணையே இணையற்ற துணையாகும். ஒன்று பெற்றோருடன் கூடிய சமூகம், மற்றொன்று ஆசிரியர் சமூகம். சான்றோனாக்குதல் கடமை எனக் கொள்கை படைத்த தந்தையும் சான்றோன் எனக் கேட்ட போது ஈன்ற பொழுதைக் காட்டிலும் மிக உவக்கும் தாயும், இவரோடொத்த சமூகமும் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கங்களால் நிறைந்த நல்லிசைப் புலவரும் இணையற்ற இரு துணையாக நின்று மாணாக்கர் சமுதாயத்தைத் தம்மினும் தம் மக்கள் அறிவுடையவராக விளங்க வேண்டும் என்ற கொள்கையால் உருவாக்கினமையின், மாணாக்கர் சமுதாயம் மகிழ்ச்சியோடு விளங்கியது.

மாணாக்கர் இயல்புகளை அன்னத்தோடும், நன்னிறத்தோடும், கிளியோடும், நெய்யரியோடும், யானையோடும் ஒப்பிட்டுக் கூறுவர்.[192]

பாலும் நீரும் பாற்படப் பிரித்தல்
அன்னத்தியல்பென அறிந்தனர் கொளலே [193]

என்ற பழம் பாடலால் அன்னப்பறவை பாலையும், நீரையும் கலந்து காணினும், பாலை மட்டும் ஏற்றுக்கொண்டு நீரை விட்டு விடும் இயல்பு வாய்ந்ததாம், என அறியலாம். எவ்வாறு அன்னம் பாலை மட்டும் ஏற்றுக் கொள்கிறதோ அதே போல சில போது சில ஆசிரியரிடம் குறைகள் காணப்பட்டால் அவற்றை விட்டு

விட்டு குணங்களையே கொள்ள வேண்டியது மாணக்கர் இயல்பாம்.

விளந்தவா விளத்தல் விளிமிளதியல்பே. 194

என்ற பாடலால் ஆசிரியர் சொல்லிக் கொடுத்ததை மட்டும் அப்படியே ஏற்றுக் கொள்ளும்இயல்பும், அதையே திருப்பிச் சொல்லும் இயல்பும் கொண்ட மாணக்கர் உண்டு எனவும் நன்மை தீமை ஆராய்தலும் புதியன புகுத்தலும் இன்றி கேட்டதைக் கேட்டபடியே வைத்திருக்கும் மாணக்கர் இயல்பு பெறப்படும்.

எந்நிறந் தோய்தற்கும் ஏற்பதாதல்
நன்னிறத் தியல்பென நாடினர் கொளலே 195

என்பதால் எந்த நிறத்தை ஊட்டுதற்கும் ஏற்ற நிலை பெற்றிருக்க வேண்டுவது நூலின் இயல்பு, இல்லையெனில் அவ்வாறு ஏற்றதாகி நிறம் தோய்ப்பர் அதே போல எக்கருத்தையும் ஏற்றுக் கொள்ளும் இயல்பு வாய்ந்த மாணக்கரும் உண்டு.

நல்லவை அகத்திட்டு நவை புறத்திடுவது
நெய்யரி மானென நினைதல் வேண்டும் 196

என்பதால் நல்லவற்றை விட்டு விட்டுக் குற்றமே கடைப்பிடிக்கும் மாணக்கர் இயல்பும் கூறப்பட்டது. பன்னாடை எனப்பட்டு நெய்யரி நல்ல நெய்யை விட்டு விட்டுக் கசட்டினைக் கைக்கொள்ளுதல் போல் மாணக்கரும் உண்டு என உரைலாம்.

மாணக்கர் தகுதிகள்:

பொருளொடு சென்று வழிபடல் முடியான்
குலத்தொடு பழகி குறிப்பின் வழி நின்று
பருகுவன் அன்ன ஆர்வத்த னகி

சித்திரப் பாவையின் அத்தக அடங்கி
செவிவா யாக நெஞ்சுகள னாக
கேட்டவை கேட்டவை வல்லனாகி [197]

என்ற பகுதியால் மாணக்கர் குறிப்பிட்ட காலத்திற் சென்று கற்கும் தகுதி உடையராதல் வேண்டும்; ஆசிரியரை வழி பட்டுக் கற்கும் தகுதி வேண்டும்; சினம் கொள்ளல் ஆகாது; கல்வியில் பருகுவது போன்ற ஆர்வமுடையராதல் வேண்டும்; சித்திரப்பாவை போன்ற அடக்கமுடையராதல் வேண்டும்; கேட்ட வற்றை மீண்டும் மீண்டும் நினைந்து பார்த்து வல்லராகும் இயல்பு வேண்டும் என்று உணர்த்தப் படுகிறது. மேலும்,

கற்கும் தகுதியில்லாதவராக எண் வகையினர் குறிக்கப்படுகின்றனர்.

1) மிகு சோம்பலினவனும் 2) வேண்டாத மானம் உடையவனும் 3) மறதி உடையவனும் 4) பேராசையுடையவனும் 5) கள்வனும் 6) தீராத நோயாளியும் 7) நிறைந்த சினமுடையவனும் 8) தடுமாறுகின்ற உள்ளமுடைய வனும் நெடு நூல் கற்கத் தகுதியில்லாதவர் எனத் தொல்காப்பியப் பாயிரம் கூறுகிறது. [198]

நெடுநூலைக் கற்கலாதார் என்றமையால் தகுதிக் குறைவான மாணக் கர்க்குக் குறு நூல்களிருந்திருத்தல் கூடும். நெடுநூலை, முழு நூல்களாகவே கற்றனர்.

மாணக்கர் அறிவுடையவராக விளங்க வேண்டும் என்பதும், பழியின் நீங்கி வாழ்பவராகவும் மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் நன்மை செய்பவ ராயும் தாய் தந்தையர்க்கு இன்பத்தையும் புகழையும் தேடித் தருபவராயும் அமைய வேண்டுமென்பதும் குறள் கூறும் செய்திகளாகும். [199]

இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்றி எய்துவர்
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்

என்பதால் இவ்வுலகத்துப் புகழ் பெற்று வாழ்தலும் மறுமை உலகத்தைக் குற்றமின்றி அடைதலும் பகைவரும் விரும்புகின்ற அளவு பெருமை பெறலும் குற்றமற்ற நற்காட்சியுடைய மக்களாகிய மாணுக்கர் பொறுப்பாகும் என உய்த்துணரலாம்.

மணிமேகலையில் மணிமேகலை அறவண அடிகளிடம் சமயக் கல்வி பெற்று வாது செய்து அரசியை வென்ற செய்தி கூறப்படுகிறது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு கணிகையர் குலத்திலே தோன்றிய மணிமேகலை துறவு நெறியில் நின்று புத்த மதத்தைத் தழுவி அறவண அடிகளிடம் பாடம் கேட்டு அரசியையும் கூட மாற்றுமளவு வாது புரிந்து வென்ற செய்தி வியத்தற்குரிய மாணுக்கியின் செய்தியாகும்.

அட்டவணை-6: மாணாக்கர் தகுதிகள்.

| சங்க காலம் | இன்றைய நிலையில் * |
|---|---|
| 1. பொழுதொடு செல்லல் | |
| 2. வழிபடல் | |
| 3. சினம் கொள்ளாமை | |
| 4. ஆசிரியர் மீது அகலாத அன்பு | |
| 5. ஆசிரியரின் குறிப்பறிதல் | |
| 6. பருகுவது போன்ற கல்வி ஆர்வம் | |
| 7. செவி வாயாக நெஞ்சு களனாகக் கற்றல் | |
| 8. பாடம் போற்றல் | |
| 9. கேட்டவை நினைத்தல் | |
| 10. ஏக்கற்றுக் கற்றல் | |
| 11. உற்றுழி உதவி, உறுபொருள் கொடுத்துக் கற்றல் | |

* 'மாணாக்கர் தகுதி' அட்டவணையில் இன்றைய நிலையில் என்ற தலைப்பின் கீழ் குறிக்கத்தக்க செய்தி இல்லை.

பெண் கல்வி :

சங்க காலத்தில் கூறப்படும் 476 புலவர்களில் 30 பெண்பாற் புலவர்கள் கல்வி சிறந்தோராக விளங்கினர் என்பது வெளிப்படையாகும்.

ஔவையார், ஆதிமந்தி, ஒக்கூர் மாசாத்தியார், காக்கை பாடினி நச்செள்ளையார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, பாரி மகளிர், வெள்ளி வீதியார் போன்ற புலவர்கள் குறிப்பிடப்படுகின்றனர். இவர் பல்வேறு தொழிலையும் செய்ததாக அறிகிறோம். இப்புலவரும் ஒரு காலத்து மாணாக்கி யராக இருந்து கல்வி கற்றவராக விளங்கி இருத்தல் வேண்டும். ஆகவே அவர்க்குக் கற்பிக்கும் ஆசிரியர்களும் அமைந்திருத்தல் வேண்டும். இவருள் காக்கை பாடினியார் இலக்கண நூல் செய்தார் எனின் சங்க கால பெண் மக்களின் கல்வி நிலையை நன்கு உணர இயலும். ஆதலின் பெண்பாற் கல்வியும் ஆசிரியர்களும் அமைந்து கல்வி சிறந்த நாடாகத் தமிழ்நாடு விளங்கியதென்பது வெள்ளிடை மலையாம்.

தேர்வு முறைகள் :

தற்காலக்கல்வித் திட்டத்தில் மதிப்பிடலும் தேர்வுமே ஆட்சி செய்கின்றன. ஆயினும் சில கல்வியறிஞர் தங்கள் திட்டத்தில் தேர்வோ வகுப்பு மாற்றமோ வேண்டா எனவும் கூறுகின்றனர். தமிழர் தம் கல்வி முறை வாழ்வியற் கல்வி முறையாதலால் மாணாக்கருடைய திறன்களையும், நடத்தைகளையும், ஒழுக்கத்தையும் ஆசிரியரும் பெற்றோரும் கூடித் தீர்மானிக்கும் தகுதி உடையவராய் விளங்கினர். தொடர்புடைய அவரே அவ்வித முடிவு எடுக்கும் ஆற்றலுடையவர். தமிழர் கல்வி வரலாற்றில் தற்காலத் தேர்வு முறை போன்ற அமைப்பு காணப்படவில்லை. தமிழர் கல்வி வாழ்வியல் கல்வியாதலால் தேர்வு முறை தேவையற்றிருக்கலாம். இது மேலாய்வுக்குரியது.

## 6-5: ஒழுங்கு:

கல்வித் துறையில் காணப்படுகின்ற ஒழுங்கு என்பது மாணக்கர் கல்வி கற்க வேண்டிய முறைகளிலும், நடத்தைகளிலும் காணப்படுகின்ற புற ஒழுங்குச் செயல்களாகிய காலம் தவறாமை, வருகை, பயிற்சி முதலியன அடியாகக் கொண்ட பழக்க வழக்கங்களாம். இவ்வொழுங்கு மாணக்கர் எதிர்கால வாழ்வில் ஒழுக்கத்தை அளிக்கும் என்பது நோக்கம். ஒழுக்கத்தின் முதற்படி ஒழுங்கெனக் கூறலாம்.

ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலில் சிறந்தன்று ஒழுக்கமுடைமை [201]

### கல்வியில் ஒழுங்கு:

குறித்த காலத்திற் செல்லல்; ஆசிரியரை மதித்தல், சினம் கொள்ளாதிருத்தல், ஆசிரியரை அணுகி இருத்தல், அன்புடைமை, ஆசிரியர் உளக்குறிப் புணர் ஆற்றல், ஆசிரியர் சொல்லை மதித்தல், கல்வியில் பருகுவது போன்ற ஆர்வம் உடைமை, சித்திரப் பாவை போல் கற்பிக்கப்படும்போது ஆசிரியரையே நோக்கி இருத்தல், செவி வாயாக அமைந்த மனத்தைச் கொள்கலமாக அமைத்துக் கொள்ளல், நெடு நூலைப்போற்றல், நினைந்து பார்த்தல், ஐயம் நிகழின் ஆசிரியரை அணுகித் தெளிதல், தன்னையொத்த மாணக்கருடன் பல கால் பயிலுதல், அறியாதோர் கேட்கும் வினாக்கட்குப் பதில் அளித்தல் முதலியவற்றை ஒழுங்குகளாகக் கடைப்பிடித்தனர். கசடறக் கற்று கற்றபடி வாழ வழி காட்டும் முறைகளே மேற்கொள்ளப் பட்டன.

## 6-6: நூல்:

கல்வி கற்பிப்பதற்கும் கற்பதற்கும் பயன்படுகின்ற கருவிகளுள் தலையாயது நூல்தான். தொன்று தொட்டு இந்நாள் வரை நூலின்

ஆட்சி பெருகியும் நீடித்தும் வருகிறது. மாந்தர் தம் மனக் கோட்டம் தீர்க்க உதவும் சீரிய கருவியாகிய நூலே அறிவையும், ஒழுக்கத்தையும் வளர்த்து சான்றோராக வாழச் செய்ய உதவியுள்ளது என்பதைத் தமிழர் வாயிலாக அறிய முடியும். அந்நூல் என்பது யாது?

நூல் எனப்படுவது நவலுங்காலை
முதலும் முடிவும் மாறு கோளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உள்நின் றியன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே [202]

நூல் என்று சொல்லப்படுவது முதலும் அதற்கேற்ற முடிவும் மாறுபடாது தொகை, வகை, முதலிய நிலைகளில் நற்பொருளை உள்ளடக்கி உரை பல செய்தற்கேற்ற உள்ளீடு உடையதாய் விளங்குதலே என்பர் தொல்காப்பியர். இவ்விதி செய்யுள் நூலுக்கு என்று கூறப்படினும் எல்லா நூல்களுக்கும் பொருந்துவதாம். தொல்காப்பியர் காலத்து செய்யுளே மிகுதியாதலின் இவ்விதி கூறினர்.

<u>வகை:</u>

அந்நூல் இரு நிலைகளில் இயன்றது, முதல் நூல், வழி நூல், என்பன அவை. வினையின் நீங்கி விளங்கிய அறிவு மிக்க முனைவனால் செய்யப் பட்டது முதல் நூல்; அதன் வழியை ஒற்றிச் செய்வது வழி நூல்; வழி நூல் தொகுத்தல், விரித்தல், தொகை விரி, மொழி பெயர்ப்பு, என நான்கு வகையில் இயங்கும்.

<u>இயல்பு:</u>

கூறியது கூறல், மாறு கொளக் கூறல், குன்றக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில மொழிதல், மயங்கக் கூறல், இன்னா டாப்பிறுதல்,

பழித்த மொழி உடைமை, மன்கோள் இன்மை முதலிய 10 வகைக் குற்றங்கள் அற்ற, சுருங்கச் சொல்லல் முதலிய 10 அழகுகளுடன் கூடி நுதலிப் புகுதல் முதலிய 32 வகை உத்திகளுடன் இயல்வதே நன்னூல் எனக் கூறப்படுகிறது.

<u>உறுப்புக்கள்:</u>

நூலின் தொகுப்பு, பிண்டம், படலம், ஒத்து, சூத்திரம், என்ற உறுப்புகளை உடையதாய் இயங்கும். தற்கால இயல்களையும், சிறு பிரிவுகளையும் ஒக்கும்.

<u>அமைப்பு:</u>

பாட்டு, உரை, பிசி, அங்கதம், முதுசொல், மந்திரம் போன்ற அமைப்புக்களில் நடை பெற்றன. உரைநடையும் உவமை அடிப்படையாகக் கொண்ட பிசியாகிய விடுகதைப் பாட்டும் அங்கதம் எனப்படும் வசைப்பாட்டும் முது சொல் எனப்பட்ட பழமொழி வகையும் மறை மொழிகளும் கொண்ட அமைப்புடைய நூல்கள் விளங்கின.

<u>உரைநடை:</u>

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகை மொழி யானும்
உரைவகை நடையே நான்கென மொழிப 203

இப்பாட்டு இன்றைய உலகில் கூறப்படும் புதினம், தொடர்கதை, பயண இலக்கியம், கடிதக் கதை முதலிய எவற்றையும் உள்ளடக்கி நிற்கிற தெனலாம்.

அங்கதம்:

வசைக் கூற்றிலக்கியங்கள் இரு நிலைப்பட்டன. செம்பொருள் அங்கதம், பழிகரப்பங்கதம் என அமைந்தன. வசைப் புகழ்ச்சியால் அமையும் உரை நடை அன்றே அமைந்திருந்தது எண்ணுதற்குரியது.

நெடுநூல்:

'நெடு நூலைக் கற்கலாதார்' 204

என்றமையின் முழு நூல்களும் சிறு நூல்களும் அன்றே உண்டு எனலாம். உரப்புக்குறைப்பாடு போன்ற ஊழுற்றோர்க்கு அவர்க்கேற்பச் சிறு நூல்களும் நிறைவுடைய மாணக்கர்க்கு நெடு நூல்களாம் முழு நூல்களும் அமைந்திருத்தல் வேண்டும். பாடப்புத்தகம் போன்ற சிறு பிரிவுத் தொகுப்புகளின்றி முழு நூல்களாகக் கற்கும் முறையே நடைபெற்றதெனலாம்.

மருத்துவ நூல்:

மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று 205

நூலோர் என்ற குறிப்பாலே குறளின் காலத்திற்கும் முன்பிருந்தே பல மருத்துவ நூல்கள் தமிழரிடம் நிலவின எனலாம்.

கட்டட நூல்:

நீர் மிசைத் சிறையுமில்லை 206
வருவிசைப் புனலைக் கற்சிறை போல 207
நூலறி புலவர் நுண்ணிதின் கயிறிட்டு
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து 208

என்பவற்றால் பெருகி வரும் நீரோட்டத்தை அணைத்து மக்கட்கேற்ற முறையில் உதவுகின்ற கல் அணைகளும் ஏனைய அணைகளும் கட்டப்பட்டு விளங்கின. அரசர்க்குரிய அரண்மனைகள் கட்டிடக் கலை வல்லோரால் நுட்பமாகக் கணக்கிடப்பட்டுக் கட்டப்பட்டன எனலாம். இத்தகைய கட்டிடங்களைக் கட்டுதற்கேற்ற மூலப்பொருள் அறிவும், திட்டம் தீட்டலும்; மதிப்பிடலும், செயலாற்றலும் முடித்து வைத்தலும் அடியாகக் கொண்ட கட்டிட நூல்கள் பல இருந்திருத்தல் வேண்டும்.

ஓவிய நூல்:

> நாடக மகளிர்க்கு நன்களம் வகுத்த
> ஓவியச் செந்நூல் உரை நூற் கிடக்கையும் [209]

கலை வளர்க்கும் நாடக மகளிர்க்குரிய செய்திகளைக் கொண்ட ஓவிய நூல்கள் சங்க காலத்து உண்டென உரைக்கலாம்.

மடை நூல்:

> 'மடைநூற் செய்தியும்' [210]

சமையற்கலைத் தொழிலைக் கூறும் அட்டில் தொழில் நூல் பல உண்டு என உரைக்கலாம். இதே போன்று அறம் பொருள் இன்பம் வீடுரைக்கும் அற நூல்களும் பொருள் புரி நூல்களும் இருந்திருத்தல் வேண்டும்.

"எகிப்தியர், கிரேக்கர், உரோமர், அராபியர், யூதர் முதலிய இனத்தவர் பண்டைக் காலத்தில் பேபரஸ் தாளையும் விலங்குகளின் தோல்களையும் எழுது கருவியாக வழங்கி வந்த காலத்தில் தமிழ் நாட்டவர் பனை ஓலை ஏடுகளில் இரும்பினாலமைந்த எழுத்தாணிகளினால் வரைவர்"[211] என்பர் வேங்கடசாமி.

மாதவி தாழம்பூ மடலைத் தாளாகப் பயன்படுத்தியமை பற்றிச் சிலம்பு கூறுகிறது.

"தொல்காப்பியர் நூல் செய்கின்ற காலத்தே இன்றைக்கும் மேல் நாட்டினரும் அறியாத பல அரிய நூல்கள் தமிழ்நாட்டிலே தழைத்தோங்கின என்று முடிப்பதற்கு இந்நூல் இடம் கொடுக்கின்றது. முத்தமிழ் நூல்களும் யோக நூல்களும் மந்திர நூல்களும் தத்துவ நூல்களும் மருத்துவ நூல்களும் மிகுதியாக இருந்தன [212] என்பர் கா.சு. பிள்ளை.

ஆகவே செய்யுள் உரைநடை என்றமைந்த நூல்களும் முதல் வழி என வகையாக்கப்பட்டு இயன்றன. 10 குற்றமும் நீங்கி 10 அழகுகளுடன் கூடி 32 உத்திகளுடன் ஆக்கப்பட்ட நூல் அமைப்புக் கூறப்படுகிறது. கட்டிட நூல், ஓவிய நூல், மருத்துவ நூல், மடை நூல் போன்ற முப்பொருளும் நவிலும் எல்லா நூல் வகைகளும் அமைந்திருந்தன.

6-7: பெற்றோர் பங்கு:

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல் [213]
ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்டதாய் [214]
தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது [215]

தந்தை மக்கட்குச் செய்யும் நன்மை கற்றோர் அவையின் கண் அவரினும் மிக்கு இருக்குமாறு கல்வி உடையவனாக்குதல். தான் பெற்ற பொழுதை மகிழ்ச்சியினும் தன் மகனைக் கல்வி கேள்விகளால் நிறைந்தான் என்று அறிவுடையோர் சொல்லக் கேட்டதாய் மிக மகிழும்; தம் மக்கள் அறிவுடைமை பெரிய நிலத்து மன்னு நின்ற உயிர்கட்கெல்லாம் இனிதாம்.

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே [216]

இவற்றால் உலகத்து நன்மைக்கென நன்மக்களைப் பெற்றுத் தருதல் தாயின் கடமை எனவும் கல்வி கேள்வி அறிவு ஒழுக்கத்தால் சான்றோனாக்குதல் தந்தையின் கடமை என்பதும் நல்ல ஒழுக்கத்தைக் கற்பித்தல் அரசனது கடமை என்பதும் உரைப்படும்.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் பரணர்க்கு உம்பற்காட்டு வருவாயினையும் தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான் இதனால் முடியுடை மூவேந்தரும் தம் மக்களைப் புலவர் பின் அனுப்பி உடனுறையச் செய்து கல்வி கற்பித்தலைக் கடமையாகக் கொண்டனர் என்று உரைலாம்.

கவிகையர் குலத்திலே தோன்றிய மாதவி மகள் மணிமேகலையைத் தீத்தொழிற் படாது தறவு பூணச் செய்து சீரிய வாழ்வு வாழ வழி வகுத்தது வரலாற்றுச் செய்தியாகும்.

ஆகவே சங்க காலத்துப் பெற்றோர் தம்மக்களைக் கல்வி கேள்வி அறிவொழுக்கம் மிக்க சான்றோராக்கவே கருதினர். இஃது இன்றைய மேனாட்டுத் தத்துவ நோக்கில் கருத்துக் கொள்கை ( Idealism ) என்றல் பொருந்தும்.

## 6-8: கற்கும் காலம்:

இன்றைய கல்வி உலகு வரையறை செய்யப்பட்ட இடம், காலம், அமைப்பு, முதலியன பெற்றுத் திகழ்கிறது. தமிழர் கல்வி வாழ்வியலை உண்மை எனக்கொண்ட உண்மைக் கொள்கையுடையதாம். பிறப்பு முதல் இறப்பு வரை

கல்வி தொடர்ந்திருந்தது. கல்வி எழுமையும், தொடரும் என்பது தமிழர் கருத்துக் கொள்கையாம். எங்கும் எப்போதும் யாவர்க்கும் எந்த அளவும் கல்வி என்ற உயரிய போக்கு தமிழரிடையே காணப்பட்டது. ஆகவே கற்கும் காலம் வரையறை செய்யப்படாத வாழ்வியல் கல்வி முறை தமிழருடையதென்பதை,

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு [217]

என்பதால் நன்கு உணரலாம்.

ஆயினும் குறிப்பிய அளவில் கால வரையறை செய்யப்பட்ட கல்வி முறையும் பேசப்படுகிறது.

வேண்டிய கல்வியாண்டு மூன்று இறவாது [218]
வாயினும் கைவிடும் வகுத்த பக்கமொடு [219]
ஏழாண் டியற்றி ஓர்ஈரா றுண்டில்
சூழ் கழல் மன்னர்க்குக் காட்டல் வேண்டி [220]

என்பவற்றுள் வேற்று நாட்டு ஓதல் பிரிவு 3 ஆண்டு என்றும் நடனம் பயில் காலம் 7 ஆண்டு எனவும் தொடங்கும் காலம் 5ஆம் வயது என்றும் அறியக் கூடும்.

"ஒவ்வொருவரும் வாழ்நாள் முழுதும் கற்கும் நிலை வேண்டும். வாழ்நாள் முழுதும் கல்வி என்பது கல்விச் சமுதாயத்திற்கு அடிப்படையாகும். எல்லா நாட்டிலும் இத்தகு முறை பரவுதல் வேண்டும்".[221] என்ற ஐ.நா. ஆய்வுக்குழுவின் கூற்று 2000 ஆண்டுகட்கு முன்னர் தமிழரிடையே நிலவியது வியப்புக்குரியதாம்:

"கண் உள்ள வரை நூல்களைக் கற்று செவி உள்ள வரை அறிஞர்களின் சொற்களைக் கேட்டு வளர்வதுதான் உண்மைக் கல்வியாகும்"[222]

ஆகவே சங்க காலத்துத் தமிழரிடையே கல்வி கற்கும் கால வரையறை இன்று போலன்றி என்றும் கற்கும் நிலையே உண்டெனலாம். சிற்சில இடங்களில் கால வரையறை உண்டெனவும் அறிந்தோம்.

## 6-9: கல்வி நிலையங்கள்:

தமிழர் கல்வி வாழ்வியற் கல்வியாதலின் வாழ்வின் ஒவ்வோர் இடமும் கற்பிக்கும் நிலையமாகவே விளங்கியதெனலாம். தொடக்க நிலையில் வீடுகளே அமையினும் வயது முதிர்ந்த காலத்து அதற்கேற்பக் கற்பிக்கும் பள்ளிகளும் ஊர்ச்சங்கங்களும் நகர்ச்சங்கங்களும் எல்லாவற்றினும் மேலாக மதுரைத் தமிழ்ச் சங்கமும் அமைந்தன.

### வகை:

உடனுறை கல்வி நிலையங்களும் உடன் உறையாக் கல்வி நிலையங்களும் என இரு வகை உண்டு.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் பரணர்க்கு உம்பற்காட்டு வருவாயினையும் தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான் என்ற வரலாற்றுள் அரச மக்களும் ஆசிரியர் பின் சென்று ஏனையோராகிய மாணாக்கருடன் சம நிலையில் உடனுறைந்து கற்றமை தெளிவாம். வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது என்ற நற்பாவால் வெளி நாட்டுக் கல்வி கற்கச் செல்வோர் உடனுறைந்தே கற்கும் நிலை உண்டென உரைலாம்.

ஏனைய பள்ளி, சங்கம் போன்றன உடனுறையாக் கல்வி நிலையங்களாக விளங்கியிருக்கலாம்.

### இருவகைக் கல்வி:

பள்ளி, சங்கம் போன்றவற்றில் கற்ற கல்வி இன்றைய நோக்கில்

முறை சார்ந்த கல்வி எனக் கொள்ளலாம். வீடு, மன்றம், அவை, பொதியில் போன்றவற்றில் பார்த்துச் செய்தும் கேட்டுச் செய்தும், விவாதம் முதலியவற்றில் கலந்து கொண்டும் கற்கும் முறை இன்றைய நோக்கில் முறை சாராக் கல்வி எனக் கொள்ளலாம்.

ஆய்வுக் கல்வி வேண்டுவோரும், துறைக்கல்வி வேண்டுவோரும் மதுரைத் தமிழ்ச் சங்கம் சென்று கற்கும் அளவு அச் சங்கம் தலைசிறந்த கல்வி நிலையமாக விளங்கியது.

எனவே பள்ளி, ஊர்ச்சங்கம், மதுரைத் தமிழ்ச் சங்கம் போன்றன கல்வி நிலையங்களாக விளங்கின எனலாம்.

## மதுரைத் தமிழ்ச்சங்கம்:

ஊர்தொறும் விளங்கிய திண்ணைப்பள்ளிகளுக்கும், நகர்தொறும் நிலவிய சங்கங்களுக்கும் தலைமைச் சங்கமாயமைந்து கல்விப் பயிற்றிய இடம் மதுரையே.

கற்றிலனாயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை.[223]

என்ற குறளால் ஒருவன் கற்க இயலாவிடினும் கேள்வியறிவால் அறிவு பெறுக எனக் குறிப்பிட்டமை அறியலாம்.

கண்ணால் காண்பதாலும் காதால் கேட்பதாலும் அறிவு பெருகும்.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு[224]

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு[225]

என்ற குறட்பாக்கள் கற்றலும் கேட்டலும் அறிவு பெறுதற்கும் பெருகுதற்கும் கருவிகளாம் என்பதைத் தெளிவு படுத்தும்.

அவ்வாறு அறிவு பெறுகின்ற காலத்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் சிறப்பறிவும் ஏனைய துறையில் பொது அறிவும் பெறுதலே இயல்பு. பிற துறையில் பெறும் பொது அறிவு கேள்வியறிவாகவும் கண்டாய அறிவாகவும் அமையலாம்.

இவ்வாறு சிறப்பறிவு பெற்றோர் சங்கங்களிற்சென்று தம்மறிவை ஏனை யோர்க்கு வழங்கி இருத்தல் வேண்டும். பொது அறிவுடையோர் சிறப்பறிவு பெற சங்கத்தை நாடி இருத்தல் வேண்டும். ஆகவே பல்துறைப்பட்ட புலவர் சங்கத்து வீற்றிருந்து கல்வி வளர்த்தமையால்தான் பல் கேள்வித்துறை போகிய என்பது போன்ற சொற்றொடர் வழங்கி இருத்தல் வேண்டும். இவ்வாறு பல்துறைச் சிறப்பறிவு பெறுதற்குக் கருவியாக அமைந்தது சங்கமே.

புலவர் நோக்கம் மக்களின் நல வாழ்வே என்று முன்னர் அறிந்து கூறிய படியே அதையே குறிக்கோளாகக் கொண்டு 'தொல்லாணை நல்லாசி ரியர்' வேந்தனைத் தலைவராகக் கொண்டு கல்வி வளர்த்த இடமே மதுரைச் சங்கமாம்.

கல்வி வரலாற்றை உலகமெல்லாம் ஓர்ந்து பார்ப்பின் கணிதம், மருத்துவம், உழவு, நெசவு, கலைகள், ஆன்மக்கல்வி முதலிய யாவும் அறிதற்கு மொழியே கருவியாக அமைந்தமை புலனாகும். இவ்வாய்வில் கூறப்பட்ட ஏதென்ஸ், ஸ்பார்ட்டா, உரோம், வட இந்தியா ஆகியவற்றிலும் அறிவியல் கலையியல் யாவும் மொழியைக்கருவியாகக் கொண்டு கற்பிக்கப்பட்ட துறைக ளாகவே அமைந்தன என்பது தேற்றம்.

அதே போன்று தமிழ்ச் சங்கத்திலும் தமிழ் கருவியாய் அமைந்து - தமிழைக் கருவியாகக் கொண்டு - கணிதம், மருத்துவம், வானியல், கலைகள் முதலியன வளர்க்கப்பட்டிருத்தலே இயல்பாம்.

நீரின்றி உலகு அமையாதவாறு போல ஆய்வின்றிக் கல்வி அமையாது. ஆதலின் இக்கல்விக்கான ஆய்வைத் தமிழர் மேற்கொண்டிருத்தல்வேண்டும் என்பதை

அறிவுரு ஆராய்ந்த கல்வி [226]

என்பதால் உணரலாம். இவ்வாய்வை எவ்வாறு மேற்கொண்டனர்?

இயற்கையாகிய மதியுடன் காண்டல் கேட்டல் ஆகியவற்றால் பெறும் அறிவும் இணைந்து ஆய்வுக்கு முறை செய்கிறது.

ஆய்வின் தொடக்கம் சிக்கல் என்பர் இன்றைய ஆய்வாளர்.

சிக்கலின் தொடக்கம் காண்டலும், கேட்டலும். சிக்கலை நீக்கும் முறையே ஆய்வாம்.

முதுமொழி நீராப் புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர [227]

தொல்லாணை நல்லாசிரியர்
புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின் [228]

போன்றவற்றால் புலவர் பலர் தாம் தனித்தனி ஆய்ந்து அறிந்தவற்றைச் சங்கத்தில் ஒன்றுகூடிப் பகிர்ந்து கொண்டனர் என்றும் மரபினாலே வரும் சான்றோரின் அறிவுரைகளை நேராகப் பயன்படுத்தி தாம் ஆய்ந்தவற்றையும் விவாதித்துக் கண்டவற்றையும், புதியவற்றையும் சேர்த்துத் தொகுத்து ஏற்றுக் கொண்டு வாழ்வுக்குப் பயன்படுவனவற்றையே வெளியிடுதற்கு ஆய்வினை அடிப்படையாகக் கொண்டனர் என்றும் புலனாகும்.

ஆய்வின் வெளியீடான கருத்துக்களே நூல்களாக வெளிப்போந்தன.

இந்நூல்கள் வெளிப்போந்ததற்கு அரங்கேற்றமே வழியாம். புலவர் இயற்றிய நூலை மதுரைத் தமிழ்ச்சங்க அமைப்பில் கற்றறிந்த புலவர் பலர்முன் நூல் இயற்றிய புலவர் ஓதினர். அவ்வாறு ஓதுங்கால் ஏனைய புலவர்க்கு எழுகின்ற ஐயங்களையெல்லாம் நீக்கித் தெளிவு படுத்தினர். அவ்வாறு தெளிவடைந்த பிறகே ஏனைய புலவரும் வேந்தனும் சேர்ந்து அப்புலவனின் நூலினை சமூக நலனுக்கென வெளியிட்டனர். இதைத்தொல்காப்பியப் பாயிரத்தில் வரும்

நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான் மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில்-தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி 229

என்பதாலும், இறையனார் களவியல் உரையில் வரும் 'கவியரங்கேறினார்' என்று பயின்று வரும் சொற்றொடர்களாலும் தெளிவாக அறியலாம்.

இன்றைய பல்கலைக் கழக ஆய்வுக்கட்டுரைகளும் கூட கற்றோர் குழுவின் முன் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகே ஒப்புக் கொள்ளப்படுதல் ஒப்பு நோக்கத்தக்கது.

இவ்வாறு வெளியிடுதற்குப் புலவர்களின் புரவலனுன அரசனே தலைவன் ஆகி உதவி செய்தான்.

ஆதலின் மதுரைத் தமிழ்ச்சங்கம் வேந்தனைத் தலைவனகக் கொண்டு பல் கேள்வித் துறை போகிய 'தொல்லாணை நல்லாசிரியர்' பலரை ஒன்று கூட்டி 'முதுமொழி நீராப் புலன் நாஉழுவர் புதுமொழிக் கூட்டுண்டு' கண்டறிந்த ஆய்வுக் கருத்துக்களை நன்னூலாக்கிச் சமுதாயப் பயனுக்கு நல்கும் பெரும் கல்விப் பணி ஆற்றிற்று.

இன்றைய பல்கலைக் கழகங்களிலும் வேந்தரே தலைவர்; ஆய்வே நோக்கு; பல் துறைகளே அமைப்பு; பேராசிரியர்களே பொறுப்பு; வெளியீடுகளே சிறப்பு என்பன ஒப்பு நோக்கத் தக்கன.

இன்றைய பல்கலைக் கழகங்களோடு ஒப்பு நோக்கின் அன்றைய மதுரைத் தமிழ்ச்சங்கம் சிறப்புடைய பல்கலைக் கழகமே.

" தமிழ்ச் சங்கத்தை கல்விக்குழு என்ற நோக்கில் பார்ப்பதை விட பல்கலைக் கழகம் என்ற நோக்கில் பார்ப்பதே சிறப்பு"[230] என்ற மீனாட்சி சுந்தரனார் கூற்று அரணுதல் காணலாம்.

சங்கம் நிலவிய அதே காலத்தில் மேலைநாடுகளில் ரோட்ஸ் அலெக்சாந்திரியாவில் நிலவிய கல்வி உயர் அமைப்புக்களையும் வட இந்தியாவில் தட்ச சீலம், நாளந்தா ஆகிய இடங்களில் நிலவிய உயர்கல்வி அமைப்புக்களையும் வரலாற்றறிஞர் 'பல்கலைக்கழகங்கள்' என்றே குறிப்பிடுகின்றனர். எனவே சங்க காலத்து,

தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரை[231]யில்

நிலவிய தமிழ்ச் சங்கத்தையும் பல்கலைக் கழகம் எனக் கூறுதல் பொருத்தம் உடைத்தாம்.

ஆய்வின் நோக்கம் சமூக நலனே; மதுரைத் தமிழ்ச்சங்கம் பல்கலைக் கழகமே.

<u>கல்வியால் சமுதாயம் பெற்ற உயர்வு:</u>

கல்வியின் நோக்கங்கள் என்ற முற்கூறப்பட்ட அறிவு பெறுதல், ஒழுக்கம் பேணல், தொழில் செய்தல், பொருள் பெறுதல்; நாகரிக வாழ்வு

வாழுதல், நிறைந்த முழு வாழ்வு பெறுதல் இவற்றின் நிறைவாக யான் எனது என்றும் அகப் புறப் பற்றறுத்தலையே பிறர்க்குத் தந்த வாலறிவன் நற்றாள் பற்றும் ஆன்மக் கல்வி பெறுதல் என்று கூறினோம். அதற்கேற்ப இம்மையில் செம்மையான வாழ்வு வாழ்தற்கேற்ற மொழிக்கல்வி, ஆட்சியறிவு, தொழிலறிவு, கலையறிவு, ஆன்மக் கல்வி அறிவு பெற்றுத் தமிழர் சிறந்தனர். சான்றோராகுதலே தமிழரின் இம்மை நோக்கமாம். தன்னைச் சமுகத்திற்கே தந்து விடுதல் உயரிய நோக்கம். இவ்விரண்டன் ஏதுவாக வாலறிவனுடைய நற்றாள் பற்றுதல் குறிக்கோளாம். இதற்கேதுவான அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து தூண்களால் தாங்கப்பட்ட சான்றாண்மைக் கட்டிடத்தின் மேல் ஏறி வீற்றிருக்கும் உயர்நிலைச் சமுதாயம் பெற்றமைக்குத் தமிழர் தம் கல்வியே காரணம் எனலாம்.

அடிக்குறிப்புகள்:

1. Kuzhandaivel, K; 1965. A Comparative Study of the Educational Philosophy of John Dewey and Mahatma Gandhi, Madras, Unpublished Docteral Dissertation, University of Madras, P-21.

2. Castle, E.B; 1961. Ancient Education and To-day, London, The Macmillan Company, P-29.

3. Frank Deiva Pont Greaves; 1936. A Students History of Education, London, The Macmillan Company, P-29.

4. Ibid, P-30.

5. புறம் - 187

6. Patel, M.S; 1953. Educational Philosophy of Mahatma Gandhi, Ahamadabad, Navajivan Publishing Company, P-5.

7. குறள் - 423

8. குறள் - 355

9. குறள் - 391

10. Taneja, V.R; 1965. Educational Thought and Practice, New Delhi, University Pubbishers, P-45.

11. சந்தானம், எம்.எஸ்; 1969. கல்விக் கோட்பாடுகளும், தத்துவங்களும், சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், ப-135

12. Ross, S.James; 1976. Ground Work of Educational Theory, New Delhi, Oxford University Press, P-16. (2nd Edi).

13. Thomas, F.W. and Lang, B.R; Principles of Modern Education, Boston, Houghton, Miffin, P-39.

14. குறள் - 236

15. குறள் - 240

16. குறள் - 50

17. தொல் - 1038

18. குறள் - 45

19. குறள் - 49

20. குறள் - 1107

21. குறு - 40

22. குறள் - 50

23. தொல் - 1138

24. குறள் - 247

25. குறள் - 759

26. குறள் - 754

27. குறள் - 34

28. குறள் - 35

29. தொல் - 1336

30. புறம் - 186

31. குறள் - 381-390

32. சில: பதிகம்: 55

33. குறள் - 636

34. பரிமே உரை. குறள் - 636

35. குறள் - 414

36. குறள் - 356

37. குறள் - 134

38. குறள் - 391

39. தொல் - 389

40. தொல் - 315

41. குறள் - 34

42. குறள் - 391

43. குறள் - 399

44. குறள் - 140

45. குறள் - 997

46. அகம் - 66

47. குறு - 135

48. தொல் - 1038

49. புறம் - 182

50. தொல் - 1098

51. குறள் - 2

52. தொல் - 1138

53. திரு.68

54. சில: 30: 185 - 201

55. வெள்ளைவாரணன், க; 1950. சங்க காலத்தமிழ் மக்கள், சென்னை நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, ப-24

56. ௸ - ப-125

57. இலக்குவனார், சி; 1962. இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வில் சங்க காலம், புதுக்கோட்டை, வள்ளுவர் பதிப்பகம் ப-42.

58. சந்தானம், எஸ்; 1969. கல்விக் கோட்பாடுகளும், தத்துவங்களும் ப-42

59. Bhatia, K.K; Narang, C.L; 1976. Principles and Techniques of Education, Ludhiana, Parkash, Brothers, P-44.

60. தொல் - 1429

61. பட் 216-218

62. தொல் - 1597

63. சில: 23:23

64. Mahatma Gandhi, quoted by Patel, M.S; 1953. Educational Philosophy of Mahatma Gandhi, P-181.

65. குறள் - 1032

66. குறள் - 1033

67. புறம் - 18

68. சில 10: 148-150

69. நற் - 70

70. சில: 11:89

71. நற் - 38

72. குறள் - 1038

73. பெரு - 468

74. திரு - 138

75. கலி : 135

76. புறம் - 125

77. புறம் - 383

78. பெரு - 82

79. பொரு - 155

80. சில: 5: 16-17

81. மணி - 28: 53-54

82. பட் : 206-212

83. குறள் - 120

84. பட்: 216-218

85. அகம் - 149

86. நெடு 76-78

87. சில: 5:8

88. சில: 27:17

89. சில : 4:31

90. சில: 27:17

91. மதி - 6:58

92. பதி - 61

93. நெடு - 92

94. மதி - 1:61

95. தொல் - 1009

96. புறம் - 51

97. குறள் - 743

98. பரிமே - உரை - குறள் 743

99. குறள் - 950

100. குறள் - 948

101. பரிமே-உரை-குறள் 948

102. டை - 950

103. பட் - 1

104. பட் - 68

105. புறம் - 117

106. அகம் - 136

107. சில: 10: 102-103

108. சில: 5:41

109. சில: 23: 133-136

110. புறம் - 229

111. தொல் - 999

112. சில: 6: 169-170

113. பதி - 61

114. மதி - 3:130

115. மதி - 2:31

116. புறம் - 264

117. பரி - 61:2

118. மரியம் ப.சு; 1978. திருக்குறள் ஆய்வு, கோவை-அருட்கலைக் கழகம் ப-6

119. புறம் - 367

120. மணி - 16: 88-89

121. மணி - 22: 133-135

122. சில: 16: வெண்பா

123. குறள் - 355

124. குறள் - 358

125. தொல் - 1138

126. அகம் - 66

127. குறள் - 346

128. பரி - 3

129. புறம் - 50

130. குறு - 101

131. குறள் - 2

132. குறள் - 1062

133. வரதராசன், மு; 1958. 'தமிழர்' கலைக்களஞ்சியம் தொகுதி-5, சென்னை. தமிழ் வளர்ச்சிக் கழகம் ப-511.

134. மது- 496-499

135. சில: 25:116

136. சில: 26:4

137. குறள் - 632

138. குறள் - 636

139. புறம் -395

140. புறம் - 95

141. குறள் - 682

142. பெரு. 36

143. புறம் - 62

144. புறம் - 55

145. புறம் - 35

146. மணி 22: 208-209

147. குறள் - 546

148. குறள் - 550

149. குறள் - 547

150. பொரு - 188

151. பெரு - 443:444

152. மது - 489-492

153. பட். 206-207

154. புறம் - 39

155. தொல் - 1009

156. புறம் - 51

157. தொல் - பொருப்பாயிரம்-மேற்கோள்

158. குறள் - 684

159. நாகூர்

160. குறள் - 650

161. குறள் - 718

162. பரிமே.உரை.குறள் - 718

163. குறள் - 413 - 643

164. குறள் - 424

165. குறள் - 685

166. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

167. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

168. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

169. புறம் - 183

170. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

171. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

172. குறள் - 397

173. குறள் - 414

174. குறள் - 395

175. தொல் - 389

176. தொல் - 315

177. தொல் . சிறப்புப் பாயிரம்

178. சாமிநாதய்யர், உ.வே.1962. <u>குறுந்தொகை</u>(உரை)சென்னை, கபீர் அச்சுக்கூடம், முன்னுரை ப-118

179. ஷை ப-95

180. மீனாட்சி சுந்தரம், தெ.பொ. 1978, <u>தமிழா நினைத்துப்பார்</u>, மதுரை, சர்வோதய இலக்கியப்பண்ணை ப-15

181. துரைசாமி பிள்ளை, ஔவை.சு;1968, <u>புறநானூறு</u>(உரை) திருநெல்வேலி, கழகம் ப-208

182. Dorai Rangaswamy, M.A; 1954. 'Education in the Cankam Age', <u>Annals of Oriental Research</u>, Madras, University of Madras, Vol. XI. P-I-5.

183. -do- P. 1-4.

184. மது. 778-779

185. தொல். பொ.பா. மேற்கோள்

186. தொல். பொ.பா. மேற்கோள்

187. தொல். பொ.பா. மேற்கோள்

188. குறள் - 151

189. தொல். பொரு. பாயிரம். மேற்கோள்

190. குறள் - 650

191. தொல். பொரு. பாயிரம் - மேற்கோள்

192. ௸

193. ௸

194. ௸

195. ௸

196. ௸

197. ௸

198. ௸

199. ௸

200. அகம் - 66

201. முதுமொழிக்காஞ்சி - 1

202. தொல்:1422

203. தொல் - 1429

204. தொல்.பொரு.பாயிரம்.மேற்கோள்

205. குறள்-941

206. புறம் - 51

207. தொல் - 1009

208. நெடு 76-78

209. மணி - 2:31

210. மணி - 2:22

211. வேங்கடசாமி, சீனி; 1948. 'பண்டைக்காலத்து எழுது கருவிகள்' _செந்தமிழ்ச் செல்வி_ சில.23-பரல் 4. சென்னை, கழகம் ப.147.

212. பிள்ளை, கா.சு, 1955. _தொல்.எழுத்து நச்.உரை_ சென்னை, கழகம், முகவுரை - ப.21.

213. குறள் - 67

214. குறள் - 69

215. குறள் - 68

216. புறம் - 312

217. குறள் - 337

218. தொல் - 1134

219. தொல் - 987

220. சில: 3: 11-12

221. Edgar Faure (et al.); 1972. Learning To Be, Unesco, Delhi, Sterling Delhi, P-277.

222. வரதராசன், மு. 1962. கல்வி, சென்னை, பாரிநிலையம் ப-41

223. குறள் - 414

224. குறள் - 423

225. குறள் - 355

226. குறள் - 684

227. கலி-68

228. மது. 760-761

229. தொல். சிறப்புப்பாயிரம்.

230. Meenakshisundaram, T.P; 1952. The Theory of Cankam Poetry. Tamil Culture, Madras, Academy of Tamil Culture, Vol.I, No. 1. Feb. 1952. P-39.

231. சிறு - 66-67.

## இயல் – 7

## முடிவுரை

7.1. தமிழர்தம் கல்வித் தத்துவத்தை ஆய்ந்த இவ்வாய்வில் அறிந்தனவும், மேலாய்வுக்குரியனவும் இடம் பெறும்.

### 7-2: அறிந்தன:

இயல் 1ல் 'சங்க காலத் தமிழர் கல்வித் தத்துவத்தை' ஆய்தற்குரிய நாட்டல்களும் அதனால் விளைந்த கருதுகோளும் ஆய்வுக்கு அடிப்படையான நூல்களும் கூறப்பட்டன.

இயல் 2ல் 'தொடர்புடைய இலக்கியம்' ஆயப்பட்டது.

இயல் 3ல் தமிழர் தந்த ஆய்வு முறைகளும் ஏனைய ஆய்வு முறைகளும் கூறப்பட்டன.

இயல் 4ல் ஒப்புமைக்காக ஸ்பார்ட்டா, ஏதன்ஸ், உரோம், வட இந்தியக் கல்வியமைப்புக்கள் கண்டோம்.

இயல்5ல் தமிழர் கல்வியின் தத்துவப் பின்னணி ஆராயப்பட்டது.

இயல் 6ல் கல்வித்தத்துவத்தில் இடம்பெறும் நோக்கம் உள்ளீடு, கற்பித்தல் கற்றல் முறைகள், ஆசிரியர் மாணக்கர் செய்தி, ஒழுக்கம், கற்கும் காலம், ஆண் பெண் கல்வி, பெற்றோர் பங்கு, கல்வி நிலையங்கள் என வகுக்கப்பட்டு ஆயப்பட்டது.

இயல் 7ல் சங்க காலத் தமிழர் கல்வித் தத்துவத்தில் முடிவுகளாக அறிந்தனவும் மேலாய்வுக்குரியனவும் இடம் பெறுகின்றன.

தமிழக வரலாற்றில் சங்க காலம் பொற்காலம் எனச் சான்றோரால் போற்றிப் புகழப்பட்டமைக்கும் வரலாற்றாசிரியர் ஏற்றுக் கொண்டமைக்கும் ஏற்ற சான்றுகளைச் சங்க இலக்கியத்தில் பெறலாம். உயர்நாகரிகமும், பண்பாடும் பெற்றுத் தமிழர் வாழ்ந்தமைக்கு அவர்தம் ஒழுக்கமே கருவியாம். ஒழுக்கத்திற்கு அறிவும், அறிவுக்குச் சீரிய தத்துவமும் செயற்பாடும் கொண்ட கல்வியே கருவியாம்.

அகம்புறம் என்ற பொருள் நிலையில் அறம் பொருள் இன்பம் என்ற முப்பொருள் கண்டு வாழ்வாங்கு வாழ்ந்த வாலறிவன் நற்றாள் பற்றும் நிலையுணர்ந்த புகழ் எய்தி வாழும் வாழ்வினை வாழ்வியற்கல்வியால் பெற்றனர்.

அன்பொடு கூடிய இல்லறமும் அருளொடு கூடிய பொதுநலமும் தமிழர் வாழ்வில் உயரிடம் பெற்றிருந்தன.

சான்றோராக வாழ வேண்டும்; சான்றோராக்கி வாழ வேண்டும் என்ற நோக்கம் கொண்ட தமிழர் சான்றாண்மையைத் தம் குறிக்கோள் எனக்கொண்டு அதற்கேற்ற சமுதாய நெறியினைத் தொல்லாணை நல்லாசிரியப் பெரும் புலவராம் சமூகக் கல்வியாளர் காட்டிய வழி நின்றொழுகினர்.

வண்புகழ் மூவேந்தரும், எண்ணிறந்த மன்னரும் மக்கள் உள்ளத்தே ஆட்சி செய்யும் குடியாட்சித் தன்மை பெற்ற முடியாட்சியைப் பின்பற்றிச் செங்கோலோச்சினர்.

இம்மைக்கும் ஏனை மறுமைக்கும் ஏற்ற செம்மையான அறவாழ்வே அடிப்படை என்றுணர்ந்த அரசர் குடிமக்களைக் குழவியெனப் பேணிக் காத்தனர்.

அல்லவை கடிதற்கும் நல்லவை புரிதற்கும் மக்கள் தொடர்புக்கும் இடித்துரைக்கும் புலவர்களை இணைக்கும் பாலம் எனக் கொள்ளும் அளவுக்குக் கல்விக்கு மதிப்பளித்துப் போற்றினர்.

உழவு, நெசவு, வாணிகம் முதலிய தொழில்களால் உள்நாட்டு வாணிகமும் ஏனை வெளிநாட்டு வாணிகமும் பெருகிச் செல்வம் குவிந்தது. திரைகடல் ஓடியும் திரவியம் தேடினர். இதற்குக் கருவியாகப் பல மொழிகளைப் பயின்றனர்.

எனவே சமுதாயம் நல்ல அரசியலும் சீரிய பொருளாதாரமும் பெற்றுச் சிறப்பதற்கு அவர்தம் கல்வியே பெருந்துணையாயிற்று.

தமிழர்தம் வாழ்வியற்கல்வி வாழ்வு முழுதும் எல்லாப் பகுதிகளிலும் ஆட்சி செய்தது.

எண் எழுத்துப் போன்றவை வரையறை செய்யப்பட்ட முறையிலும் உழவு நெசவு மருத்துவம் குடும்பக்கலை போன்றவை நேரடிப் பயிற்சி மூலமும் அவ்வவற்றிற்குரிய களங்களிலும் கற்பிக்கப் பட்டிருத்தல் கூடும். வாழ்நாள் முழுதும் கல்வி என்பதும், வாழ்வு முழுதும் கல்வி என்பதும் தமிழர் கல்வி முறையாம்.

வரையறை செய்யப்பட்ட நூல்வழிக் கல்வியும் வரையுள் படாத கேள்வி வழியாலும் நேரடிப் பயிற்சியாலும் அமைந்த வாழ்வியற்கல்வியும் தமிழர் தம் கல்வி முறைகளாக அமைந்தன.

இவற்றை இன்றைய கல்வி நோக்கில் ஒரு வகையில் முறைசார்கல்வி எனவும், முறைசாராக் கல்வியெனவும் கருதக்கூடும்.

புலவர் வளர்த்த கல்வியை சங்கப் பெயரால் 'சங்க காலம்' பொற்காலம் எனக் கருதப்பட்டமை ஒன்றே தமிழர் கல்வி மீதும் கல்வியாளர் மீதும் கொண்ட பற்றினைப் புலப்படுத்தும்.

